# "அம்மா, பசி எடுக்குது ..."

அதற்கென்ன, சிறுவர்களுக்கு எப்பொழுதுமேதான் அதிசயமூட்டும்படி பசியெடுக்கிறது...ஒரு நாளில் எந்நேரத்திலுமே!

நெஞ்சை நெருடும் இந்த எளிமையான சொற்களை எந்த அம்மாவினுல்தான் பொருட்படுத்தாமல் இருக்க முடியும்?

இதற்கு நீங்கள் உடனே தயாராகும்படி மேகி முழுமையான உணவுவகையில் 5 களிப்பூட்டும் சுவைகளை அளிக்கிறது—சிக்கன், மஸாலா, கேப்ஸிகா, ஸலான்யா மற்றும் ஸ்வீட்-ஸவர்.

பலவகை சுவைகளை அளிக்கும் மேகியை சிறுவர்கள் என்றும் மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள். அவர்களுக்கு இந்த புதுப்புது உணவுவகைகளை தயாரித்து இன்புறுங்கள்



### சீஸ் அண்ட கேப்ஸிகம்

**வேண்டிய பொருள்கள்**

1 பேக் 2-மினிட் நூடுல்ஸ் கேப்ஸிகா டேஸ்ட் மேக்கருடன்
1 சிறிய குடமிளகாய்
1 நறுக்கிய வெங்காயம்
1 பெரிய கரண்டி எண்ணெய்
1½ கோப்பை (200 மிலி) தண்ணீர்
1 கட்டி (30 கிராம்) சீஸ், சீவல்

**பக்குவ முறை**

சீவிய வெங்காயத்தையும் குடமிளகாயையும் எண்ணெயில் லேசாக வதக்கவும். அதே வாணலியில் நீரைக் கொதிக்க வைத்து, டேஸ்ட் மேக்கரையும் மேகி-2-மினிட் நூடுல்ஸையும் சேர்க்கவும். 2 நிமிடங்களுக்கு கொதிக்க வைக்கவும். சீவிய சீஸை கலக்கவும் மெல்லியதாக சீவிய காப்ஸிகம் வளையங்களைக்கொண்டு அலங்கரித்து பரிமாறவும்.

**இலவசமாக!**

மேகி சமையல் குறிப்பு கைப்புத்தகம்
புத்தகம் பெற இந்த விலாசத்திற்கு எழுதவும்:
போஸ்ட் பாக்ஸ் எண்: 3855
புது தில்லி.







**விரைவாய் சமைத்திட! சுவையாய் சாப்பிட!**

FSL-8540TAM

# போட்டி! போட்டி! போட்டி!



மங்கையர்மலர் வாசகிகளுக்கு ஓர் மகிழ்ச்சியான செய்தி!

எரிபொருள் விநியோகிப்பாளர் சங்கம். எரிபொருள் பயன்படுத்துவோர் சங்கம் இரண்டும் இணைந்து ரூ. 6000]-க்கும் மேற்பட்ட மதிப்புள்ள பரிசுகளை வழங்கவிருக்கின்றன. மார்ச் மாதத்திலிருந்து தொடர்ந்து ஆறு இதழ்களில் புதிர்ப் போட்டிகள் இருக்கும். ஒவ்வொரு மாதமும் எரிவாயு சம்பந்தப்பட்ட பத்துக் கேள்விகள் இடம் பெற்றிருக்கும். அவற்றிற்குச் சரியான விடையை அனுப்ப வேண்டும். பதில் ஒரு வரியில் இருக்க வேண்டும். ஒன்றுக்கு மேற்பட்ட சரியான விடைகள் இருந்தால் குலுக்கல் முறையில் முதல் பரிசு, இரண்டாம் பரிசு, இருபது மூன்றும் பரிசுகள் தேர்ந்தெடுக்கப்படும்.

முதல் பரிசு: இரண்டு பர்னர் ஸ்டவ்.

இரண்டாம் பரிசு: ஒரு பர்னர் ஸ்டவ்.

மூன்றும் பரிசு: இருபது பேருக்கு இணைப்பு ரப்பர் குழாய்கள்.

பரிசுகளை வழங்குபவர்கள்:

**Superflame**

**Padmini**

**Laxmi DELUXE GAS STOVE**

FOR SAFETY
INSIST
"BASANT" BRAND LPG TUBING

**NUTAN BALAJI –
BALAJI LPG STOVES**

**NIKY TASHA**

**Sunflame**

1. ஒவ்வொரு மாதமும் 15–ந் தேதிக்குள் விடைகளை அனுப்பிவிட வேண்டும்.
2. இணைக்கப்பட்டுள்ள கூப்பன்களுடன் மட்டுமே விடைகள் வரவேண்டும்.
3. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**அந்தந்த மாதப்போட்டியின் முடிவுகள் அடுத்து வரும் மங்கையர் மலர் இதழில் வெளியிடப்படும். பரிசுகள் இறுதியாக வழங்கப்படும்.**

மார்ச் மாதப் போட்டிக்கான கேள்விகள்:

1. எரிவாயுக் கசிவு இருக்கிறதா எனப் பரிசோதிக்கச் சிறந்த முறை.
2. எரிவாயு சிலிண்டரில் எந்த வடிவத்தில் இருக்கும்?
3. எரிவாயு அடுப்பைப் பற்ற வைக்கச் சிறந்த முறை–
4. எரிவாயுவைச் சிக்கனப்படுத்த சிறந்த சமைக்கும் முறை–
5. எரிவாயு உபயோகப்படுத்தப்படும் சமையலறையின் வென்டிலேட்டர்கள் எங்கு இருக்க வேண்டும்?
6. சிலிண்டரில் வால்வு முறை சிறந்ததா; இருகுமுறை சிறந்ததா?
7. எரிவாயுக் கசிவு இருந்தால் உடனே மின் விளக்குகளை அணைத்து விடலாமா?
8. சத்துக்கள் வீணாகாமல் இருக்கக் காய்கறிகளை எப்படி நறுக்க வேண்டும்?
9. பர்னரில் அடைப்பு இருந்தால் என்ன செய்ய வேண்டும்?
10. சமையலறைக்கு எந்த உடை சிறந்தது?

**மார்ச் மாதப் போட்டிக்குக் கடைசி தேதி: 15-3-85**

**எரிவாயு போட்டிக் கூப்பன்**

..........மாதப் பரிசுப் போட்டிக்கு விடைகள் அனுப்பியுள்ளேன். என்னுடைய முகவரி:

.....................................

.....................................

.....................................

கையெழுத்து.

# பூமியை மிஞ்சும் தாய்மை!



டாக்டர்: ஜெயந்தி

சமீபத்தில் ஒரு டாக்டரைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த போது ஒரு கொடுமையான உண்மைக் கதையைச் சொன்னார்—

வேலைக்குப் போகும் பெண், குழந்தையை பார்த்துக் கொள்ள யாரும் இல்லாததால் வேலைக்காரியை நியமித்திருந்தாளாம். இரண்டு மூன்று மாசத்திற்குள் குழந்தையிடம் பெரும் மாறுதல். முன் போலக் குறும்புத்தனமோ, சிரிப்போ விளையாட்டோ எதுவுமில்லையாம். உடம்பிலே ஒருவித தடிப்பு ஏற்பட்டதாம். டாக்டரிடம் காட்டினார்கள். எவராலும் காரணம் கண்டுபிடிக்க முடியவில்லை. இதே நிலைமை தொடர்ந்து நீடிக்கவும் டாக்டர் முழுமையாக விசாரித்திருக்கிறார். அப்போது வந்த பயங்கரத் தகவல்கள்தான் கொடுமையானவை—

அந்த வேலைக்காரி குழந்தையைக் கிள்ளிக் கிள்ளியே தனக்கு அடக்கி வைத்திருக்கிறாள். சாயங்காலம் வரும் பெற்றோரிடம் சொன்னால் மறுநாள் இன்னும் அதிகமாகக் கிள்ளு கிடைக்கும் என எச்சரிக்கை செய்து வைத்திருந்ததால் குழந்தை பயந்து கொண்டு சொல்லவில்லை. வேலைக்காரி அந்தக் குழந்தையைத் தன் கைப்பாவையைப் போல ஆட்டி வைத்திருக்கிறாள். எனவேதான் இந்த நிலைமை—

உண்மை தெரிந்தவுடன் அந்த வேலைக்காரியை நிறுத்திவிட்டு, தாயாரே நீண்ட நாள் விடுப்பெடுத்துக் குழந்தையைக் காப்பாற்றினாள். குழந்தை இப்போது நார்மலாகி விட்டது.

இப்படி வேலைக்காரியைப் பற்றிய அநேக உண்மைக் கதைகள் உண்டு. ஒன்றுமறியாத பூவைப் போன்ற குழந்தைகள் இன்றைய பொருளாதார நெருக்கடியால், பாவம், மிதிபடுகின்றன.

வேலைக்குச் செல்லும் பெண்மணிகள் கூடியவரை கூட்டுக் குடும்பமாகவே இருப்பது நல்லது. கூட்டுக் குடும்பங்களில் பிரச்னைகள் இன்று அதிகமாகி விட்டன என்பது உண்மைதான். ஆனால் தன்னுடைய, தனது இழப்புக்களைப் பற்றி மட்டுமே நினைக்காமல், தான் சுமந்து பெற்ற குழந்தைகளுக்காகச் சில தியாகங்களைச் செய்வதில் தவறில்லை என நினைக்கிறேன். மருமகளைப் பிடிக்காத மாமியாரும், பேரனின் பொக்கைவாய்ச் சிரிப்பில் வசப்பட்டுத்தான் போகிறாள்.

அதற்கும் மசியாத குடும்பமாக இருந்தால் வைக்கும் வேலைக்காரிகளை அடிக்கடிக் கண்காணிப்பது நல்லது. குழந்தையின் நடவடிக்கைகளில் மாற்றம் தெரிந்தால் உடனே கவனிக்க வேண்டும். திடீரென்று மதியானங்களில் வந்து போகலாம். ஒரு மணிநேரம் பர்மிஷன் எடுத்துக் கொண்டு வந்து பார்க்கலாம்.

தான் பெற்ற குழந்தைகளின் நலனுக்காக ஓடிஓடி உழைப்பவர்கள், அடிப்படையையே இழந்து விடக் கூடாது அல்லவா?

அது கிடக்கட்டும்!

''பெரிசா வேலைக்காரியைப் பற்றிச் சொல்ல வந்துட்டீங்களா? பெத்த தாயாரே குழந்தையைப் போட்டுக் கொல்றான்னு?''

என்று சொல்கிறீர்களா?

அதுவும் உண்மைதான். இன்றைய 'டென்ஷன்' உலகத்தில் தன் கோபதாபங்களுக்கெல்லாம் வடிகாலாக, எதிர்க்க முடியாத குழந்தைகளைப் பலியாக்குகிறார்கள்.

அதேபோல இன்னொன்று இப்போது பெருகி வருகிறது. இரண்டரை வயதுக்கெல்லாம் பள்ளியில் சேர்த்து விடுகிறார்கள்.

அது பள்ளிக்குப் போக ஆரம்பித்த இரண்டாம் நாளே ஏ. பி. ஸி. டி. எழுதச் சொல்லி நோட்டு கொடுத்து அனுப்பி விடுகிறார்கள்.

அந்த இளங்குருத்து என்ன செய்யும் பாவம்? பக்கத்து வீட்டுப் பையன் வைத்திருக்கும் வண்ண வண்ணப் பந்தை நோட்டம் பார்க்கும் வேளையில் அம்மா இழுத்து வைத்து 'ஹோம் வொர்க்' செய்யச் சொல்கிறாள். பொம்மை வைத்துக் கொஞ்சும் குழந்தை ஏ. பி. ஸி. டி. எங்கேருந்து எழுதப் போகிறது? வேலையிலிருந்து மண்டைவலியுடன் வரும் தாயாருக்கு இந்த 'ஹோம் வொர்க்'கும், முரண்டு பிடித்து விளையாட ஓடும் குழந்தையும் பெரிய தொல்லைதான். விளைவு 'மொத்து, மொத்'தென்று மொத்தி விடுகிறாள்.

''பொறுமையில் சிறந்த பூமியும் உண்டு
பூமியை மிஞ்சும் தாய்மனம் உண்டு!''

என்று பாடுகிறார்கள். ஆனால் இன்றைய உலகில் அப்படிப் பொறுமையே உருவான தாயாரைப் பார்ப்பது கஷ்டம்தான். என்ன செய்வது?

இருந்தாலும் யோசியுங்கள். குழந்தையை நம் லெவலில் வைத்து ஏ. பி. ஸி. டி. கூட எழுத மாட்டேன் என்கிறதே என்று கோபப்படாதீர்கள். காலையில் மாமியார் புருஷனுடன் நடந்த சண்டையை மனதில் வைத்துக் கொண்டு குழந்தையின் மென்மையான உடலைச் சிவக்க அடிக்காதீர்கள்.

துள்ளிக் கொண்டு முதல்நாள் பள்ளிக்கு ஓடும் குழந்தை பிறகு சோர்ந்து போகிறது. வாங்கப் போகும் அடிக்குப் பயந்து கண் கலங்குகிறது. ஒரு லெவலுக்கு மேல் போனால் 'இழுப்பு' வருவதற்குக் கூட வாய்ப்பிருக்கிறது! ஒன்று மட்டும் நிச்சயம்!

அடிவாங்கும் குழந்தை மனோவியாதியால் பாதிக்கப்படுகிறது. திறமை குன்றிப் போகிறது. அடித்தால்தான் ஒரு வேலை செய்வது என்னும் நிலையில் தானே ஆர்வத்துடன் செய்யும் ஆற்றலை இழந்துபோகிறது.

ஆனால் அன்பால் அரவணைக்கப்படும் குழந்தையே நாளை பெரிய சாதனைகளைச் செய்யும். குழந்தை மக்கு இல்லை. நமக்குப் பொறுமை இல்லை.' அவ்வளவுதான் வித்தியாசம்—

**- மஞ்சுளா ரமேஷ்.**

---



# இங்கே ஒரு சந்திப்பு!

**இனி பெண்களும் சுயமாகத் தொழிலை ஆரம்பித்து வெற்றிகரமான தொழிலதிபராக மாற வேண்டிய காலம் வந்து விட்டது. (ஏற்கனவே பல பெண் தொழிலதிபர்கள் இருக்கிறார்கள்தான்.) அப்படிப்பட்ட சிறுதொழில் தொடங்க விரும்புபவர்களுக்காக 'தமிழ்நாடு பெண்கள் தொழில் முனைவோர் சங்கம்' ஒன்று ஆரம்பித்திருக்கிறார்கள். அச்சங்கத்தின் உறுப்பினர்களும், சில வங்கி அதிகாரிகளும் சமீபத்தில் சந்தித்து உரையாடினார்கள்.**

இந்தச் சங்கத்தை ஆரம்பித்ததன் முக்கிய நோக்கமே திறமைசாலியான பெண்களுக்கு, ஊக்கமளித்து, அவர்களின் திறமையை நாடறியச் செய்ய வேண்டுமென்பதே ஆகும்.

**திருமதி ப்ளோராவீராஜ்:**

ஒவ்வொரு பெண்ணிற்கும், ஒவ்வொரு விதமான திறமை இருப்பதாக நான் கருதுகிறேன். வெளியில் செல்லும் பெண்களுக்கு பலவிதமான மக்களைச் சந்திப்பதால், தன்னம்பிக்கையை உருவாக்கிக் கொள்ள முடிகிறது. தனி மனிதனின் சிந்தனைக்கும், முடிவுக்கும் இருக்கும் சிறப்பைவிட, பலபேர் கூடித் தங்கள் பிரச்னைகள், தங்கள் திறமைகளைப் பற்றி அலசும்பொழுது, ஒவ்வொருவரும் புதியதாக, நமக்குத் தெரியாத ஒன்றைக் கற்றுக் கொள்கிறோம். சிறு தொழில் செய்ய விருப்பமுள்ள பெண்களுக்கு வழிகாட்டி, அவர்களைச் சிறந்த தொழில் முனைவோராக ஆக்க வேண்டுமென்பதே எங்கள் நோக்கம்.

**திருமதி சரோஜா சோமசுந்தரம்:**

நான் ஒரு சிறிய இஞ்சினியரிங் தொழிற்சாலை வைத்துள்ளேன். பொதுவாகப் பெண்கள் தையல் மிஷின், மாவு அரைக்கும் மிஷின், டீ. வி. போன்றவைகளுக்கு சிறிய பாகங்களைச் செய்யும் தொழில்களை செய்வார்கள்.

நாமே தனியாக ஒரு தொழிற்சாலை ஆரம்பித்தால் என்ன என்று எனக்குத் தோன்றியது. ஆண்களுடன் போட்டியிட்டு செய்யக் கூடியதாக இருக்கவேண்டுமென நினைத்து வாட்டர் ட்ரீட்மெண்ட் ப்ளாண்ட்கள், வாட்டர் பொலுஷன் கண்ட்ரோல் சிஸ்டம், செய்ய வெல்டிங் செட்டுகள் வாங்கினேன்.

வாட்டர் ட்ரீட்மெண்ட் என்பது தண்ணீரைச் சுத்தம் செய்வது. சில இடங்களில் தண்ணீரில் உப்பு ரசாயன பொருள்கள் அதிகமாக இருந்து குடிக்க முடியாதபடி இருக்கும். மிஷின்களையும் கெடுத்துவிடும். இதனைச் சுத்தம் செய்யும் முறைக்கு வாட்டர் ட்ரீட்மெண்ட் எனப் பெயர். வாட்டர் பொலுஷன் என்பது பெரிய தொழிற்சாலைகளில் உபயோகிக்கும் தண்ணீரில் அங்குள்ள கெமிக்கல்கள் கலந்து விஷத் தண்ணீராக மாறிவிடுகிறது. இது சுற்றுப்புறத்திலுள்ள மக்களுக்கும், உயிரினங்களுக்கும் ஆபத்து. இந்த விஷ முறிவைச் செய்வது வாட்டர் பொலுஷன் கண்ட்ரோல் என்பதாகும்.

நாங்கள் செய்த பெரிய வாட்டர் ட்ரீட்மெண்ட் ப்ளாண்ட்கள் தற்சமயம் சேலம் ஸ்டீல், ஈரோடு, பெருந்துறை போன்ற இடங்களில் விரைவில் செயல்படப் போகின்றன. சிறிய பிரஷர் டாங்குகள் ஸ்ரீஹரிகோட்டா, பெங்களூர், நம் ஊர் கோல்டன் ஸ்டுடியோவில் உள்ள தானிய கிடங்குகளிலும் உள்ளன.

தற்சமயம் நம் தமிழ்நாடு அரசாங்கம் தொழில் முன்னேற்றத்திற்கான பல திட்டங்கள் கொண்டு வந்துள்ளார்கள். சிட்கோ, டி. ஐ. சி. யிலும் பல திட்டங்கள் உள்ளன. அவைகளில் பெண்களான நாமும் கலந்து கொண்டு பெருந்தொழிற்சாலைகளை ஆரம்பித்து நல்ல முறையில் தைரியமாக நடத்த, எல்லாவிதமான உதவியும் கொடுத்து எங்களை ஊக்குவிக்க வேண்டுமென கேட்டுக் கொள்கிறேன்.

**ஜெயலக்ஷ்மி ஜெகந்நாதன்:**

நான் விக்விட் சோப் ஆயில் பினாயில், போன்றவற்றை வீட்டு உபயோகத்திற்காகவும், பொழுதுபோக்கிற்காகவும் விரும்பிக் கேட்கும் நண்பர்களுக்காகவுமே செய்ய ஆரம்பித்தேன்.

என் செய்முறை நன்றாக இருப்பதைக் கேள்விப்பட்ட நண்பர்கள், ஆஸ்பத்திரி, லேபரட்டரி, போன்றவற்றிற்கு, என் தயாரிப்பைப் பற்றிச் சொல்ல, அவர்களும் வாங்க ஆரம்பித்தார்கள். விளையாட்டாக ஆரம்பித்த இந்தத் தயாரிப்பு சூடு பிடிக்கவே, — பெரிய தொழிற்சாலைகளுக்குக் கொடுக்க ஆரம்பித்தேன்.

பினாயில், விக்விட் சோப் போன்றவற்றின் பொருட்களைக் கடைகளில் வாங்கிக் கலக்கும் வேலையை மட்டும்தான் என் வீட்டில் செய்கிறேன். ஆனால், மற்ற ப்ளாட்டில் இருப்பவர்கள், என்னுடைய இந்த வேலைகளால் — அவர்கள் சுகாதாரம்கெடுவதாகவும் துர்நாற்றம் வீசுவதாகவும் புகார்செய்தனர். கார்ப்பரேஷனுக்கும் எழுதிப் போட்டார்கள். சானிடரி இன்ஸ்பெக்டர் ஒருவர் வந்து விசாரித்து இதனால் தீங்கு இல்லை, எனத் தீர்ப்புக் கூறினார். இப்படிப் பல பிரச்னைகள்

பெண்கள் அலுவலகத்திற்குச் சென்று தான் சம்பாதிக்க வேண்டுமென்று இல்லை. குடும்பத்தில் இருந்து கொண்டே, குடும்பத்



தையும் நிர்வகித்துக் கொண்டு, குழந்தைகளையும் பராமரித்துக் கொண்டு, தன் திறமையை மறைக்காமல் தன் கணவரின் முழு சம்மதத்துடன் முன்னேற நினைக்கும் பொழுது, ஏற்படும் தடையை, பெண்களின் முன்னேற்றத்திற்கே ஏற்படும் தடையாக நான் கருதுகிறேன்.



**நிகழ்ச்சியில் பங்கேற்றவர்கள்:**

திருமதி. ஷீலா ப்ரியா ஐ. ஏ. எஸ் – **Managing Director - Tamilnadu Coroporation for development of Women.**

திருமதி. ஃப்ளாஸ்லி ராஜ் – தலைவி, தொழில் முனைவோர் சங்கம்.

திரு. ஆர். ஏ. நீலகண்டன் - சீனியர் ஜெனரல் மேனேஜர், பேங்க் ஆஃப் தமிழ்நாடு.

வி. எஸ். வி. மணி – சேர்மன், பேங்க் ஆஃப் தமிழ்நாடு லிமிடெட்.

திரு. என். திரவியம் – டெபுடி ஜெனரல் மேனேஜர், பாங்க் ஆஃப் தமிழ்நாடு.

திரு. சம்பத்தம் – (ஓய்வு பெற்ற) ஜெனரல் மானேஜர், ரிசர்வ் வங்கி.

திரு. வெங்கட்ராமன் ஜாயின்ட் சீஃப் ஆபீஸர் ரிசர்வ் வங்கி.

உறுப்பினர்கள்: திருமதிகள்: சரஸ்வதி நாராயணன், சரோஜா சோமசுந்தரம், பூங்கொடி, சசிகலா, ஜெயலக்ஷ்மி ஜகந்நாதன், பி. எம். லீலா மூர்த்தி, சுசீலா பத்மநாபன், ஜானகி அனந்த்.





**பி. எம். சசிகலா:**

நான் ஒரு வங்கியை அணுகி எனக்கு உதவி கேட்டேன். அந்த வங்கியின் பெயரை வெளியிட விரும்பவில்லை. அவர்களும் என் வீட்டின் பின்னால் ஒரு ஷெட் போல் கட்டிக் கொள்ளச் சொன்னார்கள். நானும் ரூ. 5 வட்டி விகிதத்தில், ரூ. 5000 தனியார் ஒருவரிடம் கடன் வாங்கிக் கட்டினேன். பிறகு மறுபடியும் அந்த வங்கி அதிகாரியை அணுகி எனது தொழிற்சாலைக்காக கட்டியிருக்கும் இடத்தைப் பார்வையிட்டு என் தொழில் விரிவடைய உதவி செய்யுமாறு வேண்டினேன்.

ஆனால், அவர்கள் தொழில் சம்பந்தப்பட்ட கேள்விகளைக் கேட்காமல் என்னுடைய தனிப்பட்ட வாழ்க்கைப் பற்றிய கேள்விகளைக் கேட்டார். என் மகன், என் குடும்ப நிலை, முதலியவற்றைப்பற்றிக் கேட்டார். இது எனக்குக் கோபத்தை மூட்டியது. இத்தனையும் கேட்டுக் கடைசியில் உதவியும் செய்ய முடியாது என்று கைவிரித்து விட்டார்கள்.

இந்த சங்கத்தைப் பற்றிக் கேள்விப்பட்டவுடன், இந்த சங்கத்தின் தலைவியை அணுகி என் நிலையை விரிவாக எடுத்துச் சொன்னேன். சங்கத் தலைவி திருமதி. ஃப்ளோஸ்ஸி ராஜ் அவர்களும் திருமதி. ஷீலா ப்ரியா அவர்களும் எடுத்துக் கொண்ட முயற்சியின் மூலம் இந்தியன் பாங்கின் உதவியைப் பெற்று எனது தொழிற்சாலையை ஆரம்பித்தேன். Coil winding stepdown transformer for TV, Assombling–ம் செய்கிறேன்.

**சுசீலா பத்மநாபன்:**

ரொம்ப நாளாக, நாம் சொந்தமாக ஏதாவது, தொழிலைச் செய்யவேண்டும் என்ற எண்ணம் என் அடி மனத்தில் இருந்து கொண்டேயிருந்தது. என் கணவர் ஒரு பயோ கெமிஸ்ட். அவர் மூலமாக இந்தத் தொழிலைப் பற்றி நன்கு தெரிந்து கொண்டேன். .'இட்காட்' நடத்திய முகாமில் கலந்து கொண்டபொழுது, நாமும் சிறு தொழிலைத் தொடங்கி வெற்றிகரமாக நடத்த முடியும் என்ற நம்பிக்கை ஏற்பட்டது.

நான் தொழில் ரீதியில் பட்டதாரியாக இல்லாமல் இருக்கலாம். ஆனால், என் கணவரின் உதவியால், நல்ல பயிற்சியையும் அனுபவத்தையும் பெற்றிருக்கிறேன்..மேலும் இட்காட் நடத்திய இ. டி. பு. பயிற்சி முகாமில் தேர்வு பெற்றதாலும், தனிப்பட்ட முறையில் ஒரு தொழிலைச் செய்து, நாட்டின் பொருளாதாரத்திற்கும், என்னுடைய முன்னேற்றத்திற்கும், உதவ வேண்டும் என்றே நான் விரும்புகிறேன்.

**ஜானகி அனந்த்:**

பலவிதமான அழகுப் பைகளை நானே டிசைன் செய்து வெட்டி, என் கற்பனைக் கேற்பத் தைக்கிறேன். இதை ஒரு பொழுது போக்காகத்தான் நான் ஆரம்பித்தேன். என் பைகளைக் கண்ட பல நண்பர்கள் பாராட்டியபொழுது, பூம்புகாரில் 74–'ல் நடத்திய போட்டியில் ஏன் கலந்து கொள்ள கூடாது என்று நினைத்து, கலந்து கொண்டு பரிசாக 100 ரூபாயும் சான்றிதழும் பெற்றேன்.

அன்றிலிருந்து பூம்புகாருக்கு நான் அழகிய கைப்பைகளைத் தயாரித்து வாடிக்கையாக அளித்து வருகிறேன். மற்றொரு முறை பூம்புகார் – வீணான பொருட்களிலிருந்து, நல்ல பயன் தரும் பொருட்களைச் செய்வது பற்றி ஒரு கண்காட்சி வைத்தார்கள். அப்பொழுதும் என்னுடைய பைகளுக்கு அமோக வரவேற்புக் கிடைத்து, என் திறமைக்குச் சான்றிதழும் அளித்தார்கள். இதுவே எனக்கு ஒரு ஊக்கத்தை அளித்தது. இதையே நாம் ஏன், இன்னும் பெரிய அளவில் செய்யக் கூடாது என்று நினைத்து இன்று சிறிய தொழிற்சாலையே நிறுவி இருக்கிறேன்.


The following particulars regarding the ownership of 'MANGAYAR MALAR' the Tamil monthly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

FORM IV

1. Place of Publication: Madras
2. Periodicity of Publication: Monthly
3. Name of Printer: V. Murali
   Nationality: Indian
   Address: AA-117, Shanthi Colony,
   Anna Nagar,
   Madras-600 040.
4. Name of Publisher: V. Murali
   Nationality: Indian
   Address: AA-117, Shanthi Colony,
   Anna Nagar,
   Madras-600 040.
5. Name of Editor: V. Murali
   Nationality: Indian
   Address: AA-117, Shanthi Colony,
   Anna Nagar,
   Madras-600 040.
6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital: Bharathan Publications Private Limited, 84/1-C, Race Course Road, Guindy, Madras-600 032.

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

V. Murali
Publisher.

1.3.1985.


**சரஸ்வதி நாராயணன்:**

"பல பெண்களுக்கு, அவர்கள் திறமைக்கு ஏற்பச் சுயமாகத் தொழில் செய்து வருமானத்தைப் பெருக்கலாம் என்பது தெரியவில்லை. அப்பளம், ஊறுகாய், முதல்

சத்தூட்டம்
நிறைந்தது
குதூகலம்
மிகுந்தது!

புதியது!

# ஐஸ்-க்ரீம் சுவை

# காம்ப்ளான்®

அம்மாக்களே! இதோ சத்தூட்டம், சிறுவர்கள் அநுபவிக்கத் துடிக்கும் சுவையில்: நாவூறச் செய்யும் ஐஸ் க்ரீம். அவர்கள், வெப்பத்தினால் சரியாக உணவருந்தாத போது, அவர்களுக்கு அவசியமான போஷாக்கை அளிக்க 'ஜில்'லென்று குளிர்வித்த ஐஸ் க்ரீம் சுவைகாம்ப்ளான் கொடுங்கள்.

புரதங்கள், நேரடியாக உடல் வளர்ச்சிக்கு பலனளிக்கும் சத்துக்களாகும். காம்ப்ளான், மிக மேலான புரதச் சத்துக்களையும்—அதாவது, பால் புரதச் சத்துக்களையும் (20%) மற்றும் 22 இதர மூலாதார உணவுச் சத்துக்களையும் தருகிறது. இவை வளரும் சிறுவர்களுக்கு தினப்படி தேவைப்படுவதாகும். துவங்குங்கள் காம்ப்ளான் உங்கள் குழந்தைகளுக்கு— அன்றாடம் இருவேளை.

காம்ப்ளான் ருசிமிகுந்த சாக்கலேட், ஸ்ட்ராபெரி, ஏலக்காய்—குங்குமப்பூ சுவைகளிலும் மற்றும் சாதாரண ரகத்திலும்கூட கிடைக்கிறது.





பால் சேர்த்திடத் தேவையில்லை.






**காம்ப்ளான்® -திட்டமிட்ட பரிபூரண உணவு**

GLC.203.12 Tam

## தாய்மார்களே!

# உங்கள் குழந்தைக்கு போதுமான வளர்ச்சி இருக்கிறதா?

**வயதுக்கேற்ற வளர்ச்சி இருக்கிறதா என்பது வெறும் கண்ணால் பார்த்தால் தெரியாது.**

மாதா மாதம் எடை பார்த்தால்தான் தெரியும்







விவரங்களுக்கு
அருகில் உள்ள சுகாதாரத் துணை நிலையத்தை அல்லது
ஊட்டச்சத்து மையத்தை அணுகுங்கள்.

தொடர்புப் பிரிவு: **தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச்சத்துத் திட்டம்.**
570, அண்ணா சாலை சென்னை-600 018.





பெரிய தொழிற்சாலைகள், இயந்திரத் தாரிப்புகள் போன்றவற்றில் பல பெண்கள் திறமையுடையவர்களாக இருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு யாரிடம் சென்று இதற்கான உதவியைப் பெற வேண்டுமென்பது தெரியவில்லை.

சர்வதேசப் பெண்கள் தொழில் முனைவோர் சங்கம் விழாவில் கலந்து கொள்வதற்காக, தமிழ்நாட்டிலிருந்து எங்களுடைய சங்கம் என்னைத் தேர்வு செய்து டில்லிக்கு அனுப்பினார்கள். அப்போது பஞ்சாப், சண்டிகார், கர்நாடகா போன்ற இடங்களில் பெண்கள் பெரிய தொழிற்சாலைகளை, தனியாக வெற்றிகரமாக நடத்துவதைப் புரிந்து கொண்டேன். இந்த அனுபவத்தால் தமிழ்நாட்டுப் பெண்களின் முன்னேற்றத்திற்கு இச்சங்கம் மூலம் சேவை செய்ய நினைக்கிறேன்.

பெண்கள் அனைவரும் சுயமாகத் தங்கள் காலில் நிற்கலாம் எனும் தெம்பைப் பெற வேண்டும். இப்படிப்பட்ட தொழில்களை ஆரம்பிப்பதால் அந்தத் தைரியத்தை அவர்களால் பெற முடியும்.. நான் இப்படிப் பேசுவதால் ஆண்கள் தேவையில்லை என்று சொல்லவில்லை. அவர்கள் நிழலில், அவர்கள் பாதுகாப்பில், அவர்களை வழிகாட்டியாக வைத்துக் கொண்டே எங்கள் திறமையை, உலகத்தில் தமிழகப் பெண்கள் யாருக்கும் சளைத்தவர்கள் இல்லை என்பதை நிரூபித்து வீட்டையும், நாட்டையும் முன்னேற்றப் பாதையில் செலுத்த வேண்டும்.

**கடைசியாக பதில் கூறிய வி. எஸ். வி. மணி:**

''தங்கள் குறைகளைக் கூறிய பல பெண்மணிகள், பாங்க் அதிகாரிகள் தங்களையும் தங்கள் குடும்பச் சூழ்நிலைப் பற்றியும், தேவையில்லாத பல கேள்விகளைக் கேட்டுப் புண்படுத்துவதாகக் கூறினார்கள். இவர்களுக்கு நான் சொல்வதெல்லாம் ஒன்றேயொன்று தான்.

வங்கி அதிகாரிகள் கேள்விகள் கேட்கிறார்களே என்று அவர்கள் மேல் கோபம் கொள்ளாதீர்கள். நீங்கள் பண உதவிக்கு அவர்களை அணுகும்போது, அவர்களைப் பற்றிய அனைத்து விவரங்களையும் தெரிந்து கொள்ள வேண்டியது அவர்களின் முதல் கடமை. ஏனெனில், அதிகாரிகள் தங்கள் பணத்தைக் கொடுத்து, உங்கள் தொழிலுக்கு முதலீடு செய்வதில்லை. பொதுமக்கள், அவர்கள் பாதுகாப்பில் வைத்திருக்கும் பணத்தைக் கையாளும்பொழுது, அவர்களுக்குப் பொறுப்பு அதிகமாகின்றது. எனவே, அவர்கள் அதிக கவனத்துடன், பல கேள்விகளைக் கேட்க வேண்டிய சூழ்நிலையில் இருக்கிறார்கள்.

—எந்தப் பெண்மணியும், திறமையில்லாதவராகவோ, எந்தக் காரியத்தையும் நிர்வகிக்கும் தன்மையில்லாதவராகவோ இருப்பதாக நாங்கள் கருதவில்லை. வீட்டை எவ்வளவு சிறப்பாகவும், பொறுப்புடனும் கவனிக்கிறார்களோ, அதேபோல் தாங்கள் செய்யும் தொழிலைச் சிறப்புடன் செய்வார்கள் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு. எனவே, கேள்விகள் கேட்பது அவர்களைக் கேவலப்படுத்த அல்ல, கடன் கொடுப்பதற்கு முன் உரியவருக்குத் தான் போய்ச் சேருகிறதா என்று உறுதிபடுத்திக் கொள்ளதான்.

சிறு தொழில் வளர்ச்சிக்கு 25 முன் பணம் தர வங்கி தயாராகவிருக்கிறது — பெரும்பாலும் பெண்களுக்கே இந்தச் சலுகை அளிக்கப்பட்டிருக்கிறது.

சிலர் வங்கியில், தொழிற்சாலை ஆரம்பிப்பதாகக் கூறி, பணம் வாங்கிச் சரியாக அதைப் பயன்படுத்துவதில்லை. சமீபத்தில் ஒரு எஞ்சினியர் அவர் நடத்தப் போகும் தொழிலுக்காக 16 லட்சம் கடன்தொகை கேட்டு எங்களை அணுகினார். விவரங்களை விசாரித்தபொழுது, கடன் வாங்கும் 16 லட்ச ரூபாயிலிருந்து 2 லட்ச ரூபாயைத் தன் அலுவலகத்தை அழகுப்படுத்தவும், ஏ. ஸி. முதலிய வசதிகளை வைக்கவும் பயன்படுத்தப் போவதாகக் கூறினார்!

இந்தச் சங்கத்திற்கு சில அறிவுரைகளை நான் கூற விரும்புகிறேன்:

1. தனியாக, கடனுக்காக வங்கிகளை அணுகினால் உங்களுக்குப் பிரச்னைகள் ஏற்படலாம்.

2. உங்களை நன்றாக அறிந்த சங்கத்தின் மூலம் உதவிக்கு அணுகினால், உங்களைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ள எங்களுக்கு வாய்ப்பு ஏற்படுகிறது: உங்கள் நன்னடத்தை பற்றி உறுதிமொழி அளிக்கவும் உங்களுக்கு ஒரு பலம் இருக்கும்.

3. சங்கத்தில் சேருவதன் மூலம் உங்களுக்கும் வங்கியின் சட்டதிட்டங்கள், தொழிற்சாலைச் சட்டங்கள், நிர்வாகம், போன்றவற்றை அறிய சந்தர்ப்பம் ஏற்படும்.

- தொகுப்பு: **லட்சுமி ஸ்ரீநிவாஸன்**

# இளமையும், வலிமையும்
# இருபதில் மட்டுமல்ல—அறுபதிலுமுண்டு!

பல்லாயிரம் ஆண்டுகள் இயற்கையின்
இன்ப இரகசியங்களைப் பகுத்துணர்ந்து
ஆராய்ந்த பண்டைய சித்தர்களின்

# காயகல்பம்





விஞ்ஞான முறையில் மீண்டும் தயாரிக்கப்படுகிறது.
தங்கபஸ்பம் அடங்கியது.

- மகிழ்ச்சியும், மனநிறைவும் வாழ்க்கையில் துள்ளி விளையாடத் துணை செய்கிறது!
- மனச் சோர்வு, உடல் தளர்ச்சிகளை நீக்கி உற்சாகம் ஊட்டுகிறது!
- கொழுப்பு சத்துக்களைக் குறைத்து, இருதயத்தை வலுப்படுத்துகிறது!
- சீரண இயக்கத்தைச் சீர்படுத்தி, வயிற்றுக் கோளாறுகளை நிவர்த்திக்கிறது!
- நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரித்து, ஆரோக்கியத்தை வளர்க்கிறது!
- பெண்களின் பலவீன நிலைமைகளைப் போக்கிப் புத்துணர்ச்சி அளிக்கிறது!
- வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்க வலிவும், பொலிவும் வழங்குகிறது!
- இருபதிலும் அறுபதிலும் இளமை உணர்வோடு வாழ உதவி செய்கிறது!

125 & 500 கிராம் அளவுகளில் எல்லா அங்காடிகளிலும் கிடைக்கிறது!

அனைவருக்கும்
ஏற்றது.
பத்தியம் எதுவும்
இல்லை




தயாரிப்பாளர்கள்:

**கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ்**

55, ஹாரிஸ் சாலை, புதுப்பேட்டை, சென்னை-2.
(எழும்பூர் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுக்கு எதிரில்)
தந்தி: HERBAL KING.

கவியரசர் கண்ணதாசன் அவர்கள் குழுமத்தில் பாராட்டியுள்ள மூலிகை மருத்துவ ஆய்வாளர் டாக்டர் இ. ஷாஜஹான் ஹமீது அவர்களின் ஆராய்ச்சித் தயாரிப்பு. மருத்துவ ஆலோசனையும் பெறலாம்.

**STOCKIST:** HOMOEOPATHIC DRUG CENTRE, 1. Corporation Shopping Complex, Behind Upparpet Police Station, Tank Bund Road, BANGALORE-560 009. Phone: 24852.

சிங்கப்பூரில் கிடைக்குமிடம்: M/s. GOVINDASAMY PILLAI [S] PTE. LTD., Serangoon Road, SINGAPORE.

# உங்கள் குழந்தையை யார் வளர்க்கிறார்கள்?

**இன்று டி.வி, வீடியோவிற்கு நாமெல்லாம் அடிமையாகி - விட்டோம். அதன் பலன் எவ்வளவு பயங்கரமானது தெரியுமா?**

-ஜெயா.வி.ராமன்

டி.வி. ஒரு போதையூட்டும் பொருள். இதற்கு அடிமைப்படுவது மிகவும் சுலபம். நிஜ வாழ்க்கையிலிருந்து தலையை உள்ளுக் இழுத்துக் கொள்ள இது மிகவும் உகந்தது. செய்ய வேண்டிய எல்லா வேலைகளையும் ஒதுக்கிவிட்டு இந்த உலகத்தில் புகுந்துவிடலாம்.

சில வீடுகளில் நாள் முழுவதும் டி.வி. போய்க் கொண்டேயிருக்கும்.

இந்த நிகழ்ச்சி நன்றாக இல்லாவிட்டால், அடுத்தது என்ன வருகிறது என்று பார்க்கலாம் என்பார்கள். ஒருவர் செய்திகள் பார்க்கவேண்டும். ஒருவர் நாடகம் பார்க்க வேண்டும், ஒருவர் ஸ்போர்ட்ஸ் பார்க்க வேண்டும் என்று டி.வி.யில் நிகழ்ச்சி முடியும் வரை அணைக்கப்படவே செய்யாது. அதை அனுசரித்தே, அதற்கு நடுவிலேயே, சாப்பாடு, சம்பாஷணை, நண்பர்கள் வரவு, குழந்தைகள் பாடம் படிப்பது, படுக்கப் போவது எல்லாம் நிகழும்.

நிறைய குடும்பங்களில் டி. வி. பார்ப்பது மட்டுமே எல்லோரும் சேர்ந்து செய்யும் செய்கையாகிறது. இந்த வேளையில் நடுநடுவில் சிறிது பேசிக் கொள்வதைத் தவிர



குடும்பத்தினர் கலந்து உரையாடுவது விவாதம் செய்வது போன்றவை நடைபெறுவதேயில்லை.

அந்நியோன்ய பாவம் இல்லாத குடும்பங்களில் டி.வி. மனிதர்களிடையே இடைவெளியை வளர்க்கிறது. பிரச்சினையைக் கலந்து ஆலோசித்து, அலசித் தீர்க்காமல் தள்ளிப் போடச் செய்கிறது. குடும்ப நபர்களிடையே நெருக்கமே ஏற்படாமல் செய்கிறது.

பகல் முழுவதும் வீட்டு வேலையிலும், குழந்தைகள் பராமரிப்பிலும் உழைக்கும் பெண்கள், மாலையில் வீடு திரும்பும் கணவன், (குழந்தையுடன் விளையாடாமல், மனைவியுடன் பேசாமல்) உடனே டி.வியின் முன் உட்காருவதை வெறுக்கின்றனர்.

வழக்கமாக, ஒரு இருட்டறையில் ஜன்னல் திரைகளையெல்லாம் மூடிவிட்டு, எங்கோ ஒரு சின்ன விளக்கை மட்டும் எரிய விட்டு



விட்டு, வேறு எந்தவிதத் தொந்திரவும் இல்லாமல், டீ.வியே முக்கிய அம்சமாகப் பார்க்கப்படுகிறது.

கலர் டீ.வியில் படம் 625 கோடுகளில் கோடிக்கணக்கான **Phosphor** புள்ளிகளால் தோற்றுவிக்கப்படுகிறது. இந்த டீ.வி படம் நம் மூளையினுல் உருவம் பெறுகிறது. இவ்வளவு தீவிரமான வேலையைச் செய்ய நம் மூளை தயாரிக்கப்பட்டதல்ல. குழந்தைகள் மூளை இந்த வேலையைச் சேர்ந்தாற்போல் இரண்டு மூன்று மணி நேரங்கள் செய்வது அவர்களை எப்படிப் பாதிக்கும் என்றே சொல்ல முடியாது.

நம் கவனத்தைக் கவர்வதற்காக டீ.வியை விட்டுக் கண்ணை எடுக்க விடாமல் செய்ய நிகழ்ச்சிகளைத் தயாரிப்பவர்கள் எவ்வளவோ உத்திகளைக் கையாள வேண்டியிருக்கிறது — காமெராவை சுழலவிடுவது, போட்டோ லென்ஸை முன்னும், பின்னும்



கொண்டு செல்வது, ஒலியை காட்சிக்கு ஏற்ப ஒலிக்கச் செய்வது, ஒரு படத்திற்கு மேல் மற்றொன்றைத் தோற்றுவிப்பது, வேகமாகப் படங்களை ஓட விடுவது போன்ற எவ்வளவோ.

சாதாரணமாக நம் கண்விழிகள் ஒரு நிலையில் இல்லாமல் அலையும். ஆனுல் டீ.வி. பார்க்கும் பொழுது அது அதிகம் அசைவதேயில்லை.

இப்படி தொடர்ச்சியாகத் திரும்பத் திரும்பக் கண்களைத் தாக்கும் வெளிச்சம் மூளையைப் பெரிதும் பாதிப்பதாக ஆஸ்திரேலிய நேஷனல் பல்கலைக்கழக மருத்துவப் பேராசிரியர் **Dr. Emery** சொல்கிருர்.

மனித மூளையில் இடது பாகத்திற்கும், வலது பாகத்திற்கும், பிரத்தியேகமாக சில வேலைகள் உண்டு. இடது பாகம் பேச்சு, பகுத்தறிவு போன்றவற்றை நிர்வகிக்கிறது. வலது பாகம் உருவத்தைக் கிரகித்துக் கொள்கிறது. (சிலருக்கு மனிதர்களின் முகம் நினைவிருக்கும், பெயர் நினைவு வராது.)

குழந்தைகளின் மூளையில் இந்தப் பாகுபாடு கிடையாது. இந்த நிலையில் நிறைய டீ.வி. பார்ப்பது உருவத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வலது மூளையை வளர்க்கிறது. பேச ஆவலாக இருக்கும் இந்த நேரத்தில் பேசும் தன்மையை வளர்த்துக் கொள்ளாத குழந்தைகள் பிறகு இக்குறையை நிவர்த்திச் செய்ய சிரமப்படுவார்கள்.

இடது பாகத்தின் வளர்ச்சி குன்றுதலால் மூளைக்கு எட்டும் செய்திகளைக் கூட புரிந்து கொண்டு உணரும் சக்தியை அடைவதில்லை. பேப்பரில் வாசித்த செய்தியைப் புரிந்து கொள்வதைவிட டீ.வி.யில் பார்த்து நினைவில் நிற்பது குறைவு என்கிறது **Dr. Emery** அவர்களின் ஆராய்ச்சி. குழந்தைகளுக்கும் தாங்கள் கேட்ட கதைகளைத் திரும்பச் சொல்ல முடிந்த அளவு பார்த்த நிகழ்ச்சியை விவரிக்க முடிவதில்லை.

ஆரோக்கியமான கண்களுக்கு அசைவு—பயிற்சி மிகவும் அவசியம். டீ.வி. பார்ப்பது கண்களை அதிகம் அசைக்க வேண்டிய தேவையில்லாமல் செய்கிறது. முழு படத்தையும் ஒரே பார்வையில் பார்க்க அதன் குவியும் தன்மை கூடச் சிறிது குறைகிறது. **(defocussed)** கண்களின் தசைநார்கள் பயிற்சியில்லாமல் வலுவிழக்கின்றன.

அதிகம் டீ.வி. பார்ப்பவர்களின் உணர்ச்சிகள் உறைந்துவிடுகின்றன. ஒரு நிகழ்ச்சியால் சரியானபடி பாதிக்கப்படுவது சமூகத்தில் கலந்து பழகினுல்தான் ஏற்படும். ஒரு அபாயத்திலிருந்து தக்க சமயத்தில் ஒருவரைக் காப்பது, விபத்துக்கள் ஏற்படும் போது துரிதமாகச் செயல்படுவது போன்றவை, பார்வையாளர்களாகவே இருந்து பழக்கப்பட்டவர்களுக்கு, அவ்வளவு துரிதமாகச் செய்ய முடிவதில்லை என்பதை ஆராய்ச்சி மூலமே நிரூபித்திருக்கிருர்கள்.

டீ.வியிலிருந்து வெளிவரும் **X- ray** ரொம்பக் குறைந்த அளவில் இருந்தாலும் (பழுதடைந்த டீ.வியிலிருந்து அதிகமாக **X- ray** வெளிவருவது சாத்தியம்.) இது குழந்தைகளின் உடலை ஊடுருவ வல்லது. இதில் இன்னமும் ஆராய்ச்சி செய்வதற்கு முன் குழந்தையை டீ.வியின் முன் விடக் கூடாது.

டீ.வியிலிருந்து வெளிவரும் வெளிச்சம் தாவர வளர்ச்சியைப் பெரிதும் பாதிக்கிறது. (பீன்ஸ் செடி கொடிபோல் மிகவும் உயர்ந்து வளர்வதுடன் அதன் வேரும் மேல் நோக்கி வளர்கிறது.) டீ.வி. வெளிச்சத்தில் வளர்ந்த எலிகள் புற்றுநோய்க்கு உள்ளாகின்றன.

பீன்ஸையும், எலியையும் போல வெளிப் பார்வைக்கு நார்மலாக வளர்ந்தாலும் மனித உடல், மனம், குணத்தை பாதிக்கவல்லதோ என்று விஞ்ஞானிகள் சந்தேகப்படுகிருர்கள்.

எந்த தூரத்திலிருந்து டீ.வியைப் பார்ப்பது நல்லது என்ற கேள்விக்கும் திட்டவட்டமான பதில் சொல்ல முடியாது. பதினைந்து அடி தூரத்தில் இருக்கும்பொழுதும், நடுவில் மரத்தடுப்பு வைத்தும் அதற்குப் பின்புறம் இருக்கும் எலிகள் அமைதியின்றி அலைகின்றன.

சரித்திரத்திலேயே முதன் முதலாகப் பெரும்பான்மையான குழந்தைகள் ஒரு இயந்திரக் கருவியினால் வளர்க்கப்படுகிறார்கள். இது வீட்டிலேயே இருக்கிறது. இதை உபயோகப்படுத்த எந்தவிதமான பிரயத்தனமும் செய்ய வேண்டாம்.

''பொழுது போகவில்லை. போர் அடிக்கிறது,'' என்று சொல்லும் குழந்தைகளுடன் சேர்ந்து தானும் ஏதேனும் உருப்படியாகச் செய்யாமல், போய் டீ.வியைப் பார் என்று சொல்வது பெற்றோர்களுக்கும் சுலபமாக இருக்கிறது.

விளையாட வேண்டும் என்ற உண்மை ஆர்வத்தை டீ.வி. அணை போட்டுத் தடுக்கிறது. வெளியில் போய் கிரிக்கெட் விளையாடுவதற்குப் பதிலாக டீ.வியில் பார்க்கிறார்கள். இது முடிந்த உடன் அணை உடைந்தது போல் உடல் பரபரப்படைகிறது. வெகு நேரம் ஆடாமல், அசையாமல் உட்கார்ந்திருந்த குழந்தை, நிதானமில்லாமல் ஓடுகிறது. திருப்தியில்லாமல் யாருடனாவது சண்டை போடுகிறது. இனி என்ன செய்வது என்று தெரியாமல் எதற்காவது அடம் பிடிக்கிறது. எதையாவது போட்டு உடைக்கிறது.

மற்றவர்களுடன் நேசமாக, சுமுகமாகப் பழகுவது, ஒரு இருதரப்புச் செய்கை; ஒரு தரப்பாக டீ.வியையே பார்த்துப் பழகிய குழந்தைகளுக்கு இது கைவருவதில்லை. ஸ்பஷ்டமாகத் திருந்தப் பேசி கவனமாகக் கேட்கும் பழக்கம் உண்மை மனிதர்களுடன் கலந்து பழகினால்தான் வரும்.

அதிகம் டீ.வி. பார்க்கும் குழந்தைகள் சண்டைக்காரர்களாகவும், முன் கோபக்காரர்களாகவும் இருக்கிறார்கள். தானாகச் சொந்தமாக ஆக்க வேலை எதுவுமே செய்யத் தெரிவதில்லை.

டீ.வியில் வரும் பல கொடூரமான கொடுமையான நிகழ்ச்சிகள், குழந்தைகளுக்கு, பயங்கர துர் சொப்பனம் வரக் காரணமாக இருக்கின்றன. டீ.வியைக் கவனிக்காத குழந்தைகளும் உணர்ச்சிகரமான நிகழ்ச்சிகளின் பொழுது, பிரயோகப்படுத்தப்படும் ஒலி, ஒளி உத்திகளால் கவரப்படுகிறார்கள். அதிகமான குழந்தைகள், வளர்க்கப்படும் சூழ்நிலைகளுக்கும் புறம்பாக, டீ.வியில் பார்க்கும் பலாத்காரம், ஹிம்சை, கொடுமை, கற்பழித்தல் போன்ற நிகழ்ச்சிகளால் பாதிக்கப்படுகிறார்கள். இந்த விதமான உணர்ச்சிகளைச் சீக்கிரமாகக் கிரகித்துக் கொள்ளவும் செய்கிறார்கள்.

சின்ன வயதிலிருந்தே இப்படிக் கொடுமையையும், கொடூரத்தையுமே பார்த்துப் பார்த்துப் பழக்கப் பட்ட குழந்தைகள், நிஜ வாழ்க்கையிலும் அதை ஒரு சாதாரண நிகழ்ச்சியாக எந்தவிதப் பாதிப்பும் இல்லாமல் ஏற்றுக் கொள்ள தலைப்படுகின்றனர். உணர்ச்சியற்ற ஜடமாக மாறுகின்றனர்.

குழந்தைகளுக்கு எது தப்பு எது சரி என்று பாகுபடுத்தத் தெரியாது (வேண்டுமென்று ஒரு கண்ணாடித் தட்டை விட்டெறிந்து உடைத்தவனை விட கைதவறி ஐந்து தட்டுகளை உடைத்தவனையே அவர்கள் அதிகக் குற்றவாளியாகக் கருதுவார்கள். காரண, காரியங்களை ஆராய முயற்சி போதாது) பெற்றோர்கள், பெரியவர்கள் நடந்து கொள்வதைப் பார்த்து அதையே காப்பியடிக்கிறார்கள்.

'கண்டதே காட்சி' என்ற மனநிலையிலுள்ள குழந்தைகள் டீ.வியில் எவ்வளவோ விரும்பத்தகாத நிகழ்ச்சிகளைக் காண நேரிடுகிறது. தான் பார்ப்பதையே திரும்பச் செய்து, கற்றுக் கொள்ளும் குழந்தைகளுக்குக் கெட்ட குணங்கள் சீக்கிரம் மனத்தில் பதிந்துவிடும்.

சில பெரியவர்கள் நிகழ்ச்சிகளில் வரும் காட்சிகள் குழந்தைகள் பார்க்க உகந்ததே யல்ல. ஆனால் முன்னறிவிப்பில்லாமல் வருவதாலும், இந்த நிகழ்ச்சியைக் குழந்தைகள் பார்க்கக் கூடாது, உடனே அணைக்க வேண்டும் என்ற உணர்ச்சியேயில்லாமல் பெரியவர்கள் அதில் ஆழ்ந்து போயிருப்பதாலும் குழந்தைகள் இதற்குப் பலியாகின்றனர்.

**ஐம்பத்தைந்து வயதுக்குப் பிறகு அதிகம் கொழுப்புச் சத்தைக் கொடுக்கும் உணவைச் சாப்பிட வேண்டாம். போதுமான அளவு வைட்டமின்கள் கிடைக்கக் காய்கறிகள், பழங்கள் சாப்பிட வேண்டும். இவ்வயதில் உழைப்பு முன்பைவிடக் குறைந்து இருக்கும். ஆகவே உணவு அளவைக் குறைத்துக் கொள்ள வேண்டும். நாளொன்றுக்கு எட்டு டம்ளர் தண்ணீர் அருந்த வேண்டும். இப்படிச் செய்தால் வயதானோர் நீண்ட நாள் வாழ வழி கிடைக்கும்.**

**—மதுபாலன்.**

இப்படி வீட்டிற்கு வந்து, நம்மையே ஆட்கொண்டுவிட்ட இந்த அழையா விருந்தாளியிடமிருந்து நம் குழந்தைகளை எப்படிக் காப்பாற்றுவது?

1. இதுவரை டீ.வி. வாங்காவிட்டால் அதை வாங்காதீர்கள். அப்படி ஏதேனும் விசேஷமான நிகழ்ச்சிகளைப் பார்க்க வேண்டுமானால் பக்கத்தில் டீ.வி. வைத்திருப்

பவர்கள் வீட்டிற்குப் போய்ப் பார்க்கலாம். இது உங்கள் டீ.வி. பார்க்கும் ஆசையைக் கட்டுப்படுத்துவதுடன் அல்லாமல் அப்படிப் பார்ப்பதற்காக ஒருவர் வீட்டிற்குச் செல்வது உங்கள் நட்பையும் பலப்படுத்தும்.

2. டீ.வி. வைத்துக் கொண்டிருப்பவர்கள், குழந்தைகளை, அவர்கள் டீ.வி. பார்க்கும் நேரத்தைக் கட்டுப்படுத்த முடியாவிட்டால், அதன் ஆதிக்கத்திற்கு உட்பட்டு, அவர்களின் நடத்தையில், படிப்பில் குறை கண்டால், அதை விற்று விடுவது நல்லது.

3. இன்னமும் ரொம்பக் கவரும்படி கலர் டீ.வி.யும், வீடியோவும் வாங்காமல் இருப்பது மிகவும் முக்கியம்.

4. அப்படி டீ.வி. மிகவும் அவசியம் என்று நினைப்பவர்கள், குழந்தைகள் டீ.வி. பார்க்கும் நேரத்தை, அவர்கள் பார்க்கும் நிகழ்ச்சிகளை ஒரு கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க வேண்டும். வீட்டுப் பாடம் முடிந்த பின்பே டீ.வி. குறிப்பிட்ட நிகழ்ச்சி முடிந்தவுடன் டீ.வியை அணைத்துவிட வேண்டும். இரண்டு வயதுக்குட்பட்ட குழந்தைகள் பார்க்கவே கூடாது போன்ற கண்டிப்பான விதிகளை அனுசரிக்க வேண்டும். குழந்தைகள் பார்க்கும் காட்சியானாலும், யாராவது பெரியவர்கள் கூட இருந்து பார்க்க வேண்டும். அச்சுறுத்தும் அல்லது புரிந்துக் கொள்ள முடியாத சம்பவங்களைப் பெரியவர்கள் விளக்கலாம்.

5. வழக்கமாக கட்டாயமாக ஒரே நேரத்தில் டீ.வி. பார்க்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளக்கூடாது.

6. குழந்தைகள் பார்க்கக் கூடாத நிகழ்ச்சிகளைக் குழந்தைகள் பக்கத்தில் இருக்கும் பொழுது பெரியவர்கள் பார்க்கக் கூடாது.

7. சாப்பாட்டு நேரத்தில் குழந்தைகள் படிக்கும் நேரத்தில் கட்டாயமாக டீ.வி அணைக்கப்பட்டிருக்க வேண்டும்.

8. வேறு எதுவும் செய்யத் தெரியாமல் டீ.வி. பார்க்கும் குழந்தைகளுக்கு, விளையாட, மற்றவர்களுடன் பழக, புஸ்தகங்கள் படிக்க, இயற்கையை அனுபவிக்க பெற்றோர்கள் சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும்.

9. டீ.வி.யை வீட்டின் மையமாக அமைக்காமல், ஒதுக்குப்புறமாக ஒரு அறையில் அலமாரிக்குள்ளோ, கண் மறைவாகத் துணியைப் போட்டு மூடியோ வைக்கவேண்டும்.

10. குழந்தைகளுக்குக் கதை சொல்வது, புஸ்தகம் படிப்பது, பாட்டு, ஸ்லோகங்கள் சொல்லிக் கொடுப்பது போன்ற நல்ல பழக்கங்களைப் பெற்றோர்கள் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.





# ஜெயலலிதாவை ஏற்க முடியுமா?



## செய்திமலர்

மகத்தான தேர்தல் வெற்றிக்குப் பிறகு ராஜீவ் காந்தியின் ஆட்சிமுறையில் ஒரு சுறுசுறுப்புத் தெரிகிறது. நிர்வாகத்தில் ஊழலை ஒழிப்பேன் என்று சபதம் எடுத்து அதை நிறைவேற்றுவதற்கு முழுமூச்சுடன் செயல்பட்டு வருகிறார். ஊழல் என்பது பல்வேறு மட்டங்களில் பல வகைகளில் வியாபித்திருப்பதாகும்.

இதுவரை பிடிபடாமல் இருந்த ஊழல் பெருச்சாளிகள் கையும் களவுமாகப் பிடிபட்டிருக்கிறார்கள். அயல் நாட்டு உளவு ஸ்தாபனங்களுக்கு ரகசிய தாஸ்தாவேஜுகளைப் பிரதி எடுத்து அனுப்பியவர்கள் ஜனாதிபதி மாளிகை, பிரதமர் அலுவலகம், பாதுகாப்பு, வணிகம், அணு, மின்னணு அமைச்சகங்களில் அந்தரங்கக் காரியதரிசிகளாக இருந்து 25 ஆண்டுகளாகத் தங்கு தடையில்லாமல் நாட்டின் ரகசியங்களைச் சில வியாபார நிறுவனப் பிரதிநிதிகளுக்கு விற்று வந்திருக்கிறார்கள் என்பதை அறிய ஆச்சரியமாகவும், பயமாகவும் இருக்கிறது. லஞ்ச ஊழல்தான் இவர்களை, இந்தத் தேசத்துரோக வழிகளில் ஈடுபடுத்தியிருக்கிறது.

லஞ்ச ஊழலுக்கு ஆதாரம் நாட்டில் பெருவாரியாக வழங்கிவரும் கறுப்புப் பணம். அரசு பட்ஜெட்டுக்கு மேல் இரண்டு பங்கு கணக்கில் வராத, வரி செலுத்தாத பணமாகப் புழங்கி வருகிறது. சினிமா, ஓட்டல், வீடு, மனை விற்பனைத் தொழில், கள்ளக் கடத்தல் முதலான துறைகளில் பெரும்பாலும் கருப்புப்பணமே செல்லுபடியாகி விடுகிறது. தொழிலதிபர்கள் லைசென்சு கோட்டா வாங்குவதற்கு அதிகாரிகள் மந்திரிகளுக்கு லஞ்சம் தருகிறார்கள். இதற்கும் கருப்புப் பணம் தேவைப்படுகிறது.

நாட்டில் 90 மக்கள் ஏழ்மையில் உழன்று அன்றாட வாழ்க்கைக்கே போராட வேண்டிய நிலையில். மேல் தட்டில் உள்ள சிலர் கருப்புப் பண வசதியுடன் சொகுசாக வாழ்க்கை நடத்துகிறார்கள்.

இந்த நிலைமையை மாற்றுவதற்கும் தக்க நடவடிக்கை எடுக்கப்போவதாக ராஜீவ்காந்தி அறிவித்திருக்கிறார். அவரது முயற்சிகள் வீண்போகாது என்று நம்புவோமாக....

இதுவரை பல பிரதமர்கள் செய்ய முற்பட்டு முடியாமற்போன ஒரு சாதனையை ராஜீவ்காந்தி செய்து காட்டியிருக்கிறார். பார்லிமெண்ட் கூடியதும் முதல் வேலையாகக் கட்சித் தாவல் தடுப்புச் சட்டத்தை அமலாக்கி இருக்கிறார். இதன்படி ஒரு கட்சிச் சின்னத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட வேட்பாளர் இன்னொரு கட்சிக்குத் தாவினால் அவர் லோக் சபை அல்லது

சட்ட மன்ற உறுப்பினர் பதவியை இழந்துவிடுவார். மீண்டும் தேர்தலில் போட்டியிட்டு வெற்றி பெற்றுவர வேண்டும். ஆனால் கட்சி உடைந்து, கணிசமான பகுதி இன்னொரு கட்சியுடன் இணைந்தால் இந்தச் சட்டம் பாதிக்காது. தனி நபர்களின் கட்சித் தாவலைத் தடை செய்யும். இந்தச் சட்டம் கட்சிகள் உடைவதைத் தவிர்க்க முடியாது. என்றாலும் இது வரவேற்கத்தக்க ஒரு நடவடிக்கையே. ஆட்சிகள் உறுதியாக நிலைத்து நீடிப்பதற்கு உதவும். குறிப்பாகப் பெருவாரியான மெஜாரிட்டி பெற்றுள்ள ராஜீவ்காந்திக்கு மிகவும் பயன்படும் சட்டம் இது.

* * *

எம். ஜி. ஆர். புனர்ஜென்மம் எடுத்து மீண்டும் ஆட்சித் தலைவராக பொறுப்பேற்றுள்ளதைப் பரவலாக எல்லோரும் வரவேற்றிருக்கிறார்கள். நவீன மருத்துவ வசதிகள் எந்த அளவுக்கு நோய்களுடன் போராடி உயிரை மீட்டுக் கொடுக்க முடியும் என்பதற்கு எம். ஜி. ஆர். ஓர் உதாரணம்.

* * *

ஜெயலலிதாவை ஒதுக்கி வைப்பதில் சில மந்திரிகள் தீவிரமாக இருந்தார்கள். எம். ஜி. ஆரின் மனைவி வி. என். ஜானகியின் பின்பலத்துடன் இவர்கள் இயங்கி வந்ததாகச் சொல்லப்படுகிறது. ஜெயலலிதா அபிமானிகள் அனைவரும் பொறுப்புக்களிலிருந்து விலக்கப்பட்டபோது அவர் வகித்து வந்த ராஜ்ய சபை கட்சித் துணைத் தலைவர் பதவியும் அவரிடமிருந்து பறிக்கப்பட்டுவிட்டது.

எம். ஜி. ஆர். திரும்ப வந்ததும் இந்தப் பூசலை ஒடுக்கு முகமாக சில நடவடிக்கைகளை எடுத்துள்ளார். ஜெயலலிதாவின் ஆதரவாளரான இளைஞர் அணித் தலைவர் திருநாவுக்கரசுக்கு தொடர்ந்து மந்திரிப் பொறுப்பும். போலீஸ் அதிகாரி மோகன்தாஸுக்கு பறிக்கப்பட்ட பதவியை மீட்டதும் அவர் எடுத்த முதல் நடவடிக்கையாகும். ஜெயலலிதாவை சுலபமாக கட்சியிலிருந்து ஒதுக்கி வெளியேற்றிவிட முடியாது என்பது சம்பந்தப்பட்டவர்களுக்கு உணர்த்தப்பட்டுவிட்டது எனலாம்.

* * *

இங்கிருந்து வடக்கே போன நட்சத்திரங்களில் ஸ்ரீதேவி ஹிந்திப் பட உலகில் ரேகா வகித்து வந்த முதல் ஸ்தானத்தைப் பிடித்து விட்டாராம். தொடர்ந்து வெற்றிப் படங்களில் நடித்து வருகிறார். அதிகபட்சப் பட எண்ணிக்கையும் பணமும் ஸ்ரீதேவிக்கு கிடைக்கிறது.

மாறாக ஆரம்பத்தில் ஒரு படத்தில் வசூல் சாதனையைப் புரிந்த கமலஹாசன் தொடர்ந்த தோல்விகளுக்குப் பிறகு ஹிந்தி மார்க்கெட்டை இழந்து விட்டுத் தமிழகத்துக்கே திரும்பிவிட்டாராம். ஹிந்திப் பட உலகில் அவரால் சாதிக்க முடியாததை ரஜனிகாந்த் சாதிக்க முயன்று வெற்றியும் கண்டு வருவதாகத் தெரிகிறது.

அமிதாப் பச்சன் பார்லிமெண்ட் உறுப்பினரான பின் நடிப்புத் தொழிலிலிருந்து விலகிக் கொள்ள முடிவு செய்திருப்பதும் ரஜினிகாந்துக்குச் சாதகமாக இருக்கிறது. அமிதாப் பச்சனின் 'ரோல்'களுக்கு ஏற்றவர் 'ரஜினிகாந்த்' என்பது ஹிந்தி பட முதலாளிகளின் ஏகோபித்த கருத்தாக இருக்கிறதாம்.

- ரங்கஸ்ரீ



வீட்டில் 0 வாட் விளக்கு நைட் லேம்பாய் எரிகிறது; கண்ணைக் குத்துகிறது இந்த வெளிச்சம். கலர், நைட் லெம்பாய் மாற்ற எளிய வழி. இருமல் மருந்துகள் டானிக்குகளுக்குக் கொடுக்கும் பச்சை, சிவப்பு, ஆரஞ்சு, நீல வண்ண, சிறிய கப்களை, பல்பின் மீது கவிழ்க்கவும். விரும்பும் நிறத்தில் இரவு விளக்கு எரிய விட்டு ஆனந்திக்கலாம்.

—கனகவல்லி.

# பாத்திரமறியுங்கள்




பாத்திரங்கள் வாங்குவதற்காகக் கடைக்குள் நுழைந்தால் எதை வாங்குவது என்று மலைத்து நின்றுவிடும் அளவுக்குப் பல ரகமான பாத்திரங்கள் — கண்ணாடி, ஜாடி வகை, பித்தளை, செம்பு, அலுமினியம், எவர் சில்வர் போன்றவை . எதைத் தேர்ந்தெடுப்பது என்று தீர்மானிப்பதற்கு முன்னர், பல உலோகத்தினாலான பாத்திரங்களைப் பற்றி நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

பாத்திரங்களைத் தேர்ந்தெடுக்கும்போது, அவை நீண்ட ஆயுளுக்குப் பயன்படுத்தும் வகையில் தயாரிக்கப்பட்டவையா, பாதுகாப்பானவையா, நமது வருமானத்திற்குள் அடங்கும் வகையில் விலை விடப்பட்டிருக்கின்றனவா என்றெல்லாம் இல்லத்தரசிகள் யோசிக்க வேண்டும்.

முதன்முதலாகக் கண்டுபிடிக்கப்பட்ட உலோகங்களில் ஒன்றான தங்கம் அரசர்களாலும், சக்ரவர்த்திகளாலும் பயன்படுத்தப்பட்டு வந்தது. தமது அன்றாட உபயோகங்களுக்கே அவர்கள் தங்கத்தாலாகிய பாத்திரங்களைப் பயன்படுத்தினர். தங்கம், உஷ்ணம், குளிர், காற்று, ஈரப்பசை போன்றவைகளால் பாதிக்கப்படுவது இல்லை. ஆனாலும் அது மிகக் குறைந்த அளவில் கிடைக்கின்றமையால் அதிக விலையுள்ளது.

பால், தண்ணீர் முதலியவை வைக்கும் பாத்திரங்கள் துத்தநாகத்தால் செய்யப்படுகின்றன. இந்த உலோகம் நச்சுத் தன்மையுடையது. பெரிய அளவில் சமைக்கும் போது, துத்தநாகத்தால் ஆன (டேக்சா) பாத்



பொதுவாக, பாத்திரங்கள் வாங்கும் போது அவைகள் எம்மாதிரியான உபயோகத்திற்குத் தேவைப்படுகிறது என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஸ்டெயின்லெஸ் ஸ்டீல், கண்ணாடி, களிமண் முதலியவைகளால் ஆகிய பாத்திரங்களில் சமைப்பது பாதுகாப்பானது. வெண்கலம், பித்தளை, தாமிரம் போன்றவைகளால் ஆகிய பாத்திரங்களைக் கூடியவரை நீர் சேகரித்து வைப்பதற்கு மாத்திரம் பயன்படுத்த வேண்டும். பிளாஸ்டிக்கால் ஆன பாத்திரங்களை உணவு வகைகளைப் பரிமாறுவதற்கும், பானங்கள், நீர் கொடுப்பதற்கும் பயன்படுத்தலாம்.

திரங்களைப் பயன்படுத்துகிறார்கள். உணவு சமைக்கப்படும்போது, உணவிலுள்ள உப்பு, புளி முதலியவற்றின் சேர்க்கையால் ஆஸிட் உண்டாகி, இது துத்தநாகத்துடன் கலக்கும்போது நச்சுத்தன்மை ஏற்படுகிறது.

இவ்வாறு தயார் செய்யப்பட்ட உணவை உட்கொள்ளும்போது, தலைசுற்றல், வயிற்றுப் போக்கு, தொண்டை அடைப்பு, வலிப்பு, சீரண உறுப்புக்களில் வலி போன்றவை ஏற்படும்.

உணவு பரிமாறுவதற்கும், பாதுகாப்பதற்கும், வெள்ளியாலான பாத்திரங்களைப் பயன்படுத்தி வந்தனர். இன்னும் சில வீடுகளில் அன்றாடம் வெள்ளிப் பாத்திரங்கள் பாதுகாப்பானவை. ஆனால் தற்போது வெள்ளியின் விலை விஷம் போல ஏறி இருப்பதால், எல்லோரும் அதைத் தம் அன்றாடத் தேவைகளுக்குப் பயன்படுத்த முடியாது.

அலுமினியப் பாத்திரத்தில் உணவு தயாரிப்பதால் கெடுதல் இல்லை என்றுதான் கூறப்பட்டது. ஆனால், சமீபகாலத்தில், அது கெடுதி விளைவிக்கிறது என்று கூறப்படுகிறது. குறைந்த புளிப்புள்ள உணவையோ அல்லது நீரையோ அலுமினியப் பாத்திரத்தில் வைத்துச் சூடேற்றும் போது, பாத்திரத்தின் உள்பாகம் கறுப்பாகிறது. அலுமினியத்திலிருந்து வெளியாகும் ஒருவித ஆக்ஸைடினாலும், உணவிலோ அல்லது நீரிலோ இருக்கும் உப்புக்களாலும் தான் இம்மாதிரி ஆகிறது. பின்பு, கறுப்பாகிய இந்தப் பாத்திரங்களில், அதிகப் புளிப்புத்தன்மையுள்ள உணவைச் சமைக்கும்போது, கறுப்புநிறத்திற்குக் காரணமான ஆக்ஸைடு புளிப்பில் கலந்து விடுவதால், கறுமை நீங்கிப் பாத்திரம் பளபளப்பாகிறது.

சாதாரணக் களிமண், சைனாகளிமண், எனமல், கண்ணாடி முதலியவைகளால் ஆன பாத்திரங்களையும்சமைப்பதற்குப் பயன்படுத்துவதுண்டு. உணவு பரிமாறுவதற்கும், நீரைச் சேமித்து வைக்கவும் இவைகளைப் பயன்படுத்துகிறார்கள். அதிக சூட்டினால் உடையாமல், பாதிக்கப்படாத ஒரு குறிப்பிட்ட வகைக் கண்ணாடியால் செய்யப்பட்ட பாத்திரங்களும் உண்டு.

தற்காலத்தில் எவர்சில்வர் பாத்திரங்களையே அடுப்பில் வைத்து உணவு தயாரிப்பதற்கும், மற்றும் பலவற்றிற்கும், பயன்படுத்துகிறார்கள். எளிதில் சுத்தம் செய்ய முடியும் என்பதாலும், பார்ப்பதற்குப் பளபளப்பாக இருப்பதாலும், எவர்சில்வர் சாமான்களின் விற்பனை சமீப காலத்தில் மிக அதிகரித்திருக்கிறது.

பிளாஸ்டிக் எத்துணை அளவுக்குப் பாதுகாப்பானது என்பது பற்றிய சர்ச்சை தற்போது உண்டாகி இருக்கிறது. பிளாஸ்டிக் தயாரிப்பில் பயன்படுத்தப்படும் பல பொருள்களைப் பற்றிய விவரங்கள் நமக்குச் சரிவரத் தெரியாததால் பிளாஸ்டிக் பாதுகாப்பானதா என்பதைப் பற்றிய சந்தேகம் எழுகிறது.

பொதுவாக, உலர்ந்த, எண்ணெய் அல்லாத பண்டங்கள், அதாவது சர்க்கரை, பருப்புவகைகள், மாவு வகைகள் போன்றவற்றைப் பிளாஸ்டிக் டப்பிகளில் வைக்கும் போது எந்தக் கெடுதலும் விளைவதில்லை. ஆனால் டப்பிகளில் கீறல் இருந்தாலோ, அல்லது உடைந்திருந்தாலோ, கெடுதி விளையும்.

பிளாஸ்டிக் தயாரிப்பில் பிளாஸ்டிசைசர்கள் -எனும் பொருளும் சேர்க்கப்படுகிறது. பிளாஸ்டிக் உடையாமல் வளைந்துக் கொடுக்கும் தன்மையை, இந்த பிளாஸ்டிசைசர் எனும் பொருள் ஏற்படுத்துகிறது.



இப்பொருள் பாலிவினைல் குளோரைடு என்னும் பிளாஸ்டிக் தயாரிப்பில் பயன்படுத்தப்படுகிறது. பிளாஸ்டிசைசர் மிகுந்த கெடுதி விளைவிப்பது என்பது பிற்பாடு தெரிய வந்தது.

பிளாஸ்டிக் தயாரிப்பில் பயன்படுத்தப்படும் பிளாஸ்டிசைசர்களில் மிக நச்சுத் தன்மை வாய்ந்த பாலிக்ளோரினேட்டட் பைபினைல்ஸ், தாலேட்டுகள், பாஸ்பேட்டுகளும் இருக்கின்றன. இவை, கருப்பையில் உள்ள குழந்தையைச் சுற்றிப் பாதுகாப்பாக உள்ள நச்சுக்கொடியையும் தாண்டிச் சென்று குழந்தையைப் பாதிக்கும் தன்மையுடையவை என்றும், இவ்வாறு பாதிக்கப்படும் போது, குழந்தை இறந்து பிறக்க நேரிடலாம் அல்லது உயிருடன் பிறந்தால், குறைபாடுகள் உள்ள

குழந்தையாக இருக்கலாம் என்றும் கூறப்படுகிறது. தாலேட்டுகள், நரம்பு மண்டலத்தையும், கண் பார்வையையும் பாதிக்கக்கூடியன என்றும் கண்டறியப்பட்டுள்ளது.

சாதாரண பிளாஸ்டிக் டப்பாக்களில் (உணவல்லாத பண்டங்களைப் பேக் செய்யப் பயன்படுபவை.) தின்பண்டங்கள் போன்றவற்றை வைப்பது, பாதுகாப்பானது அல்ல என்று சொல்லப்படுகிறது. எடுத்துக்காட்டாக, நம்மில் பலர் சோப்புப் பவுடர் போன்றவை பேக் செய்யப்பட்ட, கவர்ச்சிகரமான பிளாஸ்டிக் டப்பாக்களால் கவரப்பட்டு, டப்பாக்களுக்காகவே சோப்புப் பவுடர் போன்றவற்றை வாங்கிப் பிறகு, பவுடர் தீர்ந்தவுடன், அந்த டப்பாக்களைத் தின்பண்டங்கள் வைத்துக் கொள்ள உபயோகிக்கிறோம். இது மிகவும் அபாயமானது.

மேலும், பலவிதமான, பழைய பிளாஸ்டிக்குகள் (ஓட்டை, உடைசல் போன்றது.) போன்றவற்றை உருக்கி (**Recycling**) மறுபடியும் பிளாஸ்டிக் சாமான்கள் தயாரிக்கிறார்கள். இந்த முறையில் செய்யப்படும் பிளாஸ்டிக் டப்பாக்களில் உணவுப் பண்டங்களை வைப்பது மிகவும் ஆபத்தானது.

ஐ.எஸ்.ஐ. யினால் அங்கீகரிக்கப்படாத பொருள்களைப் பயன்படுத்தித் தயாரிக்கும் பிளாஸ்டிக்கால் ஆகிய பொம்மைகள் குழந்தைகளுக்கு எமனாக ஆகலாம்.

இனி, சாதாரணமாக, எல்லோர் வீட்டிலும் பயன்படுத்தப்படும் பித்தளைப் பாத்திரம் எவ்வளவு பாதுகாப்பானது என்று பார்ப்போம். சில சமயங்களில், நெய், வெண்ணெய் போன்றவை ஈயம் பூசப்பட்ட பித்தளைப் பாத்திரத்தில் வைக்கப்படுகிறது. பூசப்படும் ஈயம் சுத்த வெள்ளி ஈயமாக இல்லாமல் காரீயமாக இருந்து விட்டால் பி ள ம் பி ச ம் எனும் கோளாறு உடலில் ஏற்படுகிறது. இந்நாட்களில் ஈயம் அதிகவிலையாக இருப்பதால் பெரும்பாலும், ஈயம் பூசுகிறவர்கள் காரீயத்தையே பூசி ஏமாற்றிவிடுகிறார்கள். கார், லாரி பேட்டரிகள், தீர்ந்து போன பற்பசை ட்யூபுகள் ஆகியவற்றிலிருந்து காரீயத்தைச் சேகரித்துப் பூசுவதற்குப் பயன்படுத்திவிடுகிறார்கள்.

மேலும், பித்தளைப் பாத்திரத்தில் காய்ச்சப்பட்ட பாலை உட்கொள்ளும் குழந்தைகளுக்கு சிரோசிஸ் அதாவது ஈரல் குலைக் கட்டி நோய் ஏற்படுகிறது என்று ஆராய்ச்சி மூலம் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

அளவுக்கதிகமான தாமிரச் சத்து குழந்தையின், கல்லீரல் மண்ணீரல்மேல் படிந்து, கல்லீரலும், மண்ணீரலும் பாறை போலக் கெட்டியாகிவிடும். இந்தக் குழந்தைகளின் மலம், கறுமையாக இருக்கும். மூத்திரம் மஞ்சள் நிறமாக இருக்கும். கண்கள், சருமம், மஞ்சளாக இருக்கும்.

ஆகவே பித்தளைப் பாத்திரங்களைப் பயன்படுத்துவதை அறவே விட்டுவிடுவது நல்லது. சுத்தம் செய்வதற்கு வேண்டிய புளியின் விலையும் மிகப் புளிப்பாக இருக்கிறது. ஈயம் விற்கிற விலையில் அடிக்கடி ஈயம் பூசுவதும் முடியாததாகும்.

தற்காலத்தில், ஒருவகையான, அடிப்பிடிக்காத சமையல் பாத்திரங்கள் விற்பனைக்கு வந்திருக்கின்றன. உணவுப் பண்டங்களை எண்ணெயில் பொரித்தெடுக்கப் பயன்படும் வாணலிகள், தோசைக்கல் டோஸ்ட்டர்கள் போன்றவைகளில் ஒருவித பசை பூசப் படுவதால், இவைகள் அடிப் பிடிப்பதில்லை. இப்பாத்திரங்களில் சமைப்பது பாதுகாப்பானது.

ஆனாலும், இப்பாத்திரங்களை உபயோகிக்கும் போது, உஷ்ணத்தை மிக அதிகமாக்காமலும், இவைகளைக் காலியாக எரியும் அடுப்பின் மேல் வெகுநேரம் வைக்காம



# "நம்பினோர் கைவிடப் படார்"

திரு. வெள்ளைச்சாமி. அவரது கிராமத்திலேயே முற்போக்கு விவசாயி. ''வேளாண்மைப் பண்டிதர்'' என்று பெயர் பெற்றவர். நிறைய நில புலன்கள். தமது வயல்களைக் கண்ணின் மணிபோலக் காப்பதில் மிகுந்த அக்கரை கொண்டவர்.

''இருகரங்களைப் போல சக்தி தருகிறது என் நிப்போ ஸ்பெஷல். டிரான்சிஸ்டரில் போட்டு, எனக்கு அவசியமான பண்ணைச் செய்திகள் கேட்கிறேன். இரவு நேரத்—தில் வயல் வெளிக்கு வேலைக்கும், காவலுக்கும் உற்ற துணையாக என் டார்ச்சில் உபயோகிக்-கிறேன்.''

சீரான, நம்பிக்கையான சக்தி. பளிச்சென வெளிச்சம், துல்லியமான ஒலி — எப்போதும்.

நிச்சயமில்லாத உழவுத் தொழிலில் நிச்சயமாக நான் நம்புவது — நிப்போ.

**National NIPPO**
**Batteries**

**"ஆம்! நிப்போவை நம்பினோர் என்றும் கைவிடப்படார்".**




**நிப்போ பாட்டரிகள்: நேஷனல்-ஜப்பானின் தொழில் நுட்பத்தில் தயாரானவை**

INL/7C/84/TAM

லும், முன்னெச்சரிக்கையாக இருக்க வேண்டும். இவைகளைச் சுத்தம் செய்யும்போது, கடினமான, முரட்டுத்தனமான பிரஷ்கள், பவுடர்கள் பயன்படுத்தக் கூடாது. பயன்படுத்தினால், பாத்திரங்களிலுள்ள பசை பெயர்ந்து அதனால் கெடுதி ஏற்படலாம். கிளறும் போது, பாத்திரங்களைச் சுரண்டிவிடாமல், மெல்லிய, நைசான கரண்டிகளையே பயன்படுத்தவேண்டும். சில கரண்டி விளிம்புகள் கத்திப் போன்று கூர்மையாக இருக்கும். இவைகளால் கிளறும்போது பூசப்பட்டுள்ள பசை பெயர்ந்து விடலாம். தோசையைத் திருப்ப உதவும் தோசைத் திருப்பியும் அதிகக் கூராக இருக்கக் கூடாது. எனவே, இம்மாதிரியான பாத்திரங்களைப் பயன்படுத்தும்போது மரத்தாலாகிய கரண்டிகள்,. ஸ்பாச்சுலா அதாவது தட்டையான கரண்டிகள் போன்றவைகளையே உபயோகிப்பது நல்லது. சூடான நீரில் சோப்புத் தூள் கலந்து அந்நீரில் நனைக்கப்பட்ட நுரைப்பஞ்சையோ அல்லது துணியையோ வைத்து இப்பாத்திரங்களைச் சுத்தம் செய்வது நல்லது.

சமீப காலத்தில் அநேகமாக எல்லா ஜனங்களும் விரும்பி வாங்குவது ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் எனும் உலோகத்தால் செய்யப்படும் பாத்திரங்கள். பார்ப்பதற்குப் பளபளப்பாகவும், எளிதில் சுத்தம் செய்யக் கூடியதுமான இப்பாத்திரங்கள் மக்களைக் கவர்ந்திருப்பது ஆச்சரியகரமானதல்ல. இது எத்துணைப் பாதுகாப்பானது என்பதையும் கவனிப்போம்.

குரோமியம் 18 சதவீதம், நிக்கல் 8 சதவீதம், மீதி 74 சதவீதம் இரும்பு ஆயவைகள் கலந்தது ஸ்டெயின்லெஸ் ஸ்டீல். காந்தத்தால் இழுக்கப்படாத தன்மை, கறைபடாத தன்மை, நீடித்து உழைக்கும் தன்மை ஆகியவற்றை ஸ்டெயின்லெஸ் ஸ்டீலுக்குக் கொடுப்பது நிக்கல். வழுவழுப்பான, பளபளப்பான தன்மையைக் கொடுப்பது குரோமியம். குரோமியம், நிக்கல், இரும்பு— இந்த மூன்று உலோகங்களில் நிக்கல்தாம் மிக அதிக விலையுடையதாகும். ஒரு கிலோ நிக்கலின் விலை, அதே எடையுள்ள இரும்பின் விலையைப் போல பன்னிரண்டு மடங்கும், குரோமியத்தின் விலையைப் போல மூன்று மடங்கும் அதிகமானது.

ஆகையால் சில பாத்திரத் தயாரிப்பாளர்கள், இரும்பு, குரோமியம் மாத்திரம் உபயோகிக்கிறார்கள். இவ்வாறு தயாரிக்கப்பட்ட பாத்திரங்கள் பத்து, பதினைந்து வருடங்கள் மட்டுமே பயன்படும். ஆகவே, ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் வாங்கும்போது காந்தத்தை வைத்துப் பரீட்சை செய்து வாங்க வேண்டும். பல கடைகளில் காந்தம் வைத்திருக்கிறார்கள். நிக்கல் கலந்திருந்தால், காந்தம் பாத்திரத்தோடு ஒட்டிக் கொள்ளாது. நிக்கல் இல்லை என்றால் ஒட்டிக் கொள்ளும்.

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் தகடுகள்

இந்தியத் தகடுகள், ஜப்பானியத் தகடுகள் —என்று இரு வகையுள்ளன. இந்தியத் தகடுகளில் செய்யப்பட்ட பாத்திரங்களை, ஜப்பான் ஸ்டீலில் செய்யப்பட்ட பாத்திரங்கள் என்று கூறி ஏமாற்றிவிடுகிறார்கள். பாத்திரத்தின் மேல் பாகத்தை உன்னிப்பாகக் கவனித்துப் பார்த்தாலும், அல்லது பூதக் கண்ணாடியால் பார்த்தாலும், பாத்திரத்தில் சிறு சிறு பள்ளங்களோ அல்லது முண்டு முண்டாகவோ இருப்பதைக் காணலாம். இப்படிப்பட்ட பாத்திரங்கள் இந்திய ஸ்டீலில் தயாரிக்கப்பட்டவையே. ஏனென்றால் இந்தியாவில் இன்னும் பழைய செய்முறைகளையே பின்பற்றுகிறார்கள். பழைய செய்முறையைப் பயன்படுத்தும்போது, பாத்திரங்களின் மீது சிறு சிறு ஸ்டீல் துண்டுகள் ஒட்டிக் கொண்டு சரியான ஃபினிஷ் வராது. ஜப்பான் ஸ்டீல் பாத்திரங்களின் ஃபினிஷ் நன்றாக இருக்கும்.

ஸ்டீல் பாத்திரங்களைக் கழுவிச் சுத்தம் செய்தவுடன், ஈரம் போக நன்றாகத் துடைத்து வைக்க வேண்டும். இல்லாவிடில் சீக்கிரம் துருப்பிடித்துவிடும். மேலும், இப்பாத்திரங்களைச் சோப் பவுடர் கொண்டு கழுவ வேண்டும். சாம்பல் போட்டுத் துலக்கினால் பாத்திரங்கள் மேல் கீறல்கள் விழும். இப்பாத்திரங்களில் ஊறுகாய்கள் வைப்பது தவிர்க்கப்பட வேண்டும். ஏனென்றால் ஸ்டீலோடு ஊறுகாயிலுள்ள புளிப்புச் சத்து சேரும்போது நச்சுத்தன்மை ஏற்படுகிறது. தொழிற்சாலைகளில் பயன்படுத்தும் ஸ்டீல் பாத்திரங்கள் புளிப்புச் சத்தினால் பாதிக்கப்படாத ஸ்டீல் தகடுகளைக் கொண்டு தயாரிக்கப்படுவதால் கெடுதி விளைவதில்லை.

வீட்டுத் தோட்டத்தில் உள்ள எலுமிச்சை மரத்தில் பிஞ்சுகள் எல்லாம் உதிர்ந்து விடுகிறது! இதற்கு என்ன செய்வது? என்று பலர் கவலைப்படுகிறார்கள். இந்தப் பிஞ்சுக் காய்கள் உதிர்வதைத் தடுக்க 20 பி. பி. எம். அடர்வு திறன் உள்ள 2, 4, 5—டி (20 மி.கி./லிட்டர் நீர்) என்னும் அளவில் வளர்ச்சி ஊக்கியைத் தெளிக்க வேண்டும். இந்த மருந்து உரக்கடையில் கிடைக்கும். இதனைத் தெளிக்கும் பொழுது, இந்த மருந்தைச் சுத்தமான நீரில் கலந்து தெளிக்க வேண்டும்.

—மதுபாலன்.

# கை முதல் கால் வரை...

மல்லிகா & பார்வதி

அழகுக் கலையில் தலை, முகம் என்ற வரிசையில் அடுத்து வருவது கை, கால் நகங்களுக்கு நக பாலிஷ் போட்டுக் கொள்வது. அதை எப்படிப் போட்டால் நகங்கள், கை,கால்கள் பளபளக்கும் என்று பல பெண்களுக்குத் தெரியவில்லை. மேக்கப் போட்டாயிற்று. கடைசி நிமிடத்தில் கிடைக்கும் ஐந்து நிமிடங்களில் நகங்களை ஒழுங்கு படுத்தாமல் நெயில் பாலிஷைத் தீட்டிக் கொண்டு கிளம்பியாயிற்று. போன இடத்தில் வேறு ஒருவர் கை,கால்கள் பளபளக்க நக பாலிஷ் போட்டுக் கொண்டிருக்கிறார். அதைப் பார்த்தவுடன் நமது கைகள் நம்மை யறியாமல் மறைந்து கொள்ள இடம் பார்க்கும். கால்களைப் புடவையை நன்றாக இழுத்து விட்டு மூடிக் கொள்வோம். ஏன் அப்படி? நக பாலிஷ் போடுமுன் முறைப்படி கை,கால்களைச் சுத்தம் செய்து, பழைய நக பாலிஷ் இருந்தால் அகற்றிவிட்டு, நகத்தைச் சீர்படுத்திக் கடைசியில் நகபாலிஷ் போட வேண்டும்.





நகங்கள் மூலம் பலவித தொத்து நோய்கள் பரவ வாய்ப்பு உண்டு. பலருக்கு நகங்கள் சொத்தை விழுந்து தொல்லை கொடுக்கும். சிலருக்கு நகங்கள் வளரும் போது குறுக்கே உடைந்து விடும். கால்சியம் குறைவினால் நகங்கள் உடைந்துவிட வாய்ப்பு உண்டு. எனவே, கால்சியம் மாத்திரைகள் ஒரு 'கோர்ஸ்' எடுத்துக் கொண்டு, உணவில் ஜெலடின் சத்து நிறைந்த பொருட்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஈஸ்ட் மாத்திரைகள் பல நக தொத்து வியாதிகளைக் குணப்படுத்தும். நல்ல ரக வளர்ச்சி என்பது சத்துள்ள உணவிலும், ஆரோக்கியமான உடல் நலத்திலும், உடற்பயிற்சியிலும் இருக்கிறது. நல்ல இரத்த ஓட்டமும் நக வளர்ச்சிக்கு ஒரு காரணமாகும்.

முதலில் நகங்களில் இருக்கும் பழைய நக பாலிஷை ரிமூவர் கொண்டு பஞ்சினால் துடைத்து எடுத்து விட வேண்டும். நகத்தின் கீழிருந்து மேல் நோக்கிப் பஞ்சினால் அழுத்தித் துடைத்தால் பழைய பூச்சு அழிந்து விடும்.

பிறகு **Emery Board** கொண்டு நகங்களை ராவி விட வேண்டும். அவ்வாறு செய்யும் பொழுது நகங்களை **Oval shape** -இல் கொண்டு வர ஒரு பக்கமாக நடுப்பகுதியை நோக்கி ராவ வேண்டும். மறுமூலையில் செய்யும் பொழுதும் அவ்வாறே செய்ய வேண்டும். மேலும் கீழும் மாற்றி ராவக் கூடாது. இதனால் உடைந்த பிளவுபட்ட நகங்கள் சீராகும்.

3. வெதுவெதுப்பான சோப்பு நீரில் சிறிது உப்பு போட்டு கைகளை அதனுள் சிறிது நேரம் வைத்திருக்க வேண்டும். இதன் மூலம் கைகளில் உள்ள அழுக்குகள், விரல் நக இடுக்குகளில் உள்ள அழுக்குகள் நீங்கும்.
4. கைகளை வெளியே எடுத்து டவலினால் நன்கு ஈரம் போகத் துடைக்கவும்.
5. கைகளில் கிரீம் தடவி நன்றாக மசாஜ் செய்யவும். மசாஜ் செய்யும்பொழுது விரல் நுனிகளில் ஆரம்பித்து மேல் நோக்கி மணிக்கட்டு வரை செய்ய வேண்டும். இதன் மூலம் இரத்த ஓட்டம் சீராகி, கைகள் மிருதுவாகும்.
6. ஆரஞ்சு ஸ்டிக்கின் பின்புறமுள்ள அகன்ற பாகத்தால் நகத்தின் அடிப் பாகத்தை (விரலும் நகமும் சேரும் பகுதி) கீழ்நோக்கி மெதுவாகத்தான் தள்ள வேண்டும்.

7. நகங்கள் சற்று நீளமாக இருந்தால் தான் நக பாலீஷ் போட்டால் நன்றாக இருக்கும். அடிப்படையாக முதல் பூச்சு நக பாலீஷ் போடவும். வண்ணம் கெடாமல் தவிர்க்க நக முனைகளின் அடிப் பாகத்தில் நக பாலீஷைத் தடவ வேண்டும்.

மிருதுவான அல்லது உடையக் கூடிய நகங்கள் உள்ளவர்கள் இரண்டு கோட் பாலீஷ் போடுவது நல்லது. நக பாலீஷ் போடும் போது முக்கியமாகக் கவனிக்க வேண்டியது பாலீஷை நகத்தின் கீழிருந்து முனையை நோக்கித் தடவ வேண்டும்.

முதல் பூச்சு காய்ந்தவுடன் இரண்டாவது பூச்சு போடவும். தேவையானால் மூன்றாவது பூச்சும் போடலாம். நக முனைகள், ஓரங்கள் ஆகியவற்றை நன்கு பார்த்து எங்கும் விடாமல் சரியாய் நக பாலீஷைப் பூசவும்.

பிறகு, நன்றாகக் கிட்டத்தட்ட 15 நிமிடங்கள் வரை விடுங்கள். எல்லா நகங்களிலும் பாலீஷ் பூரணமாகக் காய்ந்தவுடன், அது உதிராமல் நிலைத்திருக்க ஒரு பாத்திரத்தில் ஐஸ் வாட்டர் எடுத்து அதில் நகங்களைச் சற்று நேரம் அமிழ்த்தி வைத்திருக்கவும். இப்படிச் செய்தால் பாலீஷ் நீண்ட நாட்கள் நிலைத்து நிற்கும்.

இவ்வாறு வாரம் ஒரு முறை செய்து வந்தால் கைகளும் நகங்களும் மெருகோடும், பொலிவோடும் ஒளி வீசும்.

இதைத் தவிர தினமும், இரவு படுக்கும்முன் கைகளுக்குக் க்ரீம் போட்டுக் நறைந்து ஒரு மணி நேரமாவது மசாஜ் செய்துவந்தால் இரத்த ஓட்டம் சீராகி, கைகள் மிருதுத் தன்மை பெற்று மிளிரும்.

சிலருக்குக் கைகளின் தோல்கள் நிறம் மங்கிக் காணப்படும். இதற்கு எலுமிச்சம் பழத்தை இரண்டாக வெட்டி, கைகளில் தேய்த்து வந்தால் பலன் கிடைக்கும்.

பல பெண்களுக்கு கைகளில் அதிக அளவில் சுருக்கங்கள் இருக்கும். இதற்கு அதிக மான அமிலத்தன்மையே காரணம். ஆனால் இது வயதான தோற்றத்தைக் கொடுக்கும். இதற்கு **Wax treatment** மெழுகு சிகிச்சை நல்ல பலனளிக்கும்.



# பதிவு செய்வது நல்லது!



## மாதர் சங்கம் நடத்துவது எப்படி?

### சங்கம் பதிவு செய்யப்படும் முறை:

சங்கங்கள் என்பது பொதுவாகப் பல துறைகளில் நடந்து வருகிறது. இதில் எல்லா சங்கங்களும் பதிவு செய்யப்பட்டு இருக்கிறது என்று கூற முடியாது. சந்தா வசூலித்து நடத்துவதாலும், பின்னால் விஸ்தரிக்கப்பட்டு ஏதாவது ஆக்கப் பூர்வமான தொண்டுகள் அல்லது சமூக நல நிறுவனங்கள், அல்லது பள்ளிக்கூடங்கள் அல்லது சுயவேலை வாய்ப்புத் தரும் திட்டங்கள் இப்படி ஏதாவது நடத்த வேண்டுமென்ற நிலை வரும்பொழுது அந்தச் சங்கம் அரசாங்கத்தில் பதிவு செய்யப்பட்டு இருக்கிறது என்பதால் பொது மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகிறது. ஆகவே சங்கங்கள் பதிவு செய்யப்படுதல் நல்லது என்றே சொல்லலாம்.

சென்னையைப் போன்ற பெரிய நகரங்களிலும், சிறு நகரங்களிலும் கிராமப்புறங்களிலும் கூட சப் – ரிஜிஸ்திரார் அலுவலகம் இருக்கிறது. இந்த சப் – ரிஜிஸ்திரார் அலுவலகத்தில் திருமணப் பதிவு, நிலம் விற்க வாங்கப் பதிவு, உயில் பதிவு, என்பது போல் சங்கங்கள் பதிவு செய்யும் பகுதியும் இருக்கிறது. இதற்கு என்று தனியாக உதவி புரியும் பணியாளர்கள் இருக்கின்றனர்.

சங்கத்தைப் பதிவு செய்வதற்கு முன்பு, முதலில் சொல்லியபடி **Aims and objectives, Memorandum and Byelaws,** நிர்வாகக் குழு, செயற்குழு, இவைகள் தயார் செய்ய வேண்டும். இதை "ஆவணம்" என்கிறார்கள். இதை நாம் எழுதும் போது முக்கியமாகச் செய்ய வேண்டியது: தெரிந்தவர்கள், சிநேகிதர்கள் என்று விசாரித்துத் தெரிந்து கொள்வதைக் காட்டிலும், அந்தப் பதிவு அலுவலகத்தில் பணிபுரியும் உதவியாளர்கள் யாரையாவது சந்தித்து விவரங்கள் கேட்க வேண்டும். நமது சங்கத்திற்குத் தகுந்த மாதிரியும், நாம் பின்னால் அதை ஒருவேளை பெரிய அளவில் விவரித்துக் கொண்டு போகும்படியான நிலை வரக்கூடும் என்றும் ஒரு உத்தேசமாக பை - லாஸ் போட்டுக் கொள்ளலாம். அதற்கு ஒரு புத்தகம் இருக்கிறது. **Tamilnadu Societies Registration Act** *1975* – **Registration Rules** - *1978* என்று பெயர். இது ஆங்கிலம், தமிழ் இரண்டிலும் இருக்கும்.

அதன்படி **Aims and objectives Bye-laws** தயாரித்து இவைகளை 3 நகல்கள் எடுக்க வேண்டும். தவிர தலைவி, உபதலைவி, செயலாளர், பொருளாளர், காரியக்குழு அங்கத்தினர்கள் இவர்கள் பெயர், விலாசம், இவர்களுக்கு சமூகத்தில் உள்ள அந்தஸ்து (அதாவது, குடும்பத்தலைவி, டாக்டர், பள்ளிக்




கூட ஆசிரியை என்று ஏதாவது ஒரு அந்தஸ்து உள்ளவர்களாக இருப்பவர்கள் இந்த விவரங்கள் எழுத வேண்டும். பிறகு அந்தப் புத்தகத்தில் பாரம் நெ. 1 என்று இருக்கும். அதன்படி இந்த விவரங்களைத் தயாரிக்க வேண்டும்.

சங்கம் தொடங்கி மேற்படி நடைமுறைகள் தயாரானதும் சப் – ரிஜிஸ்திரார் அலுவலகம் என்று சொல்லப்படும் பதிவு அலுவலகத்திற்குச் சென்று, அங்கு இருக்கும் தலைமைப் பதிவின் முன்பு சமர்ப்பிக்க வேண்டும். அவர் அதைப் படித்துவிட்டு, பதிவு செய்வார். அதற்கு ஒரு குறிப்பிட்ட தொகை இருக்கிறது. அந்தத் தொகையைக் கட்டியபிறகு ரசீது தருவார்கள். எப்பொழுதும் நகலைத்தான் **True Copy** என்று தலைவியாக இருப்பவர் கையெழுத்துப்போட்டுத் தர வேண்டும். **original** என்பதை அங்கு வைத்துக் கொள்ள மாட்டார்கள். அந்த **Original**–ல் தலைவி, உபதலைவி, செயலாளர், பொருளாளர் இன்னும் 3 கமிட்டி அங்கத்தினர்கள் உட்பட ஏழு அங்கத்தினர்கள் கையொப்பம் இட வேண்டும். பிறகு பதிவாளர் அலுவலகத்திலிருந்து சங்கத்திற்குப் பதிவு எண் தபாலில் அனுப்பி விடுவார்கள். இந்தப் பதிவு எண், சங்கத்தின் பதிவு செய்யப்பட்ட **Document** இவைகள் தலைவியின் இல்லத்தில் அவர்கள் பொறுப்பில் இருக்க வேண்டும். சங்கத்திற்கு என்று அலுவலகம் என்று இருந்தால் அதில் வைக்கலாம்.

பதிவு செய்யப்பட்ட சங்கங்களுக்கு என்றுமே பொது மக்களிடம் மதிப்பு உயர்ந்து இருக்கும். தவிர நன் கொடைகள் வரக்கூடிய சமூக நல நிறுவனங்கள், வேறு ஏதாவது திட்டங்கள் இருந்து செயலாற்றும் சங்கங்களுக்குப் பொது மக்கள் தரக்கூடிய நன்கொடைக்கு வருமான வரிவிலக்கு உண்டு. இது பதிவு செய்யப்பட்ட சங்கங்களுக்குத்தான் கிடைக்கும். இது ஒரு ப்ளஸ் பாயிண்ட் என்று கூறலாம். தவிர அரசாங்க சமூக நல போர்டின் மூலமாக நமக்கு ஏதாவது உதவி என்றாலும் பதிவு செய்யப்பட்ட சங்கமாக இருந்தால் தான் தருவார்கள்.

ஆனால் பதிவு செய்யப்பட்டபின் சங்கங்கள் நாம் எழுதித் தயாரித்துப் பதிவு செய்யப்பட்ட **Bye - laws**ஐ அனுசரித்து நடத்தல் வேண்டும். வருடம் ஒருமுறை ஜெனரல் பாடியைக்கூட்ட வேண்டும். வரவு செலவினங்களைச் சங்கத்திற்கு என்று ஒரு ஆடிட்டரை வைத்துப் பரிசீலிக்கப்பட்டு, பேலன்ஸ் ஷீட் தயாரித்து அனுப்புதல் வேண்டும். மினிட்ஸ் புக், அங்கத்தினர்களின் பதிவுப் புத்தகம் (ரிஜிஸ்டர்) இவைகளைச் சரிய முறையில் வைத்திருக்க வேண்டும். என்பது மிகவும் முக்கியம். 1. இதில் ஒவ்வொரு கமிட்டி மீட்டிங் நடக்கும் தேதி, இடம், நேரம் இவைகளைக் குறிப்பிட வேண்டும். 2. அன்றைய அஜண்டா–வைக் குறிப்பிடவேண்டும். 3. அங்கத்தினர்களின் கையெழுத்தை வாங்க வேண்டும். 4. கூட்டத்தில் நடந்தவைகள் முக்கியமாகத் தீர்மானங்கள் பதிவு செய்யப்பட வேண்டும். 5. பொருளாளர் பட்ஜெட் நிலைமை பற்றிக் கூறியவுடன் அதையும் சென்ற மாதத்து வரவு செலவினங்களையும் பதிவு செய்தல் வேண்டும். 6. எழுதப்பட்ட இந்த மினிட்ஸ் அடுத்த மாதக் கூட்டத்தில் படிக்கப்பட்டு அங்கத்தினர்கள் ஒப்புதல் பெற்று, தலைவி ஒப்புதல் கையெழுத்துப் போட வேண்டும். 7. இதைப் படிக்கும்பொழுது, ஏதாவது



இப்போது!

# ஜான்ஸன்ஸ் பேபி கிரீம் இப்புதிய கவர்ச்சியான பேக்கிலே




இப்போது உங்களுக்கு கிடைக்கிறது— நம்பகமான மென்மையான ஜான்ஸன்ஸ் பேபி கிரீம்— இப்புதிய கவர்ச்சியான இளஞ்சிவப்பு மற்றும் வெண்ணிறப் பேக்கிலே.

தூய்மையான, மென்மையான ஜான்ஸன்ஸ் பேபி கிரீம், உங்கள் குழந்தையின் முழங்கால்கள், முழங்கைகள், தோள்பட்டை மற்றும் மூக்கினைப் பாதுகாத்து இதமளிக்கிறது. குழந்தைக்கு அரைத் துணியால் ஏற்படும் சிரமத்தைக் குறைத்து சுகமளித்து மகிழ்ச்சியூட்டுகிறது.

உங்கள் குழந்தைக்கு எப்போதுமே உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் பேபி கிரீம். காரணம், உங்கள் குழந்தை உலகிலோர் ஒப்பிலா மணி!

Johnson & Johnson

© J&J

ஜான்ஸன்ஸ் பேபி கிரீம்—இளஞ் சருமத்தை மிகச் சிறப்பாக அறிந்தோர் அளிப்பது

OBM/9403-TAM





சேலம் எவர்சில்வரில் தயாரிக்கப்பட்ட பாத்திரங்கள் எல்லா பிரபலமான பாத்திரக்கடைகளிலும் கிடைக்கும்.

"வீட்டில் கல்யாணம் என்றாலே எங்களுக்கு ஏகக்குஷி!
எங்கள் மூன்றாவது பெண்ணிற்கு கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது.
கடைக்குட்டியான அவளுக்கு வீட்டில் ஏகச் செல்லம். வளர்ப்பதற்கு
நாய்க்குட்டியானாலும், சொந்த வீணையானாலும், பரத நாட்டிய
அரங்கேற்றமானாலும் அவள் கேட்டதெல்லாம் கிடைக்கும்.
அவள் கல்யாணத்திற்கு நாங்கள் ஏற்கெனவே சீர் வாங்கத்
தொடங்கி விட்டோம்.

காஞ்சிபுரத்திலிருந்தே ஸ்பெஷலாக செய்த கூறைப் புடவை.
லேட்டஸ்ட் பாஷனில் தங்க, வைர நகைகள். சௌகரியமாக
குடித்தனம் நடத்துவதற்குத் தேவையான பிரஷர் குக்கர், மிக்ஸி,
காஸ் ஸ்டவ்... எல்லாமே ரெடி!

இதையெல்லாம் பொறுக்கியெடுக்க கடை கடையாக ஏறி அலைந்தாலும்,
எவர்சில்வர் பாத்திரங்கள் வாங்கும்போது எதை வாங்கலாம் என்பதில் எங்களுக்கு
ஒரு சந்தேகமும் இல்லை. வேறென்ன? சேலம் எவர்சில்வரில் செய்த பாத்திரங்கள்தான்!
அந்த காலத்தில் எங்கள் கல்யாணத்திற்கு எங்களுக்குக் கிடைத்த பாத்திரங்களைப்
போலவே நல்ல தரமானவை.

கரும்புள்ளிகளோ, கறையோ பிடிக்காது. வருடக்கணக்கில் உபயோகித்தாலும் பளபளப்பு போகாது.
எங்கள் அருமை மகளுக்கு சீர் செய்வதில் குறை வைப்போமா!"



ஸ்டீல் அத்தாரிட்டி ஆஃப் இந்தியா லிமிடெட்.
ஒரு இந்திய அரசு நிறுவனம்

**சேலம் உருக்காலை.**
சேலம் 636 013 தமிழ்நாடு

## சேலம் எவர்சில்வர். நம்பிக்கைக்குப் பாத்திரமான பாத்திரங்கள்.

முக்கியமான விவரம் எழுதாமல் விட்டுப் போயிருந்தால் அங்கத்தினர்கள் எடுத்துச் சொல்ல உரிமையுள்ளவர்களாகிறார்கள்.

தவிர வருடத்திற்கு ஒருமுறை சங்கப் பதிவு அலுவலகத்திலிருந்து பரிசோதனை செய்ய உதவிப் பதிவாளர் வருவார்.

அவர் ரசீது புத்தகங்கள், வரவு செலவுப் பட்டியல், அதாவது டே - புக், நன்கொடைகள் வரும்படியான சங்கமாக இருந்தால் நன்கொடை ரசீதுப் புத்தகம் இவைகளைப் பார்வையிட்டு ஒப்புதல் அளிப்பார். முக்கியமாக மினிட்ஸ் புக், ரிஜிஸ்டர் Agenta இவைகளைப் பார்வையிடுவார்.

பிறகு, வருடத்திற்கு ஒரு முறை ஜெனரல் பாடியைக் கூட்டவேண்டும். அதற்கு 21 நாள் முன்பாக, சங்கம் இந்தக் கூட்டம் கூட்டப் போகிறது என்று அறிக்கை விடவேண்டும். அதற்குள் ஆடிட்டர் மூலமாக பாலன்ஸ் ஷீட் தயார் செய்ய வேண்டும். ஆண்டு அறிக்கைத் தயார் செய்ய வேண்டும். இந்த ஜெனரல் பாடி கூடும் நோக்கம்:

விரதம் இருப்பவர்கள் கவனிக்க:
விரதத்திற்கு முந்திய தினம் பழவகைகளையே சாப்பிட வேண்டும். இதனால் குடல். சுத்தம் அடையும். விரதம் இருக்கும் அன்றைக்கு தண்ணீருடன் இளநீர் அல்லது தேன் கலந்த தண்ணீருடன் இவற்றை மணிக்கு ஒரு முறை சாப்பிட வேண்டும். விரதம் முடித்த அடுத்த நாள் காலை பழ உணவுடன் தொடங்கி, மதியம் உணவுடன் படிப்படியாக அன்றாட உணவிற்கு வருவதே. விரதத்தின் முழுப் பயனை அளிக்கும்.

—மதுபாலன்.

''ஆவணம்'' என்று சொல்லப்படும். ஜெனரல் பாடியில் நாம் ஏதாவது திருத்தம் செய்ய வேண்டியிருந்தால் செய்யலாம். எக்ஸிகுயூடிவ் சமிட்டி போன்றவற்றில் ஏதாவது மாறுதல் ஏற்பட்டு, புதிய தீர்மானங்கள், தலைவி மாறுதல், உபதலைவிகள் மாறுதல், செயலாளர், பொருளாளர் மாற்றம் இப்படி ஏதாவது இருந்தால் அன்று செய்யப்படும்.

செலவினங்களைப் படித்தல் வேண்டும். பாலன்ஸ் ஷீட் தயாராகி விட்டால் முன்பேகூட அங்கத்தினர்களுக்கு அனுப்பி விடலாம். சில சங்கங்கள் சிக்கனமாகச் செயல்படும். ஆகவே ஜெனரல் பாடியில் படிப்பார்கள். அந்தச் சமயத்தில் அங்கத்தினர்கள் ஏதாவது சந்தேகங்கள் கேட்கலாம். ஜெனரல் பாடி என்னும் கூட்டத்திற்கும், சங்கத்தின் ஆண்டு விழாவிற்கும் ஒருவித சம்பந்தமும் கிடையாது என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆண்டுவிழா கோலாகலமாகச் செய்யலாம். ஆனால் ஜெனரல் பாடி என்பதில் ஒரு ஒழுங்கு முறையைப் பின்பற்றி நடக்க வேண்டும். இந்தக் கூட்டம் நடந்த 15 நாட்களுக்குள், ஆண்டு அறிக்கை, பாலன்ஸ் ஷீட், அங்கத்தினர்களின் பெயர்கள், மாறுதல் ஏற்பட்டு இருந்தால் அதன் விவரங்கள் இவைகளைச் சங்கப் பதிவு அலுவலகத்தில் பணம் கட்டிப் பதிவு செய்து விட வேண்டும்.

படிக்கும் பொழுது, பொழுது போக்கிற்கு என்றும் ஏதோ கைவேலைகள் கற்றுக் கொடுக்கவென்றும் மாதர் சங்கம் ஆரம்பிக்க நினைத்தால் இத்தனை வேலைகளா? என்று தோன்றும். ஆனால் பெண்கள் இதை ஒரு சவாலாக எடுத்துத் தங்களது திறமையை எடுத்துக் காட்ட வாய்ப்பினைத் தருகின்றது. தங்கள் சங்கம் சரிய முறையில் நடக்க வேண்டும் என்ற கூட்டு மனப்பான்மையை அங்கத்தினர்களுக்குள் ஏற்படுத்துகிறது. அதிகமாகப் படிக்காத பெண்கள் கூட மாதர் சங்கங்களில் சேர்ந்து ஒரு மாதிரியான சட்ட திட்டங்கள் கூடத் தெரிந்து கொள்கிறார்கள். மேலும் ஒரு சங்கம் ஆரம்பித்தவுடன் மூடுவிழா செய்யப் போவதில்லை. அது தொடர்ந்து நடத்துவதற்கு இந்த மினிட்ஸ்புக், ரிஜிஸ்டர் புக் இவைகள் ஒரு முன்னோடியாகத் திகழுகிறது. மாதர் சங்கம் என்ற ஒரு கட்டுக்குள் வந்து, பெண்கள் கட்டுப்பாடாக ஆக ஆகிறார்கள் என்று சொல்லலாம்.

**மாதர் சங்கங்களில் என்ன பணிகளில் ஈடுபடலாம் என்று பார்க்கலாம்:**

1. பொழுது போக்கு: (இந்த மாதிரி சங்கங்களுக்குச் சொந்தமாக இடமும் கட்டிடமும் இருக்க வேண்டும்.)

1. பேட்மின்டன், டேபிள் டென்னிஸ் இவைகள் சொல்லித் தரப்படலாம்.

2. வகுப்புகள்: வீணை சொல்லித்தருதல், வாய்ப்பாட்டு சொல்லித் தருதல், ஹிந்தி சமஸ்கிருதம் சொல்லித் தருதல், தையல், பூவேலை இவைகள் சொல்லித் தருதல், சித்திரம் வரைதல், பெயின்டிங் சொல்லித் தருதல்.

3. கைத்தொழில்: இப்பொழுது பரவலாக இருக்கும் பிளாஸ்டிக் ஒயரில் கூடைகள் பின்னுதல், மாலைகள், பூவேலைகள் செய்தல் மணிகளில் வேலை செய்தல் இவைகளைச் சொல்லித் தரலாம். தவிர ஸோப் கட்டி, ஸோப் பவுடர், ஷாம்பு, பினாயில் இவைகளை வீட்டிலே செய்யச் சொல்லித் தருதல். (இவ்வகைகளைக் கற்றுக் கொண்டு எத்தனையோ பெண்கள் சொந்தமாகத் தொழில் நடத்தியும், பிறருக்கு வகுப்புகள் நடத்தியும் வருகிறார்கள்.)

4. சமையல் கற்றுத் தருதல்: பெண்களுக்குப் பிரியமான சமையல் வகுப்பு. சத்துள்ள உணவுப் பண்டங்கள் செய்தல்,

கேக், பிஸ்கட்டுகள் தயாரித்தல், பழ ஜூஸ், ஜாம், ஜெல்லி இவைகளைச் சொல்லித்தரலாம்.

5. ஆன்மீகம்: பஜனைப் பாடல்கள், ஸ்லோகங்கள், குத்துவிளக்குப் பூஜை, சுஹாஸினிப் பூஜை, மாதத்திற்கு ஒரு முறை ஏதாவது ஒரு கோவிலுக்குப் பூஜை ஏற்பாடு செய்தல்.

6. சொற்பொழிவுகள்: அவ்வப்பொழுது நல்ல பேச்சாளர்களை அழைத்து நல்ல விஷயங்களைப் பற்றிப் பேசுதல், சமூக நலத்தில் ஈடுபாடு உடையவர்களை அழைத்துச் சமூகத்தில் அன்றைய நிலைமையைப் பற்றிப் பேச ஏற்பாடு செய்யலாம். கருத்தரங்குகள் ஏற்பாடுகள் செய்யலாம். பிரபல எழுத்தாளர்கள், திரை உலக சம்பந்தப்பட்டவர்கள், வைத்திய முறையில் தேர்ச்சி பெற்றவர்கள் இவர்களை அழைத்து ''நேருக்கு நேர்'' ஏற்பாடு செய்யலாம்.

7. போட்டிகள்: அவ்வப்பொழுது, பாட்டுப் போட்டி, கோலப் போட்டி, கைவேலைப் போட்டி இவைகளை ஏற்படுத்திப் பெண்களுடைய திறமைகளை மதித்துப் பரிசளிக்கலாம்.

8. கண்காட்சி: ரங்கோலிக் கண்காட்சி, கைவினைப் பொருள்கள் கண்காட்சி, சமையல் கண்காட்சி என்று ஏதாவது ஏற்படுத்தி பெண்களுடைய திறமைகளை வெளியே தெரியப்படுத்தலாம்.

9. சமூகப் பணிகள்: சிறு நர்சரி பள்ளிகள் குழந்தைகள் காப்பகம், வேலைக்குப் போகும் மாணவ மாணவிகளுக்கு **Scribbers** என்ற பணியைச் செய்தல், பழைய துணிகள் மருந்துகள் இவைகளைச் சேகரித்துக் குழந்தைகள் இல்லம், தர்ம வைத்திய சாலைகளுக்கு அனுப்புதல், பெரிய பெரிய ஆஸ்பத்திரிகளுக்குச் சென்று நோயாளிகளைப் பார்த்து வருதல். இப்படிப் பல சமூகப் பணிகளைச் செய்யலாம்.

சமுதாயத் தொண்டுகள்: பெண்கள் இன்றைய பிரச்சினைகள் பற்றிப் பேசுதல், வரதட்சிணைக் கொடுமை, குடியினால் ஏற்படும் தீமைகள், சந்தானத்தின் மேன்மை, ஆபாசங்களைக் கண்டித்தல், சுற்றுப்புறச் சுகாதாரம், நல்லதொரு குடும்பம் நடத்த வழிமுறைகள், சிக்கனத்தைப் பற்றிப் பேசுதல், கருத்தரங்குகள் நடத்துதல் இப்படிப் பல விழிப்புணர்ச்சிகள் ஏற்படுத்தலாம்.

பிக்னிக்: பெண்கள் தனியாகவோ, அல்லது குடும்பத்துடன் பிக்னிக் செல்ல, வெளியூர்களுக்குச் செல்ல ஏற்பாடுகள் செய்யலாம்.

மேற்சொன்னபடி நிகழ்ச்சிகளைக் கிராமப்புறத்தில் இருந்தாலும் சிறிய ஊர்களில் இருந்தாலும், பெரிய நகர்ப்புறங்களிலும் இருந்தாலும் திட்டமிட்டுச் செயல்படுத்தி, மாதர் சங்கங்களைச் செயல்படுத்தலாம்.

(அடுத்த இதழில் முடியும்)

## பூண்டுப் பொடி

பிரசவத்துக்குப் பின் இளம் தாய்மார்களுக்குப் பூண்டை உணவில் சேர்த்தால் தாய்ப் பால் சுரப்பதற்கு மிகவும் நல்லது. ஆனால் சில பெண்களுக்கு பூண்டின் வாசனை பிடிப்பதில்லை. அவர்களுக்கு ஏற்ற வகையில் பூண்டின் மணம் அதிகம் தெரியாமல் அதே சமயத்தில் அதன் சத்து முழுவதும் இருக்கின்ற இந்தப் பூண்டுப் பொடியை செய்து சாப்பாட்டுடன் சேர்த்துக் கொள்ளலாம். சத்தும் ருசியும்ஒருங்கே அமைந்த இப்பொடியை வீட்டில் மற்றவர்களும் சாப்பிடலாம்.

தேவையான சாமான்கள்:

100 கிராம் பூண்டு
இளம் துளிர் கருவேப்பிலை ஒரு கொத்து (15 ஆர்க்)
புளி நெல்லிக்காய் அளவு
மிளகு 2 டீஸ்பூன்
உளுத்தம் பருப்பு 2 டேபிள் ஸ்பூன்
பெருங்காயம் ஒரு சிறு கட்டி
உப்பு தேவையான அளவு

சிறிது நல்லெண்ணெயை விட்டு மிளகையும் பெருங்காயத்தையும் மிளகு வெடிக்கும்வரை வறுத்துக்கொள்ளவும் உளுத்தம் பருப்பைத் தனியாக சிவப்பாக வறுத்து வைத்துக் கொள்ளவும். துளிர் கருவேப்பிலையும், உரித்த பூண்டுகளையும் புளியுடன் சேர்த்து நன்றாக வதக்கி அதைத் தனியாக வைத்து இவையெல்லாம் நன்றாக ஆறிய பின் தனித் தனியாக மிக்ஸியில் போட்டு அரைத்துக் கொள்ளவும். உளுத்தம் பருப்பும், மிளகும், பெருங்காயமும் சேர்த்து அரைத்து வைத்த பொடியுடன், பூண்டு, கருவேப்பிலை அரைத்ததைச் சேர்த்துக் கலந்துகொள்ளவும். இதனை ஒரு ஈரமில்லாத பாட்டிலில் போட்டு வைத்து எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம். வாசனை கெடாமல் இருக்கும்.

—மைதிலி கிருஷ்ணமூர்த்தி

# கல்பனா

# ப்ரீத்தி

ப்ரீதி — எங்கே இருக்கிறாய், அம்மா, நீ — இப்போது? சொல்லேன், ப்ளீஸ் — காலெல்லாம் ஓய்ந்துவிட்டதம்மா, உன்னைத் தேடித் தேடி. கண்ணெல்லாம் இருளுகிறதம்மா, — தலை சுற்றுகிறதம்மா —

ப்ரீதி, உனக்கு ஞாபகமில்லை?..

ஒரு நாள், ''எனக்கு ஸ்கூலுக்குப்போகவே பிடிக்கலே, டாடி, இந்த புஸ்தக மலை, கிளாஸ் டீச்சர் எல்லாம் போரடிக்கிறது டாடி — ஹாப்பியே இல்லே டாடி அங்கே. நான் ஒரு நாள் இந்த கழுதைப் பொதியை வர்ர வழியிலே கால்வாய் போறதோ இல்லேயோ, அதிலே வீசிட்டு, எங்கேயாவது ஓடிடப் போறேன் —'' என்றாய்.

உன், அம்மா, வாயைப் பொத்தினாள். ''அப்படி எல்லாம் பண்ணிடாதடி, கண்ணு இப்பவே நீ அஞ்சடிச்சதும் ஆத்துக்கு வரலேன்னு வயத்தைக் கலக்குறது. ஏதாவது அசடாட்டம் பண்ணியோ, —அப்புறம் நானும் அப்பாவும் உயிரோட இருக்கமாட்டோம்'ன்னு உங்க அம்மா.

ப்ரீதி — இப்போ மூன்று நாளாச்சம்மா, நீ காணாமல் போய், ஒரு நிமிஷம் தாமசிச்சு வந்தா கூட அப்பா அம்மாவுக்கு ஏதாவது ஆயிடுமென்று கவலைப்பட்டவள். எப்படியம்மா எழுபத்திரண்டு மணி நேரமா வராமல் இருக்கிறாய்? — எப்படி அம்மா இருக்கிறாய்....

அதோ பாரும்மா — அதுதான் நம் ஊர் பெருமாள் கோயில். வாசல் மண்டபத்திலே தூணடியிலே சாமிசிலையை தூக்கிண்டு நிற்கிறதே ஒரு கல்யானை. நீ சின்னக் குழந்தையாக இருந்தப்ப,. உன் அம்மா உன்னை அதன் மேலே தான் கொண்டு போய் உட்கார்த்துவாள்.

அதன் மேலே ஏறினதும் உன் முகம் எல்லாம் மலர்ந்துடும். குஞ்சுக் கால்களை இந்தப் புறம் அந்தப்புறமும் போட்டுக் கொண்டு கைகாலே அதன் முதுகில் ஊன்றிக் கொண்டு 'ஹை — ஹை' என்று நீ விரட்டுகிற போது அம்மா பருப்புச் சாதத்தைத் தந்திரமாக வாயில் ஊட்டி விடுவாள்.

'ஆனைக்கு ஒரு வாய் — ' என்று கையைக் காட்டுவாய். சாதக் கையை அம்மா யானை வாயிலே கொண்டு போய்விட்டு, சட்டென்று இழுத்துக் கொண்டு, 'சனியன் யானை—கையையும் சேர்த்து முழுங்கப் பார்க்கிறது' என்பாள், பொய்க் கோபத்துடன்.

நீ இடது பக்கமாகத் தலையைச் சாய்த்து 'அம்மா, கையைக் கடிச்சியா' என்கிற மாதிரி யானையின் கண்ணைப் பார்ப்பாய். அதன் மத்தகத்தில் மேலே குட்டுவாய்.

என்ன அழகாய் இருப்பாய் அம்மா, அப்போது நீ. தந்தம் போல உடம்பு சிவப்பு நிற ஜெட்டியும், கை காப்பும், கழுத்துலே குருவாயூரப்பன் டாலர் செயினும், பீலி இல்லாத கிருஷ்ணன் கொண்டையும், சந்தோஷம் ஒன்றை மட்டுமே சதா காட்டும் கண்களும், —

அந்த யானைக்கு உயிர் இருக்கிற மாதிரியே உனக்கு நினைப்பு. 'இந்த யானை இருக்கே, — இது லேசுப்பட்ட யானையில்லே. இது இந்திரனுடைய யானையாக்கும், பட்டத்து யானை, ஐராவதம்னு பேரு. இந்திரன் தெரியுமா உனக்கு! இடி இடிச்சுண்டு, மின்னல் மின்னிண்டு, மழை பெய்யறதே — அது அவனாலேதான். மழைக்கு அதிபதி.''

நீ வாய் நிறைய சாதத்தை விழுங்காமல் வைத்துக் கொண்டு யானை மேல் இருந்தவாறே, ஆகாசத்தைப் பார்ப்பாய். ''இந்திரன் வந்து தேவருக்கெல்லாம் ராஜா. அவாத்து மாமி பேர் என்ன தெரியுமோ, ப்ரீதி? இந்திராணி! அந்த இந்திராணி இந்த யானை மேலே ஏறிண்டுதான வருவாளாம்.''

குளிர்சாதனப் பெட்டியை சுத்தம் செய்த பின் ஒரு ஈரத் துணியில் ஒரு சொட்டு வெனிலா எஸன்ஸ் விட்டு உள்புறம் முழுவதும் துடைத்தால் ப்ரிட்ஜில் பழைய வாசனைவராமல்இருக்கும்.
—ஜெயா வி. ராமன்

பேசிக் கொண்டே இன்னொரு வாய் சாதத்தை அடைத்துவிடுவாள் அம்மா, சாமர்த்தியமாய். ''துப்பக் கூடாது — துப்பினா இந்திராணிக்குக் கோபம் வந்துடும், யானையைத் திருப்பி அழைச்சுண்டு போயிடுவாள் — சீ, சமுதை, துப்பாதே என்கிறேனோ இல்லையோ!'' அம்மா, வெளியே நீ தன்னினைத சமயத்தில் கோல் அருகிலேயே 'காட்ச்' பிடித்து திரும்ப அடைப்பாள். யானை போய் விடுமோ என்கிற பயத்தில் கன்னம் கூப்ப நீ அவளையும் யானையையும் பார்த்துக் கொண்டிருப்பாய்.

''ஏண்டி — வயது ஒன்றரை ஆகப்போறது நீ எப்படி எல்லா குழந்தைகளையும் போல பேச ஆரம்பிக்கப் போகிறாய் —'' என்பாள் அது.

''உன் வயசிலே ஒரோரு குழந்தைகள் என்னென்ன பேச்செல்லாம் பேசறது —''

''ஏன்னு — எனக்கு ரொம்பக் கவலையா இருக்கு. இரண்டு வயசு ஆகப்போறது நம்ப ப்ரீதிக்கு — வாயைத் திறக்கமாட்டேன் என்கிறதே — பேசாம இருக்கேளே —'''

''எல்லாம் பேசும்டி — பேசும். பேசாமெ எங்கே போகப் போகிறது. உன் பொண்ணாச்சே? உங்க வம்சத்துலேயே பேச்சு ஜாஸ்தி இது மட்டும் எக்ஸெம்ஷனா இருக்குமா? ஒரு நாள் பேச ஆரம்பிச்சுட்டா, அப்புறம் நீயே நிறுத்து நிறுத்துன்னு கதறப் போற, பார்''

பிரிய மனசே இல்லாமல் அந்தக் கல் யானையை விட்டுவிட்டு, வீட்டுக்கு வருவாய். அம்மா மடியில் படுத்துக் கொண்டு கதை கேட்டுக் கொண்டே இருப்பாய். வேறே எந்த மிருகத்தோட கதையையும் சொல்லிவிடக் கூடாது. அந்த யானையைப் பற்றியே புதுசு புதுசா சொல்ல வேண்டும்.

''ஏன்னு . எனக்கு அலுத்துப் போச்சு. இனிமே நீங்களே சொல்லிக்கோங்கோ உங்க அருமந்தப் பொண்ணுக்கு — அதோ இருக்கார், போடீ, உங்க அப்பாகிட்டே —''

திரும்பிப் பார்ப்பாய், என்னை. முகம் தாமரையாக விரியும். கால் கொலுசு ஒலிக்க சின்ன கவுனும் முயல் காதுகள் மாதிரி இரட்டை பின்னல் ரிப்பனுமாக 'தத்தக்க புத்தக்க' என்று வருவாய்.

கிட்ட வந்து என் தோளைப் பிடித்து அமுக்கி, 'ஹை ஹை' என்பாய். ''அப்பாவைப் பார்த்ததுமே அதுக்கு யானை ஞாபகம்தான் வந்துடறது'' என்று சிரிப்பாள் உன் அம்மா.

''ஏண்டி நான் யானை மாதிரியா இருக்கேன், குரங்கே —''

''உங்க தொப்பையை பார்த்துங்கோ —'' என்று சிரிப்பாள் அம்மா.

''அதுக்காக? நீ பண்றது ஒண்ணும் நன்றுக இல்லே —''

''நான் என்னன்னு பண்றது — யானையைக் காட்டினாத்தான் அது சாப்பிடறது. யானையைக்காட்டினாத்தான் குளிக்கிறது. டிரஸ் பண்ணிக்கிறது.''

''அதுக்காக, ஸ்கூல்லேர்ந்து வந்ததும், காலம்பறவும் சாயந்தரமும் இதுக்காக நான் யானை வேஷம் போட்டுண்டு சதா நிக்க முடியாது. என் கால் இத்துப்போறது —''

''சித்தே — இன்னிக்கு ஒரு நாள் நில்லுங்கோன்னு — நாலு வாய் ஊட்டிடறேன்னு. இந்த ராத்திரி வேளையிலே கோயிலுக்கா தூக்கிண்டு ஓட முடியும்! ப்ளீஸ்ன்னு —''

அந்த 'ஏன்னு'விலேயும் ப்ளீஃலேயும் கரையாத ஆண் கர்வம் ஏது? ''இன்னிக்கு மட்டும் தான் .— அப்புறம் நாளைக்குச் சொல்லக் கூடாது''.

ஏற்றி முதுகில் வைப்பாள் அம்மா உன்னை. நீ ஊர்க் கதையை எல்லாம் கேட்டு, கிண்ணத்தைக் காலி செய்கிற வரையில். நான் முட்டி தேய அறையினுள் சுற்றி வர வேண்டும்.

''ஏய், ஏய்,, என் கண்ணுடி, என் கண்ணுடி — அம்மா, எங்காவது கீழே போட்டுடப் போறது — வாங்குடி, வாங்குடி —''

# நிரோத்...

# அடுத்த குழந்தை பிறக்குமுன் முதல் குழந்தையின் தேவைகளை நீங்கள் பூர்த்தி செய்வதற்காக



வளமான வளர்ப்பும் அன்பான பராமரிப்பும் வளரும் குழந்தைக்கு மிகவும் தேவை. இதற்கு பண வசதி தேவை. முதல் குழந்தையின் தேவைகள் பூர்த்தி அடையுமுன் அடுத்த குழந்தை அவசியமில்லை. நிரோத் உங்கள் குடும்பத்தை திட்டமிட உதவி செய்கிறது.




## நிரோத்

### இன்பமயமான இல்லற வாழ்க்கைக்கு

---

விநியோகஸ்தர்கள்: புரூக் பாண்ட், லிப்டன், இந்துஸ்தான் லிவர், ஐ.டி.சி., டாடா ஆயில் மில்ஸ், யூனியன் கார்பைட், ஐ.டி. பேரி, ஸ்மித் ஸ்டேனி ஸ்ட்ரீட், இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன், பாரத் பெட்ரோலியம், இந்துஸ்தான் பெட்ரோலியம், அரசன் கேட்ச் இண்டஸ்ட்ரீஸ்.

davp 84/44

''எங்கிட்டே குடுத்துடுடா, கண்ணு. எங்கிட்டே குடுத்துடா, கண்ணு என்று அம்மா ஜைஸ் பண்ணி வாங்கிக் கொள்வாள் அதை. ''துஷ்டப் பொண்ணு. கீழே போட்டாலும் போட்டுடும் இது என்ன பண்ணித்து தெரியுமோன்னு — ''

''என்ன பண்ணித்து?''

''அன்னிக்கு வெள்ளி டம்ளர்லே பால் குடுத்தேன் குடிச்சுட்டு மித்தத்திலே தேய்க்கக் கொண்டு போய் போடுடா—ன்னேன் இது நிஜமாகவே 'போடச் சொன்னே'ன்னு டம்ளரைக் கொண்டு போய் மித்தத்திலே டமார்னு போட்டுடுத்து.''

''ப்ரீதி — செஞ்சியா?''

'ஆமாம்' என்று தலையாட்டுகிறாய். உடைந்து, நசுங்கிய டம்பளரை எடுத்து வந்து காட்டி சிரிக்கிறாய். பித்ரு பரிபாலனம் பண்ணினவனின் சிரிப்பு போலிருக்கிறது அது.

''என் தங்கக் கண்ணே — என்று அணைத்துக்கொள்கிறேன், மார்புற. ''ம்ம்ம்ம் —'' குத்துகிறது. மழிக்காத முகம் என்று தள்ளுகிறாய் சிணுங்கலுடன்.

## 2

**ப்**ரீதி! நீ இரண்டரை வயது வரை பேசவில்லை. பேச்சு வரவில்லை, உனக்கு! ''வரும் வரும்' என்று சொல்லிக் கொண்டிருந்த எங்களுக்கே நம்பிக்கை போய்விடுகிறது.

''ப்ரீதி — அப்பா சொல்லுடா, கண்ணு—''

''அ..... அ..... அ..... அ.....''

'அம்மா சொல்லுடா, தங்கம்?''

''அ..... அ..... அ..... அ.....''

''வரலேன்னு, பேச வரலேன்னு.... என் குழந்தை ஊமையாயிட்டான்னு — என்று உன்னைக் கட்டிக் கொண்டு கதறுகிறாள் உன் அம்மா.

''காது கேட்கிறதுடா, நன்னு.. ஊமையா இராது — ''

''உங்களுக்கு ஒண்ணும் தெரியாது. போங்கோ எழுந்திருந்து'' என எரிந்து விழுகிறாள். ''சோதிச்சிட்டியே, பராசக்தி. எங்களை — என்ன துரோகம் பண்ணினோம் உனக்கு, நாங்க — ''

அந்த மகான் இந்த மகான், அந்த மடம், இந்த மடம், என்று உன்னைத் தோளிலே போட்டுக் கொண்டு அலையாக அலைகிறாள் உன் அம்மா. பரிதாபமாக இருக்கிறது அவளைப் பார்க்கையில்.

ஒரு நாள் மாலை ஸ்கூலிலேர்ந்து திரும்புகிறேன். கூடத்தில் சம்மணம் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறான் ஒரு பூசாரி.

அத்தையும், அநுவும் உன்னை மடியிலிட்டுக் கொண்டு ஏறிட்டுப் பார்க்கிறான் பூசாரி.

''கடலிக்குளம் — பூசாரி'' என்கிறாள் அநு — அவனை எனக்கு அறிமுகப் படுத்துகிற பாவனையில்.

அரைச் சிரிப்பும் தலையாட்டலுமாக அவனை அங்கீகரிக்கிறேன். ''பெரியம்மா வந்து குழந்தையைப் பார்க்கச் சொல்லிச்சு'' என்கிறான் அவன்.

''ம்..'' — காபி கொண்டு வந்து வைக்கிறாள் பூசாரிக்கு அத்தை. வெற்றிலை பழம் வாங்கிக் கொண்டு பக்கத்து வீட்டு வாண்டு ஒன்று ஓடி வருகிறது. ஒரு தட்டில் வைத்து தட்சிணையாகப் பத்து ரூபாயும் வைக்கிறாள் அநு.

''ஆத்தா தோஷம் நிறைய இருக்கு. நரக்கைக் கட்டியிருக்காங்க — தாயாதிலே.'' — விபூதியை எடுத்து 'ப்பூ' என்று காற்றில் ஊதுகிறான் பூசாரி. ''சொல்றுளே ஆத்தாளே வந்து - ''

''குளந்தைப் பேரு — ''

''ப்ரீதி — ''

''ப்பூ...ப்பூ....ப்பூ...'' என்று மூன்று முறை மேலே பார்த்து விபூதி ஊதல் காற்றில் சீறுகிறது. பிறகு கண்ணை மூடிக் கொண்டு 'ஓ' என்று சின்னதாக ஒரு ஓங்காரக் கூச்சல்.

''வந்தியா.. வா., வா— நில்லு இந்த விபூதியிலே! சொல்லு — என்ன தீர்ப்பு? முடியுமா. முடியாதா, பேசுமா, பேசாதா?''

---

**பார்ட்டி எதற்காவது பஸ்ஸிலாவது, காரிலாவது வெகுதூரம் சென்று பங்கேற்கும்படியாக இருந்தால் தலை கலையாமல் இருக்க எளிய வழி. கொஞ்சம் போல விளக்கெண்ணெயைத் தொட்டு உள்ளங்கைகளில் தேய்த்துக் கொண்டு தலையை அழுத்தி விட்டுவிட்டால் வெகு நேரம் கலையாது.**

**—கிருத்திகா.**

---

மௌனம். ''சொல்லும்மா. சொல்லு. பெத்த வயிறுக நல்ல வார்த்தைக்காகக் காத்துகிட்டு இருக்குல— ''

''ஆ..ஆ.. என்ன சொல்றே — '' காதோரம் கை வைத்துத் தலையை வளைத்துகொண்டு 'சொல்லு, சரியா சொல்லு — ஆ — மாட்டியா? என்னது மாட்டியா? அப்படிச் சொல்லிட்டா எப்படி — ''வயிற்றைக் கலக்குகிறது எல்லோருக்கும்.

அசாதாரணமானதொரு அமைதியில், தடக் தடக்கென்று, நெஞ்சு அடித்துக் கொள்ள நிற்கிறோம், எல்லோரும். ''சொல்லும்மா.. 'பச்சை பிள்ளை நீ பார்க்கலே? — பிஞ்சு, கொளுந்து, தளிர்,—கருணை வையம்மா — நீ கேட்பதை வாங்கித் தாரோம்

பதில் வரவில்லை தாயிடமிருந்து — 'சே' என்று விரலைச் சொடக்கிக் கொள்கிறான். பூசாரி. ''ஒரு திரியை எண்ணெயில் முக்கி கொண்டாங்க, சீக்கிரம் — ''

ஓடுகிறாள் அத்தை உள்ளே. அவள் திரியுடன் வருவதற்குள், வெற்றிலைகளை மளமளவென்று அகலப் பரப்பி முக்கோணமாக மூன்று பாக்குகளை மூன்று திசைகளில்

வைத்து, ஏதோ யந்திரம் அமைக்கிறான் பூசாரி. ''திரி வந்துடுச்சா — கொண்டாங்க இப்படி — குழந்தையை —''

அத்தை அதுவிட மிருந்துஉன்னைப்பறித்துக் கொண்டு போய் அவனிடம் நீட்டுகிறாள். அவன் உன்னைக் கையில் வாங்காமலே — ''உட்கார்ந்துக்க — இலைகள் மேலே —'' என்று கட்டளையிடுகிறான்.

நீ இலைகள் மீது உட்கார்ந்து கொண்டு 'இது என்ன வேடிக்கை' என்கிற மாதிரி சிரிக்கிறாய். விளக்குத் திரியைக் கையில் பிடித்து, மூன்று தரம் உன் தலையைச் சுற்றிக் கீழே இறக்கி — பிறகு அதை மேற்குத் திசையில் தூக்கிக் காட்டி, ''ஆத்தா இந்தா — இந்த அக்னிமேலே ஆணை, என்ன பலி வேண்டும் கேளு — கொடுக்கிறோம்.''

கொட கொடவென்று ஒரு சத்தம் வருகிறது, பூசாரியின் தொண்டையிலிருந்து. தொடர்ந்து. ''வெப்புக் கொண்டைச்சேவல் ரெண்டு — ம், அப்புறம், வெப்புப் பட்டு ஆறு கஜம், அப்புறம் செஞ்சோறு அரைப் படி, ம், அப்புறம் — இருபத்திஏழரைபணம்—அதானே—தரோம், தாயே தரோம் அப்புறம் ஒரு சூட்டுக் கழிப்பு—'' அவ்வளவு தானே தரோம், தரோம்.''

சட்டென்று யாரோ வெட்டிச் சேர்த்தாற் போலத் தூக்கின பூசாரியின் கை கீழே விழ, சாமி மலையேறி, மூச்சு வாங்குகிறது. பத்து நிமிடமாகிறது உடம்பு அடங்க.

''கேட்டுக்கிட்டிருந்தீங்கள்ள எல்லாத்தையும்—''



''அப்படியே செஞ்சுடறேம் பூசாரி—''

''வெள்ளிக்கிழமை ராத்திரி குழந்தை பேசும்—''

''பேசுமா, பூசாரி?''

''நம்பிக்கை வேணும் ஐயரே — ஆத்தா கிட்டே. உன் இங்கிலீஷ் புத்தி உதவாது.'' வெற்றிலையைச் சேகரித்து அத்துடன் தட்சணையையும் எடுத்துக் கொண்டு எழுகிறார் பூசாரி.

''வெள்ளிக்கிழமை எங்கே வரணும் பூசாரி?''

''நம்ப வூட்டுக்கே வந்துடுங்க—''

''ஆறு ஆறரைக்கு வந்தாப் போதுமா, இல்லையா. அய்யரு ஆறு மணிக்குத்தான் வருவாரு.—''

என்னைத் தீண்டத் தகாதவன் மாதிரி பார்க்கிறார் பூசாரி.

''அய்யரை எல்லாம் ஏம்மா, சிரமப் படுத்திக்கிட்டு? வாண்டாம். நீங்க ரண்டு பேரு வந்தாப் போதும். குழந்தையை மறக்காமக் கூட்டியாந்துடுங்க — ஒரு சின்ன கழிப்பு கழிக்கணும்.''

''பணம் வாங்கின்டு போங்க — எல்லாத் துக்கும்.''

''கொடுங்க—''

ஆறு ரூபாயை வாங்கிக் கொண்டு, ''வரேன் சாமி'' என்று போகிறான் பூசாரி.

''ரொம்பப் பேரைப் பேச வைச்சிருக்காளாம், இவனோட ஆத்தா'' — என்று கிட்ட வருகிறாள் அநு, பரம நம்பிக்கையுடன். ''வீட்டுலேயே யந்திரம் ஸ்தாபிச்சுப் பூஜை எல்லாம் பண்றானும் — ஆத்தா கூப்புட்ட குரலுக்கு வந்து நிப்பாளாம்.''

பேசாமல் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டு நிற்கிறேன். 'அய்யர் எல்லாம் எதுக்கு—' என்று அவன் குரல் காதில் நூறாயிரம் அர்த்தத்தில் ஒலிக்கிறது.

''இவனை எனக்குப் பிடிக்சலே. இவனை உள்ளே விட்டதே தப்பு—''



''உங்களுக்கு ஒண்ணும் பிடிக்காது. —மந்திரம், தந்திரம், ஜெபம், தவம்—''

''அவன் ஏன் என்னே வரவாண்டாம்னுன்—?''

''அதான் சொன்னேனே; சிரமப்படுத்தாதீங்''கன்னு. அப்புறமும் ஏன் தொளைச்சுத் தொளைச்சுப் பார்த்துண்டிருக்கேள்—''

''அவன் குழந்தையை என்னமாவது செஞ்சுடுவானோன்னு பயமாயிருக்கு—''

''ஒண்ணும் செய்ய மாட்டான். அவன் என்ன கரடியா, புலியா?''

''அதைவிட மோசம்'' — என்று சொல்ல நினைத்து, சொல்லாமல் அடக்கிக் கொள்கிறேன்.

**ப்**ரீதி! வெள்ளிக்கிழமை, ஏழு மணிக்கு உன்னைத் தோளில் போட்டுக் கொண்டு பதறிக் கொண்டு ஓடி வருகிறாள், அநு— ஏதோ ஒரு துஷ்ட மிருகத்தின் வாயிலிருந்து தன் குட்டியைப் பறித்து மீட்டுக் கொண்டு வருகிற மாதிரி வருகிறாள்.

---

**ஏலக்காய்ப் பொடி செய்யும் பொழுது, மேல் தோலுடனே இரண்டு ஸ்பூன் நெய் விட்டு ஏலக்காயை லேசான பொன்னிறமாக வறுத்து சூட்டுடன் அம்மியில் (தோலுடனே) நன்றாகப் பொடி செய்து கொண்டால் நன்றாக இருக்கும்.**

**—சரோஜா விசுவநாதன்.**

---

''என்னு — என்னு — நீங்க பயப்பட்டது சரியாப் போச்சன்னு — அந்தப் பாவி நம்ப குழந்தையைக் கொன்னுடவே இருந்தான்னு — நான் பாஞ்சு புடுங்கிண்டு ஓடியே வந்துட்டேன்னு.'' மூச்சு வாங்குகிறது அவளுக்கு; உடம்பெல்லாம் பதறுகிறது. இறுகப் பற்றிக் கொண்டிருக்கிறாள், உன்னை. விழி இரண்டும் பீதியால் அலைகின்றன.

''ஆங்—''

''சண்டாளன்னு அவன்; அயோக்கியன்னு அவன். கொலைகாரன்னு அவன். அவனைக் கழுவிலே ஏத்தணும்னு.''

''என்ன ஆச்சு?''

''குழந்தையைக் குப்புறப்போட்டு சந்திலேயும், முதுகிலேயும், 'சூட்டுக் கோலாலே இழுக்கப் போறான்னு — பளபளன்னு சூட்டுக் கோல் எரிஞ்சிண்டிருந்ததுன்னு — எதுக்குன்னு முதலிலே தெரியாமே அசடாட்டம் நின்னுண்டிருந்தேன். அவன் ஹூம், ஹாம்னு' மந்திரம் எல்லாம் போட்டுட்டு, 'ஆத்தா' என்று ஒரு கத்து அண்டம் அதிரக் கத்தி, சூட்டுக்கோலை 'சபார்'னு நெருப்பிலேர்ந்து இழுத்ததும், தெரிஞ்சுடுத்து என்ன செய்யப் போறான்னு. 'அடப் பாவி'ன்னு கத்திண்டு பாஞ்சு, குழந்தையை தூக்கிண்டு ஓடியே வந்துட்டேன். அவ பேசாட்டாலும் வேண்டாம்னு; இந்தக் கொடுமை எல்லாம் வாண்டாம்னு — தூ— இப்படி ஒரு சாமியா? ரத்தத்தைக் கொண்டா, சதையைக் கொண்டான்னு கேட்டுண்டு — தூ—''

''அப்படியா அப்படியா செய்தான்? அந்தப் பயலை இப்பவே போலீஸ்லே பிடிச்சுக் கொடுத்து, என்ன பண்றேன் பாரு—''

''காட்டுமிராண்டின்னு அவன்—''

''நீதானே அவனைப் பெரிசாச் சொல்லிண்டு போனே'' —

''என் புத்தியை ஜோட்டாலே அடிக்கணும் — இனிமே போவேனு?''

ப்ரீதி — உன்னை வாங்கி அணைத்துக் கொண்டு உன் முகத்தைத் திருப்பிப் பார்க்கிறேன். கழுத்தில் ஒரு கறுப்புக் கயிறு கட்டியிருக்கிறது. நெற்றியில் குங்குமம் நீற்றியிருக்கிறது. உச்சந்தலையிலும் குங்குமம் — பலி கிடா மாதிரி!

ஆனால் ப்ரீதி — நீ சிரித்துக் கொண்டிருக்கிறாய். அதே மோகனச் சிரிப்பு. அதே குறும்புச் சிரிப்பு. அதே 'எனக்கு எல்லாம் தெரியும்' என்கிற சிரிப்பு.

''என்னு — இந்த மாதிரி கூட மனுஷா இருப்பாளோ.— குழந்தைன்னு கூட துளி இரக்கமே இல்லாமே—''

''இதைவிடக் கொடூரமா எல்லாம் கூட நடக்கிற மிருக ஜென்மங்கள் இருக்கு. குழந்தைகளைப் பிடிச்சுண்டு போறவா, பின்னே என்ன பண்ணுவான்னு நினைக்கிறே — கண்ணைக் குத்திக் குருடாக்கி, பிச்சை எடுக்க வைப்பாளாம்.''

''பெருமாளே—'' என்று விதிர் விதிர்த்து நிற்கிறாள் அநு.

ப்ரீதி — அந்த ஒரு 'சூடு' போடறதையே பொறுக்காமல், உன் அம்மா அத்தனை துடித்தாளே — இப்போ நீ எங்கே எந்தக் கயவனிடம் மாட்டிக் கொண்டிருக்கிறாய். அவன் உன்னை என்ன செய்கிறான். உன் கண்ணையும் தோண்டி —

ப்ரீதி, ப்ரீதி — பதறுகிறதே என் உடம்பு; துடிக்கிறதே உயிர் — வாண்டாண்டா கண்ணு. வந்துடடா, கண்ணு. முழுசா வந்துடும்மா.

## 3

**கா**லம் ஓடுகிறது. மிக வேகமாய். மழையும், வெயிலும், பனியும் மாறி மாறித் தோன்றிக் காலச்சக்கரத்தை நெம்பித் தள்ளுகின்றன. 'கடக், கடக்'கென்று கோயில் தேர்ச் சக்கரங்கள் மாதிரி கொடூரமாக, — கடினமாக — சுழல்கிறது காலம்.

# தளிர்நடை தளராதிருக்க...



உங்கள் குழந்தைக்கு போலியோ சொட்டு மருந்து அளித்து
இளம்பிள்ளை வாத நோயிலிருந்து பாதுகாப்பு அளித்திடுங்கள்.

| | | |
|---|---|---|
| ஞாயிறு காலை 8.30 முதல் பகல் 12.30 வரை | புதன் : காலை 8.30 முதல் பகல் 10.30 வரை | சனி மாலை 3.00 முதல் 6.00 வரை |

மருத்துவரின் மேற்பார்வையில் போலியோ சொட்டு மருந்து, டிரிபிளாண்டிஜென், மீஸில்ஸ் வாக்ஸின்
பி.ஸி.ஜி., டி.ஏ.பி., காலரா, டபுள் ஆண்டிஜென் டெட்டனஸ் டாக்ஸாயிட் (டிடி) தடுப்பு ஊசி அளிக்கப்படும்

**தமிழ்நாடு தாதா பார்மஸூடிகல்ஸ் லிமிடெட்**

10, பத்மாவதியார் சாலை, ஜெய்பூர் நகர், (ஆயிரம் விளக்கு மசூதி அருகில்)
சென்னை-600086. தொலைபேசி : 810646

வறுக்காத் பச்சை
காபிக் கோட்டைகளையும்,
உயர்ந்த ரக சுத்தமான
காபிப் பொடியையும்
உறுதியான விலைகளில்
இந்திய காபி
டிப்போக்களிலிருந்து வாங்குங்கள்.




இந்த டிப்போக்கள் இந்திய காபி போர்டால் ஸ்தாபிக்கப்பட்டவை. இவ்விடங்கள் கீழே கோடுக்கப்பட்ட முகவரிகளில் உள்ளன.

தமிழ் நாடு

843, அண்ணா சாலை,
சென்னை.

15, ராமனுஜன் தெரு,
தி. நகர், சென்னை.

104, வெங்கடாசல முதலி
தெரு, மயிலை, சென்னை.

8, சுங்குராம தெரு,
சென்னை.

16 B, மேற்கு பூலிவார்ட்
சாலை, தெப்பகுளம் போஸ்ட்
ஆபீஸ், திருச்சி.

கடை எண் 5,
ஐ.சி.எப். ஷாபபிங் சென்டர்,
பெரம்பூர், சென்னை.

103, புது ஆவடி சாலை,
கீழ்ப்பாக்கம், சென்னை.

75, மேற்கு ஆவணி
மூல தெரு, மதுரை.

23, ஸ்ரீ ரங்க பாளயம்
சாலை, சேலம்.

11/139 A,
சாஸ்த்ரி சாலை,
கோயம்புத்தூர்.

மற்றும்
காபி போர்டால்
தயாரிக்கப்பட்ட
எவர்ஸில்வர்
காபிப் பில்ட்டர்களை
உபயோகியுங்கள்.



2 கப் பில்ட்டரின் விலை
ரூ. 75/- + வரிகள்.

அம்மாவிடம் ஒட்டவில்லை, உனக்கு. என்னிடம் தான் ஒட்டுகிறது. நான் வரும்வரை கேட்டின் பின்புறம் சின்னப் பொம்மை மாதிரி நின்று வழியையே பார்த்துக் கொண்டிருக்கிறாய். பொம்மை ஒன்றை இடுப்பில் வைத்துக் கொண்டு.

''ப்ரீதி — டீ — எங்கேடீ, இருக்கே. அட இங்கியா. அடி சொல்லாமே கொள்ளாமே தனியா கேட்டடியிலே எல்லாம் வந்து நிக்காதேடீ. யாராவது தூக்கிண்டு போயிடு வாடீ—'' என்று தேடி வந்து தூக்கிக் கொள்வாள், அது, உன்னை.

''பாருங்கோன்னு — நான் இது கூடத் துலே உட்கார்ந்து வெளையாடிண்டிருக்காக் கும்னு நினைச்சு உள்காரியமா இருக்கேன். இது என்னடான்னு, சத்தமில்லாமே இங்கே வந்து நிக்கறது.

''அரைமணியாய் நிக்கறது என்கிறேயேடி, முண்டம் — அரை மணியாவா குழந்தை நினைப்பு இல்லே—''

''இல்லேன்னு — மாடிப்படியிலே அத்தனை சொப்பையும் பரத்திக் குடுத்து விளையாடிண் டிருன்னு சொல்லிட்டுத்தான் போனேன்.''

'ப்ரீதி, நான் உன்னை வாங்கித் தோளில் சார்த்திக் கொள்கிறேன், என் கழுத்தோடு இணைந்து 'நான் உனக்காகத்தான் அப்பா— காத்துண்டிருந்தேன். உன்னைப் பார்க்காமே என்னாலே இருக்க முடியலேப்பா' என்கிற மாதிரி பார்க்கிறாய், நீ.

ஆனால் அந்த கேட் உனக்கு ஒருநாள் ஒரு பெரிய நன்மையே செய்து விடுகிறது— —பேரற்புதமே நிகழ்ந்து விடுகிறது. ஆமாம். பேரற்புதம்தான்; நம்பவே முடியாத பேரற் புதம்தான். ஒருநாள், நீ அதன் அருகே நின்று வெளியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாய். பைத்தியம் போல ஒரு கோவணதாரி வந்து உன் வாயைத் திறக்கச் சொல்லி ஏதோ ஒரு உருண்டையைப் போட்டுவிட்டுச் சிரித்துக் கொண்டே போய் வருகிறான்.

தற்செயலாக வந்த வேலைக்காரி, ''அம்மா, அம்மா — இத பாரம்மா — அநியாயத்தை'' என்று கதறிக் கொண்டு உன்னை இழுத்து வருடுகிறாள்.

உன் வாயில் விரலைவிட்டு வாயிலிருந்து எதையோ தோண்டி எடுக்கப் பிரயத்தனப் பட்டுவிட்டு, ''ஐயைய்யோ — தின்னுடுச்சே— என்ன மருந்தோ, என்ன மாயமோ, தெரிய லையே?'' — என்று அரற்றுகிறாள்.

''என்னடி, என்ன ஆச்சு?'' என்று பதறு கிறாள் அது.

''யாரோ கோவணண்டி, என்னத் தையோ குளந்தைக்குக் குடுத்துட்டுப் போயிட்டான் அம்மா — தூரத்திலேயே பார்த்துட்டு நான் ஓடி வர்றதுக்குள்ளே அவன் போயே போயிட்டான் அம்மா.''

''கடவுளே — என்னத்தைடீ, குடுத் தான்—'' அது உன்னை இழுத்து அணைத்துக் கொள்கிறாள். ''இப்ப என்ன பண்றது —எந்த டாக்டர்கிட்டே கூட்டிண்டுப் போவேன். அப்பா கூட இல்லையேடி இப்போ—''

கணீரென்று ஒரு குரல் கேட்கிறது — எல் லோரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்துகிற விதமாய் தூக்கிவாரிப் போடச் செய்கிறது ''ஒரு டாக்டரும் வாண்டாம்மா.''

''ப்ரீதி — ப்ரீதி — நீயாடீ, பேசினே—'' என்று கூரை இடியக் கூவுகிறாள் அது. ''அட, ராணி — என் பொண் பேசிட்டாடி, என் பொண் பேசிட்டாடி—''

''அந்த ஆளைப் பார்த்தா மகான் மாதிரி இருந்ததும்மா'' — என்றாள் வேலைக்காரி— கருத்தை மாற்றிக் கொண்டு.

''ப்ரீதி, ப்ரீதி, —பேசடி, பேசடி நிறைய பேசடி — அப்பா சொல்லு, அம்மா சொல்லு —ராணி சொல்லு — முருகா சொல்லு, பரா சக்தி சொல்லு.''

நீ திருப்பி ஒவ்வொன்றையும் தெளி வாகச் சொல்கிறாய். ''இனிமே நானும் ஸ்கூலுக்குப் போவேன் — போலாமில் லியா?''

பலத்த காற்று அடிக்கும் இடத்தில் ரங்கோலி கோலம் நீண்ட நேரம் அழி யாமல் இருக்க ஒரு வழி. மைதா மாவைப் பசை போல நீர்க்கக் காய்ச்சிக் கொள்ளவும். இந்த நீர்த்த கரைசலை மிக லேசாகத் தடவி விட்டுக் கோலம் போட் டால் வெகுநேரம் அழிவதில்லை.

—கிருத்திகா.

மாலை வந்ததும், இந்தப் பேரதிசயத்தை அறிந்து ஆனந்தக் கண்ணீர்விட்டு, அந்த மகானைத் தேடி ஊர் முழுவதும் அலை கிறேன். கிடைக்கவில்லை.

கையில் பிடிக்கவே முடியவில்லை, உன் அம்மாவை — எல்லாக் கோயில்களுக்கும் தளிகை, அபிஷேகங்களுக்குக் கொடுக் கிறாள். எந்தச் சாமியார், வந்தாலும் கூப் பிட்டுச் சாதமோ, அரிசியோ கொடுத்து அனுப்புகிறாள்.

அவள் மகிழ்ச்சியே எனக்குப் பயமாக இருக்கிறது; கடவுளே, திடீரென்று இப்படி ஒரு சந்தோஷத்தை ஏன் கொடுத்திருக் கிறாய்? இதன் பின்னால் என்ன வைத்திருக் கிறாய்? தடால் என்று எங்களை இழுத்துக் குப்புறத் தள்ளி விட மாட்டாயே — என்று நடுங்குகிறேன்.

ப்ரீதி, நீ ஸ்கூலுக்குப் போக ஆரம்பிக் கிறாய் — அக்கம்பக்கத்து குழந்தைகளுடன். பெரிய கலியே தீர்ந்துவிட்ட மாதிரி இருக் கிறது. எங்களுக்கு. நாலுவுலகத்துச் சனி ஒழிந்து விட்டது போலிருக்கிறது.

அழகாக, இனிமையாக, இருக்கிறது உலகம்! எங்கும் ஆனந்த மழை பொழி

கிறது. ''மேரி ஹாட் எ லிட்டில் லாம்ப்—'' படிக்கிறாய். நீ—வாசல் வராந்தாவில் ஒரு காலைக் கீழே தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்து!

''டாடி—எனக்கும் ஒரு 'லாம்ப்' வாங்கித் தருவீங்களா?''

''யானையே வாங்கித் தருகிறேன்.''

'களுக்' கென்று சிரிப்பு கேட்கிறது பின்னால். திரும்புகிறேன். அறு ''நன்றாக இருக்கிறது. பாசம் பெரிசா இருக்கலாம். அதுக்காக ஏழை வாத்தியார் யானை வாங்கித் தந்துட முடியுமா?''

''நான் வாங்கித் தருவேன்—என் பொண் அவள்—''

''முதல்லே, எனக்கு இரண்டு நல்ல கண்ணாடி வளையல் வாங்கிக் குடுங்கோ—''.

மறுநாள், இலஞ்சியில், அவளுக்கு அரை டஜன் கண்ணாடி வளையல்கள் வாங்குகையில், பக்கத்திலேயே 'புஸ்புஸ்'ஸென்று, உடம்பெல்லாம் ரோமத்துடன் ஒரு ஆட்டுக்குட்டி பொம்மையும் இருக்கிறதைப் பார்க்கிறேன். ஆறரை ரூபாய் விலை சொல்கிறான். பையிலிருந்ததை எல்லாம் திரட்டிக் கொடுத்து வாங்கிக் கொண்டு, பஸ்ஸுக்குக் கூடக் காசு இல்லாமல் நடந்தே ஊர் திரும்புகிறேன்.

---

வெண்டை விதையை நன்கு காய வைத்து, வறுத்துப் பொடி செய்து காப்பி தயாரிக்கலாம். சாதாரண காப்பியில் உள்ள நச்சுப் பொருள் இல்லாத காப்பி வேண்டுவோர் இதனைக் குடிக்கலாம். அது மட்டுமல்லாமல், இதனைக் காப்பித் தூளுடன் கலந்தும் காப்பி தயாரிக்கலாம். சிறிதளவும் வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாது.

—மதுபாலன்.

---

4

கேட்டினடியில் புழுவாகத் துடித்துக் கொண்டு கிடக்கிறாள், உன் அம்மா.

''ஏன்னா—நம்ப குழந்தையைக் காணோம். நம்பப் ப்ரீதியைக் காணோம். நம்ப செல்லக் கிளியைக் காணோம்—யாரோ தூக்கிண்டு போயிட்டான்னா—அவளை—ஐயோ என்ன செய்வேன்—''.

அழுகையா அது? கதறலா, குமுறலா—பிரளயம். பெற்ற வயிறு என்கிற பேரண்டமே குலுங்கி, விதிர் விதிர்த்துக் கொட்டுகிற பிரளயம்.

இடிந்து போய் நிற்கிறேன். ப்ரீதி! நீ எங்களை விட்டா போய் விட்டாய்? நாலு ஆண்டுகளாக நீ சுற்றித் திரிந்து பழகிய இடங்களை விட்டுவிட்டா போய் விட்டாய்? சாதம் ஊட்டும் போது உனக்காக முழங்காலிட்டு, ஊர்ந்து, உறுமி, பிளிறி, தலையை ஆட்டின, உன் அப்பா யானையை மறந்து விட்டா போய் விட்டாய்—''

ப்ரீதி எப்படி மனசு வந்தது உனக்கு! எப்படி இருக்க முடிகிறது எங்களை விட்டு விட்டு! எந்தக் கொடுங்கோலன் கொண்டு போனான் உன்னை?

''ஒண்ணும் கவலைப்படாதீங்கோ—சண்டு பிடிச்சுடலாம் குழந்தையை, தைரியமா இருங்கோ'' என்கிறார் பக்கத்து வீட்டு நண்பர் அட்வகேட் ராமதுரை.

தைரியமா? — அதுதான் என்னைவிட்டுப் போய் எவ்வளவோ நேரமாகி விட்டதே! எனக்குத் தைரியம் போய் விட்டது: அதுவுக்கு உயிரே போய் விட்டது. யாரோ பிடுங்கிக் கீழே எறிந்து விட்டமாதிரி அதோ இருளில் கிடக்கிறாள் அவள். புழுவாகத் துடித்துக் கொண்டிருக்கிறது அவள் உடம்பு.

ப்ரீதி! தேடிக் கொண்டு கிளம்புகிறேன் உன்னை. ' தசரதகுமாரன் ஜானகியைத் தேடிண்டு கிளம்பின மாதிரி.

மரியதாஸ்புரம், மீனாட்சிபுரம், ஸ்ரீபுரம்—சந்நியாசி கிராமம், சிக்க நரசய்யன் கிராமம் எல்லாம் தேடி ஆகிவிட்டது.

''சபேச சாஸ்திரியாத்து இரட்டைக் குழந்தைகள் கூடக் காணோம். என்னமா இருக்கும் என்கிறேன். ஏன், ஸார், —இரட்டை புருஷக் குழந்தைகள் தான் காளிக்கு ரொம்ப ப்ரீதி என்கிறாளே—வாஸ்தவமா இருக்குமோ—''

நடுங்குகிறது, மனசுள். காளியா? பலியா? என் ப்ரீதியையும் பலி கொடுக்கத்தான் பிடித்துக் கொண்டு போய் விட்டார்களோ?

சாஸ்திரியைப் பார்க்கப் போகிறேன். இடிந்து போய் உட்கார்ந்திருக்கிறார் கிழட்டு ஜடாயு மாதிரி. இரண்டு பேர் கூட உட்கார்ந்திருக்கிறார்கள். ஒருத்தர் ஜிப்பா போட்டுக் கொண்டிருக்கிறார். ஒருவர் அரைக்கை ஷர்ட்.

''நானும் ஒண்ணை இழந்துட்டு வந்திருக்கிறேன். உங்களைப் போல''—

'ம்ம்ம்' என்று கன்னச் சதை ஆடிர மேலும் கீழும் தலையை அசைத்துவிட்டுப் பேசாதிருக்கிறார் ஜடாயு.

''என்னமா இருந்தது, குழந்தைகள் — அந்த மாதிரி அழகும், சிரிப்பும், பார்க்க முடியுமோ —.என்கிறார் ஷர்ட். பெரியவர் கண்களிலிருந்து நீர் கொட்டுகிறது. ''பேர் கூட என்ன பொருத்தமா வைச்சார். அசுவினிகுமார், ரோகிணி குமார்னு.''

''என்ன வயசு?''

''ஆறு நிறையலேன்னு—'' ஆத்திரப்படுகிறார் ஜிப்பா. ''அட்சராப்பியாசம் பண்ணி வச்சு எட்டு மாசம் ஆகலேன்னு—''

''உள்ளே எட்டிப் பாரும் — புஸ்தகக் கட்டைப் பார்த்துப் பார்த்து மனசும் வயிறும் எரிஞ்சு வெந்துண்டு கிடக்கிறாள், பாரும், பெத்த தாயார்—''

காது கொடுத்துக் கேட்கிறேன். ஒரு விசும்பல் — கதறிக் கதறி சக்தியற்றுப்போன ஒரு உயிரின் தேய்ந்த உயிர்த் துடிப்பு!

"போலீஸ்லே, எழுதி வச்சேளா?"

"போலீஸா? — அவர் பிள்ளையே போலீஸ் இன்ஸ்பெக்டர் அய்யா."

"ஆ—" அதிர்கிறேன்.

"பொண்ணு நீர் கெட்டுப் போக்கினது?"

"ஆமா—"

"கிடைச்சுடும். கவலைப்படாதேயும். புருஷக் குழந்தைகளைத்தான் நரபலி கொடுப்பா—" என்கிறார் ஜிப்பா. "வடக்கே தான் இப்ப ஏதோ ஒரு பெரிய பாலம் கட்டக் கட்ட இடிஞ்சு விழுந்திண்டிருக்காமே—"

"இந்தக் காலத்திலே பலி கொடுக்கிறது ஒண்ணும் அவ்வளவா இல்லே. நீர் விஷயம் தெரியாம இவாளை காபரா பண்றீர் —இப்பக் குழந்தைகளைப் பிடிச்சுண்டு போறது எல்லாம், கையைக் காலை உடைச்சு, மூக்கை அரிஞ்சு, கண்ணைக் குத்தி, மூளியாக்கிப் பிச்சை கேடக வைக்கிறதுக்காகத்தான் — ஒரு பெரிய 'காங்கே' வேலை செய்யறதுய்யா— இதுக்குன்னு - வடக்கே பெரிய பட்டணங்களிலே பெரிய ரவுடிங்களே இருக்கானாம். அவங்க குழந்தைகளை விலைக்கு வாங்கிக்கிறானாம்'' என்கிறார் ஷர்ட்.

திடீரென்று வாசலிலே 'படபட' என்று மோட்டார் சைக்கிள் ஓசை கேட்கிறது. யாரோ உசரமாக, காக்கி உடையில் இறங்கி வருகிறார்கள்.

நிமிர்ந்து பார்க்கிறார் பெரியவர். ஜடாயு. தொப்பியைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டு தலைகுனிந்து நிற்கிறார் வந்தவர்.

"என்னடா ஆச்சு?"

"கிடைக்கலே அப்பா. கான்ஸ்டபிள்களைத் தேடச் சொல்லியிருக்கிறேன். அப்பா— எனக்கு டயமே கிடைக்கலே அப்பா. லெக்ஷன் டயம். மந்திரிகள், தலைவர்கள் என்று பெரிய பிரமுகர்களுக்குப் பாதுகாப்புக்கே டிபார்ட்மெண்ட் போறலை அப்பா—"

"நாசமாகப்போக உன் உத்தியோகம்—"

திச்சிப்புடி கூட்டு ரோடில் இருக்கிறது ராயர் ஹோட்டல் "வாங்கோ, வாங்கோ — பாரதி! முறுகலா ஒரு ரவாபோடு, அண்ணா வந்திருக்கார்—" என்று வரவேற்கிறார் ராயர்.

"வாண்டாம் — பசி தாகம். எல்லாம் போய் ஒரு மாசமாயிடுத்து — பஸ் வர்ர வரைக்கும் உட்கார்ந்திருக்கத்தான் வந்தேன் —"

"நன்னா உட்காருங்கோ — அண்ணாவுக்கு இல்லாத இடமா? ஆமா — ஏன் ஒரு மாதிரி இருக்கேள் —"

"நம்ப குழந்தை ப்ரீதியை காணலே ராவுஜி. எந்த ராட்சசனோ தூக்கிண்டு போயிட்டான், ராவுஜி. குழந்தையைப் பறிகொடுத்துவிட்டு திக்கு திசை தெரியாம தவிச்சுண்டிருக்கேன், ராவுஜி"

"என்னது — ப்ரீதியையா? — சுந்தரபாண்டியபுரத்திலே யாரோ ஒரு பெண்ணை காணலேயாம்னு சொன்னா — அது உங்காத்து ப்ரீதியா? — அட, கடவுளே —' என்கிறார் ராவுஜி.

"நான் பார்த்தேனேய்யா — நாலஞ்சு வாரத்துக்கு முந்தி —"

"பார்த்தேளா! எங்கே எங்கே பார்த்தேள்?" பதறிக்கொண்டு எழுகிறேன்.

"மெட்ராஸ் பஸ் ஒண்ணு தென்காசிலேர்ந்து வந்து நின்னுது. ஜன்னலோரமா ஒரு பொம்பளையும் உங்க குழந்தையும் உட்கார்ந்திண்டிருந்தா. உங்காத்து வேலைக்காரிதான் தென் காசிக்கு அழைச்சிண்டு போயிட்டு வர்ராளோன்னு நினைச்சேன்.—"

"ராவுஜி, ராவுஜி. அந்தப் பெண்பிள்ளை எப்படி இருந்தா அவா எங்கே இறங்கினா—" துடிக்கிறேன்.

"இங்கே இறங்கலே—அது நிச்சயம் பட்டணம் பஸ். திருவள்ளுவர்னு நன்னா போட்டிருந்ததே. டிரைவர் கந்தசாமியும் கண்டக்டர் ராஜேந்தரும் இறங்கி ஒரு கப் காபி கூட சாப்பிட்டுப் போனாளே —"

> முற்றிய முருங்கைக் காய்களைத் தூக்கி எறிந்து விடாதீர்கள். அவற்றின் விதைகளின் உள்ளே இருக்கும் பருப்புக்களை வறுத்து உண்டால் நிலக்கடலையைப் போன்ற ருசி இருப்பதுடன், உடலுக்குப் போஷாக்கையும், வலுவையும் கொடுக்கும். இன்றும் மேற்கிந்தியத் தீவு மக்கள் இதன் பருப்புக்களை வறுத்தெடுத்து உண்ணத் தவறுவதில்லை.
>
> —திருமதி தேவநாதன்

தூரத்திலே ஒரு பஸ் வருகிற ஓசை கேட்கிறது. "அது என்ன பஸ் பாருங்கோ —567 ஆ. இதே பஸ்தான். வரட்டும் இங்கே ஒரு நிமிஷம் நின்னுட்டுதான் போகும், விசாரிச்சுப்புடலாம்.".

விசாரிக்கிறோம். "நான் கவனிக்கலேங்க" என்கிறார் டிரைவர். "ஒரு மாசத்துக்கு முந்தின சமாச்சாரம் கேட்கிறீங்களே —"

கண்டக்டர் சொல்கிறார். "ஞாபகம் வருது தென்காசியிலே ஏறிச்சி அந்த பொம்பளை — தாம்பரத்துலே இறக்கிவிட்டேன். குழந்தை மடியிலே கிடந்துச்சு. அடிக்கடி அதன் மூக்குலே என்னத்தையோ தடவிச்சு. 'என்ன குழந்தைக்கு'ன்னேன். "சளி — 'ன்னுச்சு. ஜுரம் இருக்குதான்னேன். 'உக்கும்'ன்னுச்சு 'இத்தினி ஜுரத்தோட தனியா போறியே — வூட்டுக்காரரு வரலையா?ன்னேன். அவரு தாம்பரத்துலே காத்துக்கிட்டு இருப்பாரு — குத்தாலம் வந்தோம். இப்படியாயிடுச்சுன்னுச்சு — ஆனா தாம்பரத்துலே யாரும் வந்து காத்துகிட்டு இருக்கலே. அவசரமா குழந்தையை தோளிலே போட்டுக் கொண்டு வேக வேகமாக மேக்காலே நடக்க ஆரம்பிச்சுடுச்சு ஓடுச்சு —"

''அது இவரு குழந்தை, ராஜேந்திர். அவ கன்னமுன்னடை, ராஜேந்தர். அக்னிக்கு அதைக் கடத்திக்கிட்டுப் போயிருக்கா. ராஜேந்தர்.''

''பெருமாளே, பெருமாளே'' என்று கதறுகிறேன். ப்ரீதிக்கு, அக்கினி குமாருக்கு, ரோகிணி குமாருக்கு, யாருக்கும் அந்தக் கொடுமையைச் செய்து விடாதே, பெருமாளே.''

''இடம் இருக்கா, கண்டக்டர் — நான் தாம்பரத்தில், அவளை இறக்கி விட்ட அதே இடத்தில் என்னை இறக்கிவிடச் சொல்கிறேன். ''அதோ பாரு, சாமி — அதோ — கும்பலா குடிசைங்க தெரியுதே — அதைப் பார்த்துதான் போச்சு, அந்த முண்டம்''

''தாங்க்ஸ், ராஜேந்தர் — ''

''அடையாளம் ஒண்ணு சொல்றேன் ஞாபகம் வைச்சுக்கோ. கருக்கல் வெளுப்பு — கன்னமெல்லாம் பரு வெடிச்ச பள்ளமா

---

**குழந்தைகளுக்கு குளிர் காலத்தில் ஜலதோஷம், இருமல் போன்ற தொல்லைகளிலிருந்து நிவாரணம் தர இதோ:**

**கடுகு எண்ணெயை சிறிது சுட வைத்து உரித்த பூண்டு, சோம்பு இரண்டும் சேர்த்துக் குழந்தைகளுக்கு உள்ளங்கால், முதுகு, மார்புப் பகுதிகளில் தேய்த்தால், குழந்தைகள் இரவில் நன்கு தூங்குவார்கள். சிறு குழந்தைகளுக்கும் இம்மாதிரி செய்தால் தொல்லை இல்லை.**

**—சீதா ஜெயராமன்.**

---

இருக்கும். முன்னெத்தியிலே ஒரு ஷேவிங் பிரஷ் அளவு வெளுத்த முடி — ''

''ராஜேந்தர்'' கூப்பிடுகிறார் டிரைவர்.

''என்ன அண்ணே —''

''அந்த பொம்பளை அவசரத்திலே மறந்து வைச்சுட்டு போயிட்ட பை ஒண்ணு இருந்துதே — மறந்துட்டியா? அதையும் அவர் கிட்டே குடு. எதுக்காச்சும் பயன்படும். நீ வச்சுக்கிட்டு என்ன பண்ணப் போறே —''

''வந்து கேட்டா குடுக்கலாம்னுதான் வச்சிருக்கேன்''

''அட, அது எங்கே இனிமேவரப்போவுது — குடு அய்யர் கிட்டே''.

தன் சீட்டைத் திறந்து ஒரு சிறு பிளாஸ்டிக் பையைத் தூக்கிக் கொடுக்கிறார் ராஜேந்தர்.

''அட்ரஸ், பேரு ஒண்ணுமில்லே — ஒரு புடவை, ஒரு ஜாக்கெட், ஒரு துண்டு, சீப்பு இதுதான் இருக்குது''.

வாங்கிக் கொள்கிறேன்.'' தைரியமா இரு அய்யரே — குளந்தையை ஆண்டவன் உங்கிட்டே கொண்டு வந்து சேர்த்துடுவான் அய்யரே'' என்கிறார் டிரைவர்.

## 5

'கிளிச் — கிளச்' என்று அடங்கிய குரலில் மின்சார வண்டிகள் லேன் மாறுகின்றன. வழி நெடுகத் தமிழனுடைய புராதன மண்பானைச் சமையல் நாகரிகத்துக்கே வேட்டு வைத்துக்கொண்டிருக்கும் பரோட்டா வாசல் புறக் கடைகள். படியில் புகை ஆனந்தத்தில் மூழ்கியிருக்கும் ரிக்ஷாக்கார யோகிகள்.

''என்ன அய்யரே — நீ எல்லாம்கூட பரோட்டா தின்ன வந்துட்டியா?'' மாவை சலிக் கொண்டே கேட்கிறான் அவன். ''ஒண்ணும் இன்னும் ரெடியாகலே — நேரமாகும் இருக்கியா?''

பெஞ்சியில் உட்கார்ந்து கொள்கிறேன். ''எந்த ஊரு? இங்கே எங்கே வந்தே —''

''தெற்கே இச்சிப்புடி. இந்த ஊர் பொண்ணு ஒண்ணு நம்ப வூட்லே வேலைக்காரியா இருந்துச்சு.'' அவன் முகத்தை அச்சத்துடன் பார்க்கிறேன்.

''ஓடியாந்துடுச்சா — வூட்டை வுட்டு? என்னத்தையாவது தூக்கிட்டு வந்துடுச்சா?''

''அதெல்லாம் இல்லேயப்பா — ரொம்ப நல்ல பொண்ணுப்பா. கன்னத்திலே அம்மைத் தழும்பு நிறைய இருக்கும். நெத்தியிலே குஞ்சம் மாதிரி மயிர் வெளுத்திருக்கும்.''

''ஓ — அதா —'' ஆச்சரியம். அடுத்த நிமிஷம், உஷாராக மாறுகிறது குரல் ''பெரிய இடத்து விஷயம்லே கேக்கற — அதெல்லாம் நம்ம கையிலே கேக்காதே அப்பா — நீ ஸி. ஐ. டி.யா?''

''இல்லே, அப்பா — ''

''பொய். பொய் சொல்றே — நீ ஸி ஐ.டி. தான். சாதாரண ஆளா இருந்தா அந்த சிங்காரி போன மாசம் ஏரியிலே செத்து மிதந்து, ஊரெல்லாம் களேபரமாகி, — போலீசு வந்து, அவ வைப்பான் மம்மட்டியைக்கூட பிடிச்சுட்டுப் போய் விசாரணை எல்லாம் பண்ணினாங்களே தெரியாம இருக்குமா? — ''

அவள் செத்துட்டாளா? ஒரு மாதத்துக்கு முன்பா? சென்னைக்கு வந்த உடனேயோ? அப்போ என் குழந்தை?

''நீ சொல்லு, எப்படிச் செத்தாள்?''

''யாரு கண்டா, — மழுட்டான் ரோதனை தாளாம விழுந்துட்டா என்கிறாங்க. அவன் நிஜப் பொஞ்சாதியே தைலா கூட்டிக்கிட்டுப் போய், தண்ணியிலே அமுக்கிப் புட்டாங்களுங்க — சில பேரு மழுட்டானே அமுக்கிபுட்டதாகக் கூட சொல்றாங்க — பஞ்சாயத்து, மழுட்டியானுக்கு பயந்து தற்கொலைன்னுடுச்சு — ''

''அவ இந்த ஊருதானு?''

''எந்த ஊரு சனுனதயோ — ரெண்டு மாசம், மூணுமாசத்துக்கு ஒரு வாட்டி திமர்னு வரும். வரதுகூட தெரியாது. ராவோடு ராவா வரும். வந்திருக்கிறதுகூட ஊர் கசமுசன்னு பேசிக்கிறதுலேர்ந்து தான்

# என் சமையல் சாம்ராஜ்யத்தில் தங்கத்திற்கு மதிப்பில்லை செம்பிற்கோ ஏக மதிப்பு.



**செம்பின் திறத்திற்கு ஜெயின் ஒன்றே சாட்சி!**

- 60% FUEL SAVING
- EVEN HEATING ENSURES NON-STICKY FOOD
- EASY TO CLEAN and SHINE

# Only Jain

காலை நேரம் அவசரங்களுக்கு உரிய நேரம். ஆம், குறித்த நேரத்தில் அலுவலகம் செல்லும் எனக்கு என் கணவர், மற்றும் என் குழந்தைகளின் ஆரோக்கியம் மிக மிக முக்கியம். அவர்களின் தேவைகளை நிறைவு செய்து உணவு படைத்து செல்வதில் இருக்கும் திருப்தியே அலாதி. பரபரப்பான காலை நேரத்தில் விரைவாக சமைப்பது என்பது கடினமான காரியம் தான், இதற்கு ஈடு கொடுப்பது செப்பு அடிப்பாகமுடைய ஜெயின் ஸ்டெயின் லெஸ் ஸ்டீல் பாத்திரங்களே!

**எரிபொருள் — நேரம் மிச்சம்**

எரி பொருளை 60%க்கும் மேலாக மிச்சப் படுத்தி சூட்டினை சீராகப் பரப்பி, நல்ல ருசியான உணவை தீய்ந்துபோய் ஒட்டிக் கொள்ளாமல், மணம் குறைவின்றி அளிக்கிறது ஜெயின். சமையல் அறையே கதி என்று என்னை ஆக்கி விடாமல், சீக்கிரமே சமையலை முடித்து பல உபயோகமுள்ள மற்ற காரியங்களில் என்னை பங்கு கொள்ள வைக்கிறது ஜெயின்!

இட்லி குக்கர், ஹண்டி, கோதாவரி குண்டு, சாஸ்பேன், ஃப்ரைபேன், வாணலி, டோப், பருப்பு சட்டி, உருளி இப்படி பலப்பல.

என்னைப்போல் உள்ள ஒவ்வொரு இல்லத்தரசிக்கும் ஏற்றதொரு வரப்பிரசாதம் ஜெயின் ஒன்றே!




செம்பு அடிப்பாகமுடைய ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்.

---

250க்கும் மேற்பட்ட வீட்டுச் சமையலறைச் சாதனங்கள்.

---

**ஜெயின் ஸ்டெயின்லெஸ்**
46, ரகுநாயகலு தெரு,
பார்க் டவுன்
சென்னை-600 003.
போன்: 31545

VC-JS-84



*15 வருடங்களாக நம்பிக்கைக்கு உகந்தது ஜெயின்!*

★ எல்லா எவர்சில்வர் பாத்திரக் கடைகளிலும் கிடைக்கும்.

தெரியும். மமூட்டானோட குடிசையிலே ஒரு நாள் இரண்டு நா இருக்கும். வெளியிலேயே வராது. அப்பவே ராவோடு ராவு போயிடும்.'''

''எங்கே இருக்கு அவன் வீடு?''

''அதோ — அப்படிப் போய் கேட்டுக்கினே போ—''

குப்பம்! மம்மூட்டானைப் பத்திப் பேசவே பயப்படுகிறார்கள் எல்லோருமே.

கறுப்பாக, பூதாகாரமாக, சிவப்பு ரவிக்கை பிதுங்க, கொண்டையை அள்ளி முடிந்து கொண்டு குடிசையை விட்டு வெளியே வந்து ''யாரு — என்ன வேணும்?'' என்று கேட்கிறாள், ஒரு பெண்.

''மமூட்டான் பொஞ்சாதிதானே — நீ?''

''ஆமா அதுக்கென்ன இப்ப—'' எரிந்து விழுகிறாள். ''அதுதான் விசாரணை அது. இதுன்னு ஒரு மாசமாப் போட்டு இழுத்தடிச்சுக் கழுத்தை அறுத்துப்புட்டாங்களே, இன்னும் இன்னா?''

''நான் போலீஸ் இல்லையம்மா—''

''பின்னே யாரு.—''

''உங்க தங்கச்சி எங்க வீட்டுலே இரண்டு மாசம் வேலைக்காரியா இருந்தா — அவ புடவை, துணிமணியை குடுத்துட்டுப்போவலாம்னு வந்தேன்.'' பையிலிருந்து புடவையை எடுத்து அவள் முன் வைக்கிறேன்,

மௌனமாக என்னையும் நான் வைத்த புடவையையும் மாறி மாறிப் பார்க்கிறாள் அவள். பீதி கவிழ்ந்திருக்கிறது முகத்தில். வழி நெடுகக் குப்பத்து முகங்களில் கண்ட அதே பீதி.

பேசவே மறுக்கிறாள் அவள். 'மம்மூட்டு பொஞ்சாதிதானே?'' என்கிற கேள்விக்கு மட்டும் தலையை உயர்த்தித் தாழ்த்திப் பதில் சொல்கிறாள்;

''இந்தப் புடவை, சட்டையைத் தெரியுதா உனக்கு?''

பதில் இல்லை. சுற்றுமுற்றும் பார்க்கிறாள். 'யாராவது உதவிக்கு வரமாட்டாங்களா?' என்கிறமாதிரி. அக்கம்பக்கத்து குடிசைகளிலிருந்து இரண்டு வாண்டுகள் வெளிப்பட்டு ஒருகணம் திகைத்துவிட்டு உள்ளே ஓடுகின்றன. அடுத்த கணம் ஆறு, ஏழு அழுக்கு முகங்கள் பிரசன்னமாகி விடுகின்றன.

''எடுத்து உள்ளே வை— அவள் கொண்டு வந்த குழந்தையை எடுத்துக் கொண்டு வா.'' உனக்கு நிறைய பணம் தரேன்-''

'குழந்தையா?' என்று திடுக்கிட்டு, அழுக்கு முகங்களைப் பீதியும், பயமுமாகப் பார்க்கிறாள். 'நாங்க ஏதும் சொல்லிடலே:



அக்கா' என்கிற மாதிரி, அவைகள் அந்த ரங்க ஜாடை காட்டுகின்றன.

''நான் கேக்கறது — காதிலே விழலே? — சொல்லு, எங்கே அந்தக் குழந்தையை ஒளிச்சு வச்சிருக்கே?—''

என்ன அழுத்தம்—வாயைத் திறக்கவேண்டுமே — ஊஹூம்.

''உண்மையைச் சொல்ல மாட்டே, நீ—''

அதற்கும் பேசாமல் இருக்கிறான் அவன். 'மாட்டேன் உன்னால் ஆனதைச் செய்து கொள்' என்கிற மாதிரி. திரும்புகிறேன். குப்பத்து வாசிகள் பக்கம். ''அடேய் — ரொம்பப் பெரிய எடத்துக் குழந்தை ஒண்ணை மறைச்சு வச்சிருக்கீங்க — மீறிட்டீங்க வந்து உங்களை நாலு பக்கமும் வளைச்சு இடப் போவுது — மரியாதையா குழந்தையைக் கொண்டாந்து ஒப்படைச்சுடுங்க—''

எப்படி வந்தது, எனக்கு இந்தத் தைரியம்? அடிவயிற்றில் பயம்தான் புரள்கிறது. வெகுநேரம் நடத்த முடியாது. இந்த நாடகத்தை. மமுட்டான் வருவதற்குள் இதை விட்டுப் போய்விடவும் வேண்டும்.

---

**ஐயோடின் சத்து நமது உடலில் போதிய அளவு இல்லாவிட்டால் கட்டி உண்டாகிறது.**

**—மதுப்பாலன்.**

---

''மாட்டீங்களா?— சரி, இன்னும் அரை மணியிலே பாருங்க—என்ன நடக்குதுன்னு—''. திரும்பி வேகமாக நடக்கிறேன். மளமளவென்று போகிறேன். ஏதோ ஒன்று போய்விடு,போய்விடு'' என்று துரத்துகிறது.

## 6

**வெ**ளியே வந்துவிட்டேன். பக்கத்து ஏரியில் ஏறி உள்ளே இறங்குகிறேன். ஏதோ புயல் மாதிரி ஒன்று தூரத்தில் குப்பத்தின் வேறு பகுதியிலிருந்து ஓடி வருவது தெரிகிறது;

''இன்ஸ்பெக்டரே — இன்ஸ்பெக்டரே — கொஞ்சம் நில்லும்—''

அவன் ஒரு இளைஞன். கூர்மீசையுடன், நீலக்கோடு போட்ட பனியனில், நின்று ''உங்ககிட்டே ஒரு விசயம் பேசணும்—'' என்று இரைகிறான்.

''என்ன?''

''இந்தக் குப்பத்துலே ரண்டு கோஷ்டி. ரண்டுக்கும் பகை. காத்தவராயனும் மம்முட்டாவும் சேர்ந்துதான் ரொம்ப நாள் பிஸினஸைப் பண்ணிக்கிட்டிருந்தாங்க—''

''என்ன பிஸினஸ்?''

தயங்குகிறான் அவன் ஒரு நிமிஷம்.

''இந்தச் சேன்வியை இந்தக் குப்பத்து இட்டே எத்தனையோ இன்ஸ்பெக்டருங்க கேட்டுப் பார்த்துட்டாங்க — பதில் கிடைக்கலே; கிடைக்காது. சொல்ல எந்தப் பிராணிக்கும் முதுகெலும்பு கிடையாது — சொன்னா பொழுது விடியறதுக்குள்ளே புல் முளைக்கப் பண்ணிடுவாங்க—''

''நீ பயப்படாதே. நான் உன்னைக் காட்டிக் கொடுக்க மாட்டேன் — என் பராசக்தி மேல் ஆணை—''

''இந்த ரண்டு பேரும் பரம ரகசியமாகப் பண்ணிக்கிட்டிருந்தாங்க அந்த பிஸினஸை. ஒரு பொம்பளை — நீ புடவை கொண்டாந்தியே — அவ. இவனுகளுக்கு ஏஜெண்டு. அவ நாடெல்லாம் போய்ப் பச்சைப் புள்ளைகளைப் பிடிச்சுட்டு வருவா. அன்னி ராத்திரியே அதை இவனுக. இன்னொரு வடக்கத்தி ஏஜெண்டுக்கு வித்துப்புடுவானுக — குழந்தை வந்தது போனது கூட குப்பத்துக்குத் தெரியாது. எல்லாம் மகா மூடு மந்திரமா நடக்கும். போன வாட்டி, நீ கேட்கிற மாதிரி ஒரு குழந்தை வந்ததுன்னு சொல்லிக்கறாங்க; நாங்க யாரும் பார்க்கலே. ஆனால் மும்முட்டான் காத்தவராயன் இடையிலே அந்தப் பொம்பளை விஷயமாக ஒரு வருசமாக ஏதோ கசமுசா இருந்திருக்கு. அது அன்னிக்கு வெடிச்சு இரண்டு பேரும் அடிச்சுக் கிட்டதாகவும், அந்தப் பொம்பளையை இவனுகள்ளே ஒருத்தன் அடித்துக் கொன்று குளத்துலே போட்டுட்டதாகவும் சொல்றாங்க—''

''அந்தக் குழந்தை இப்போது எங்கே?''

''அதான் சொன்னேனே — சாரே. நாங்க யாரும் பார்க்கலே — இது நிஜம். இவனுக அதை அன்னிக்கே வடக்கே அனுப்பிச்சுட்டானுக—''

''நான்வர்ரேன். நம்பளைக்காட்டிக் குடுத்துடாதே —.'' என்று அவசரமாகத் துணியைத் தலையில் இழுத்து விட்டுக் கொண்டு ஓடுகிறான் இளைஞன். அரைக் கணத்தில் உடை மரங்களிடையே மறைந்துவிடுகிறான்.

**நி**லை தெறிக்க ஓடுகிறேன், ஏரியின் எதிர் கரையை நோக்கி. கண்மண் தெரியாமல் ஓடுகிறேன். ராட்சதன் ஒருவனின் பிடியில் சிக்காதிருக்க ஓடுகிறேன்.

''வேண்டாண்டா — வேண்டாண்டா — என்னை பிடிக்காதடா — என்னை ஒன்றும் செய்துடாதேடா —''

மூச்சிரைக்கிறது. ஆடு சதை 'விண்' விண் என்று வலிக்கிறது. கால்கள் தொய்கின்றன. படீரென்று ஒரு அடி பின் மண்டையில் —

''பராசக்தி —''கூவிக்கொண்டு கீழே விழுகிறேன். என்னை கோழிக் குஞ்சாக இழுத்து. திருப்பி நிமிர்த்தி கீழே தள்ளிக்கொண்டு நெஞ்சில் மிதித்துக் கொள்கிறது. ஒரு கரிய உருவம் — மூக்கு வரை துணியைக் கட்டிக் கொண்டிருக்கிறது; கையில் ஒரு பிரித்த பேனா கத்தி மின்னுகிறது.

''டாய் — நீ யாரு? உள்ளதைச் சொல்லிடு — ''

''ஐயோ, ஐயோ —''என்று தவிக்கிறேன்; நா குழறுகிறது.

''நான் ஏழை — பரம ஏழை — ஸ்கூல் வாத்தியார் —''

''ஸி.ஐ.டி.ன்னு சொன்னியாமேடா, குப்பத்துலே —''

''பொய், அது பொய் — நான் வாத்தியார்தான். நாலாம் க்ளாஸ் வாத்தியார்தான். என் குழந்தையைத் தேடிக்கிட்டு வந்தேன் —''

''எனக்குத் தெரியும், நீ ஸி.ஐ.டி.யா இருக்க முடியாதுன்னு. எந்த ஸி.ஐ.டி.க்கு நம்ப குப்பத்துலே வந்து நம்பளைப் பத்தி விசாரிக்கிறதுக்கு 'தில்' இருக்கு — ஹஹஹா?'' நாற்றம் குடலைப் பிடுங்குகிறது; சாராய நாற்றம். பிறகு ''ஓ..உன் குழந்தையா அது — அதைத் தேடிக்கிட்டு வந்தியா? அது எங்கே இப்போ இருக்குன்னு தெரியுமா? —''

''நான் பணம் தாரேன். ஐயாயிரம் ரூபாய், போஸ்டாபீஸ்லே சேர்த்து வச்சிருக்கேன்; என் குழந்தையைக் குடுத்துடு...''

''ப்பூ —.'' என்று எள்ளி நகைக்கிறான் அவன். ''உன் பிசாத் ஐயாயிரம் ரூபாயைக் கொண்டு போய் கொடுத்தா, அதை வாங்கிக்கிட்டுபோய், ரோடு ஓரம், சாக்கை விரிச்சு உட்கார வச்சி பிஸினஸைப் பண்ணிக்கிட்டிருக்கிற மகராஜ் அதன் நகத்தைக்கூட கொடுக்கமாட்டான். உம் பொண் இப்போ அவனுக்கு ஒரு நாளைக்கு நூறு ரூபாய் சம்பாதிச்சு குடுத்துகிட்டிருக்காய்யா — தெரியுதா?''

''என் குழந்தை பிச்சை எடுக்கிறாளா?''.. அதிர்கிறேன்.

''ஏன் கூடாதோ?'' என்கிறான் அவன். ''உம் பொண்ணைப்போல நூறு குட்டிங்க இருக்காய்யா, அவன் கிட்ட. நூறு இடத்துலே உட்கார வச்சு இரண்டு மணி நேரத்துக்கு ஒரு தடவை மோட்டார் பைக்லே வந்து கலெக்ஷன் பண்றான்ய்யா''

''எந்த ஊர்லே? — எந்த ஊர்லே —?''

''அதைச் சொல்ல நான் என்ன மடையனு? — போ, பம்பாய், நாக்பூர், டில்லி, காசி எல்லா இடத்துக்கும் போயி பாரு; ராந்தல் கம்பம், ராந்தல் கம்பமா பார்த்துக்கிட்டேபோ, — ஒரு ராந்தல் கம்பத்தடியிலே, ஒரு சன்னு பொட்டையா—'ஙேன்னு' உட்கார்ந்திருக்கும் —''

''பொட்டையா, — என் ப்ரீதியோட கண் பொட்டையா ஆயிருந்தா?''

''தோண்டி எடுத்திருப்பாங்க — தோண்டி — சதக்ன்னு! பொண்ணு இருந்தா மட்டும் இரக்கம் வருமா, வந்துடுதா, மனுசனுக்கு. பொண்ணோட பொட்டையும் சேர்ந்தாத்தான் இரக்கம் காட்டுவானுகளே — இதோ, பார், வளவளப் பேச்சு வாணும். உன் குளந்தை இனிமே கிடைக்காது. அது சமுத்திரத்திலே பெருங்காயத்தைத் தேடற மாதிரி — இப்ப உன் உசிரு உனக்கு வேணுமா, வேணாமா அத்தைச் சொல்லு.''

''ஐயோ, என்னை ஒன்னும் பண்ணிடாதே நான் உனக்கு ஒரு கெடுதலும் பண்ணலே; பண்ணவும் மாட்டேன்.''

''அதனுலேதான் உன்னை விடறேன், இப்ப.. திரும்பிப் பார்க்காமே இப்பவே பஸ்லோ, ரயிலோ எது கிடைச்சா அதிலே ஏறி ஊர் போய்ச் சேர்ந்துடணும். உம் மகளைப்பத்தி, அந்தப் பொம்பளை பத்தி, இந்தக் குப்பத்தை பற்றி — மூச்சுவிடக் கூடாது — விட்டே — ?''கத்தி சரக்கென்று இறங்கி, நெஞ்சில் முட்டிக் கொண்டு நிற்கிறது. ''சதக்னு கீறி ஏரியிலே எறிஞ்சுப்புடுவேன். உம் பின்னுலேயே எங்க ஆள் வருவான். உன்னை ஆறு வருஷம் வாட்ச் பண்ணிக்கிட்டே இருப்பான்; போலீசு, கீலிசு என்று போறதா தெரிஞ்சுதோ, அங்கேயே உன் கையைக் காலை வெட்டி ஆத்துலே போட்டுட்டு வந்துடுவான் — தெரியுதா? போ —''

எழுந்திருக்கிறான் அவன் மண்ணை உதறிக் கொண்டு நானும் எழுகிறேன். என் சின்ன சஞ்சியைத் தேடி எடுத்துக் கொள்கிறேன்.

''என்னுலே உனக்கு எந்தக் கெடுதியும் வராதுப்பா — நான் வாக்கு தவறுதவன்: அப்பா, -- என் குழந்தை குருடாகவோ நொண்டியாகவோ, எங்கோ உயிரோட இருக்குன்னு நீ சொன்ன அந்த விநாடியே உன்னை மன்னிச்சுட்டேம்பா; உனக்கு பராசக்தி அருள்வான்.''

கிளம்புகிறேன். என்னமோ நினைவு வருகிறது. நின்று அவன் பக்கம் திரும்பிச் சொல்கிறேன்: ''ஆனு ஒன்னே ஒன்னு — ஒரு பெத்த தகப்பனோட பெத்தவயிற்றுதுடிப்பை நீ இப்ப பிரத்யட்சமா பார்க்கறே — இதுவே கடைசியா பார்க்கறதா இருக்கட்டும் — உன்னை பராசக்தி காப்பாள் —''

திகைத்து நிற்கிறான் அவன். ஏரியைக் கடந்து, மேடு ஏறி, திரும்பிப் பார்க்கையில் அவன் உருவம் சின்னதாகத் தெரிகிறது. முகத்தை மூடின துணியை எடுத்துவிட்டான். ஆனாலும் அவன் முகம் தெரியவில்லை தெரிய வேண்டிய அவசியமும் இல்லை.

திரும்பவும் மேடு இறங்கி, சாலைக்கு வருகிறேன். 'பாரத் மாதாகி — ஜே — பாரத் மாதாகி — ஜே — என்ற கோஷம் கேட்கிறது.

தடதடவென்று பச்சை நிற ராணுவ டிரக்குகள் வரிசையாக வேகமாகப் போகின்றன. நம் தேசத்தை காக்க வீரர்கள் போய்க் கொண்டிருக்கிறார்கள்.

முற்றும்

---

கடலை மாவுடன் புளித்த தயிரைச் சேர்த்து, அக்குழம்பைத் தலையில் தேய்த்துக் குளித்தால், எவ்வளவு பிசுக்காயிருந்தாலும், தலை அழுக்கு நீங்கும்.

—மதுபாலன்.

---

முதல்பரிசு: குடம்

## தோடம்பழ ஸாப்டி கேக்

### தேவையான பொருட்கள்:

புட்டரிசி — 2 கப் (புட்டரிசி என்பது ஒரு வித பிசின் தன்மையுடைய அரிசி, பிரியாணி (பாசுமதி) அரிசி விற்கும் எல்லா கடைகளிலும் புட்டரிசியும் கிடைக்கும்.)
தோடம்பழம் (சாத்துக்குடி) — 4
சீனி — 1 கப்.
தேங்காய்ப்பால் — ஒன்றரை கப்.
முந்திரி — 10.
கிஸ்மிஸ் பழம் — 15.
செர்ரி — 10.
வாழைப்பழம் — 2 (நன்கு கனிந்தது)
டால்டா — பொரிக்கத் தேவையான அளவு
சமையல் சோடா — 1 சிட்டிகை.



✻ புனிதம்

இம்மாத இல்லத்தரசி



✻ எஸ். ஜெயலக்ஷ்மி

ஏலப்பொடி — அரை டீஸ்பூன்.
உணவில் சேர்க்கக் கூடிய கலர் — பச்சை, சிவப்பு.

### செய்முறை:

1. பதார்த்தத்தை செய்வதற்கு முதல் நாளிரவே புட்டரிசியை நீரில் ஊறப்போடவும். காலையில் நன்கு ஊறிய அரிசியை, தேங்காய்ப் பால் சேர்த்துக் கெட்டியாக மிக்ஸியில் அரைத்துக் கொள்ளவும்.

2. தோடம் (சாத்துக்குடிப்) பழத்தை 1 அல்லது ஒன்றரை கப் அளவு வருமாறு நீர் சேர்க்காமல் ஜூஸ் எடுத்துக் கொண்டு, ஜூஸை, அரைத்த புட்டரிசி மாவுடன் சேர்க்கவும்.

3. மாவுக் கலவையுடன் நன்கு மசித்த வாழைப்பழம், சர்க்கரை, பொடித்த ஏலம், 2 டேபிள் ஸ்பூன் டால்டா, சமையல் சோடா ஆகியவற்றைச் சேர்த்து நன்கு கலந்து மூன்று பாகங்களாக வேறு வேறு பாத்திரத்தில் பிரிக்கவும். (மாவுக் கலவை இட்லிமாவு பதத்தில் கெட்டியாக இருக்க வேண்டும். நீர்த்த நிலையில் இருந்தால் 2 டேபிள் ஸ்பூன் மைதா சேர்த்துக் கொள்ளலாம்.)

4. மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்ட மாவுக் கலவை, ஒன்றில் சிவப்புக் கலரை கலந்து கொள்ளவும். மற்றொன்றில் பச்சைக் கலர் கலந்து கொள்ளவும். மற்றொன்று கலர் சேர்க்கப்படாமல் வெண்மை நிறத்தில் இருக்க வேண்டும்.

5. மாவுக் கலவை 2 மணி நேரம் ஊற வேண்டும். 2 மணி நேரம் சென்றபின் மூன்றாகப் பிரித்த மாவுக் கலவையில் தனித் தனியாக மூன்று கரண்டிகளைப் போட்டுக் கொள்ளவும்.

6. தோசைக்கல்லை அடுப்பில் வைத்து, சூடேறியதும் டால்டாவை தாராளமாகத் தடவி முதலில் பச்சைக் கலர் மாவில் ஒரே கரண்டி ஊற்றவும். பின்பு கால் டீஸ்பூன் டால்டாவை, தோசைக்கல்லில் ஊற்றிப் பச்சைநிற மாவுக் கலவையின் மேல் தடவவும். (டால்டா தடவினால்தான், மறுதடவை மாவுக் கலவை ஊற்றும் பொழுது ஒட்டிக் கொண்டு, பிய்த்து விடாமல் இருக்கும்.) டால்டா தடவிய கலவையின் மீது வெள்ளை நிறக் கலவையை ஒரு கரண்டி ஊற்றி, மறுபடி லேசாக டால்டா தடவி சிவப்பு நிறக் கலவையை ஒரு கரண்டி ஊற்றவும்.

7. ஊற்றிய மாவுக் கலவையின் உயரம் 1-ல் இருந்து ஒன்றரை இஞ்ச் இருக்க வேண்டும். பரப்பளவு உள்ளங்கை அளவு இருக்க வேண்டும்.

8. மாவுக் கலவையின் மேல் செர்ரி, முந்திரி, கிஸ்மிஸ்ஸைத் தூவி ஒரு புறம் வெந்ததும், மறுபுறம் திருப்பிப் போடவும்.

லேசான தீயில் தான் பொரிக்கவேண்டும். இல்லையென்றால் விரைவில் தீய்ந்துவிடும். இதுபோலவே எல்லாக் கேக்குகளையும்

சுட்டெடுக்கவும். சுமார் 8 (அ) 10 கேக்குகள் வரும். 3 நாட்கள் வரை கெடாது.

—திருமதி எஸ். சாதிக்கா ஹஸனு ஹராஜா. கீழக்கரை

இரண்டாம் பரிசு: காய்கறிக் கூடை

## அறுசுவை பிஸ்கட்

### தேவையான பொருட்கள்

மைதா மாவு — 1 கப்,
முட்டை — 1
சர்க்கரை — கால் கப்,
சாத்துக்குடி — 2,
சீரகம் — 2 ஸ்பூன்,
நிலக்கடலை — உரித்தது,
உளுத்தம் பருப்பு — 1 ஸ்பூன்,
கடலைப் பருப்பு — 1 ஸ்பூன்,
பாசிப் பருப்பு — 1 ஸ்பூன்,
ஓமம் — 1 ஸ்பூன்,
உப்பு — 2 சிட்டிகை,
சமையல் சோடா — 1 சிட்டிகை,
பொரிக்க அரைலிட்டர் ரீஃபைண்ட் ஆயில்.

### செய்முறை

முதலில் நிலக்கடலை, உளுத்தம்பருப்பு, கடலைப்பருப்பு பாசிப் பருப்பு போன்றவற்றை வறுத்து நன்கு பொடி செய்து கொள்ளவும். சீரகத்தைத் தனியாக வறுத்துப் பொடி செய்யவும். சாத்துக்குடியை ஜூஸ் செய்து கொள்ளவும். சர்க்கரைப் பெருந் துகள்களாக இருப்பின் அதனையும் நைஸாக அரைத்துக் கொள்ளவும். முட்டையை உடைத்து மஞ்சள் கருவும், வெள்ளைக் கருவும் ஒன்றாகும்படி நன்கு கலக்கவும்.

ஒரு பாத்திரத்தில் மைதாமாவு, முன்பே செய்து வைத்துள்ள பருப்புப் பொடி, சீரகப்பொடி ஆகியவற்றோடு உப்பு, ஓமம், சமையல் சோடா, சர்க்கரையையும் கலந்து இக்கலவையை நீர்விடாமல் முட்டை, சாத்துக்குடி ஜூஸ், சிறிது எண்ணெய் விட்டு சப்பாத்தி மாவுபோல் பிசையவும். பின் மாவைச் சிறுசிறு உருண்டைகளாக்கிக் கொண்டு தனித்தனியே அவற்றைச் சப்பாத்தி போல் தேய்க்க வேண்டும். அப்படித் தேய்த்த சப்பாத்திகளை சற்று உலரவிட்டு பின் ஒரு சுத்தமான கத்தி மூலம் தேவையான வடிவத்தில் நறுக்கிக் கொள்ளவும்.

அடுப்பில் எண்ணெய் காய்ந்தபின் நறுக்கிய துண்டுகளைச் சிறிது சிறிதாகப் போட்டு இருபுறமும் சிவக்கும்படி பொரிக்கவும். ஓம வாசனையோடு இளம் இனிப்பும் கலந்த இதுவே மொரமொரப்பான அறுசுவை பிஸ்கட் ஆகும்.

—துர்கதாஸினி, நாமக்கல்.

மூன்றாம் பரிசு தூக்கு

## சாத்துக்குடி ஸ்பான்ஞ் கேக்

### தேவையான பொருட்கள்

சாத்துக்குடி ஜூஸ் அரை கப்,
கிஸ்மிஸ் 50 கிராம்,
நல்ல வெண்ணெய் — 150 கிராம்,
ஒன்றரை கப் சுத்தமாய்ச் சலித்த மைதா மாவு,
ஒன்றரை கப் நன்கு மிக்ஸியில் நைசாகப் பொடித்த வெண்மையான சர்க்கரை,
750 கிராம் மார்க்ரெய்ன் ராகி மாவு சுத்தமாகச் சலித்து எடுத்தது.
2 முட்டைகள்.

### செய்முறை:

முதலில் மார்க்ரெய்னை ஒரு அகன்ற பேசினில் போட்டு ஒரு மரக் கரண்டியினால் இளக்க வேண்டும். பாத்திரம் சற்றுக் குழிவாக இருப்பது நல்லது. பின்பு பொடித்த சர்க்கரைத் தூளையும் இதில் சிறிது சிறிதாகப் போட்டுச் சேர்க்கவும். இன்னொரு கிண்ணத்தில் முட்டையை உடைத்து ஊற்றி அது நன்கு நுரைக்கும் வரை மெதுவாக



அடித்துக் கலக்கவும். இப்பொழுது பிஸ்மிஸ், முட்டைக் கலவை, வெண்ணெய், சாத்துக்குடி ஜூஸ் நான்கையும் முதலில் கலந்த கலவை மிருதுவானவுடன் மைதா, ராகி, மாவு இரண்டையும் கட்டியில்லாமல் அத்துடன் சேர்த்துக் கலவையை ஒரே சீராகக் குழைக்கவும். இப்படிக் குழைக்கும் போது நம் கைவாகு மாறாமல் ஒரேசீராக நிதானமாகக் கலக்க வேண்டும். என்றால் தான் உள்புறம் ஸ்பான்ஞ்ச் போல கேக் பதமாக வரும். இதில் கவனமாகச் செயல்பட வேண்டும். எவ்வளவு மென்மையாக நாம் பிசைகிறோமோ, அவ்வளவு நன்றாகக் கேக் கிடைக்கும். பொறுமை தேவை.

பின்பு இந்தக் கலவையைக் கேக் ஓவனுடைய அகன்ற பாத்திரத்தில் மெதுவாகக் கொட்டிச் சமமாகப் பரத்தவும். இதை 180 உஷ்ணத்தில் 'பேக்' பண்ணவும். சுமார் முக்கால் மணி நேரத்தில் ஓரங்களில் பிரௌன் கலர் வரும். கேக் மணம் வரும். வெந்துள்ளதா என்று தெரிய சுத்தமான ஒரு ஸ்டீல் ஊசியை அதில் நுழைத்துப்பார்த்து, ஒட்டாமல் வந்துள்ளதா என்று கண்டு பிடிக்க முடியும்.

—கல்யாணி, உடுமலைப்பேட்டை.

---

ஆறுதல் பரிசு — தட்டு

## சாத்துக்குடி தோல் ஊறுகாய்

### தேவையான பொருட்கள்:

சாத்துக்குடித் தோல் — அரை கிலோ,
நல்ல எண்ணெய் — கால் கிலோ,
புளி 100 கிராம்,
வெல்லம் — 100 கிராம்,
மிளகாய்த் தூள் — 25 கிராம்,
வெந்தயம் — 10 கிராம்,
மஞ்சள் பொடி — 1 டீஸ்பூன்,
கடுகுத் தூள் — 20 கிராம்,
பெருங்காயம் சிறிய துண்டு. தேவையான அளவு உப்பு.

### செய்முறை:

சாத்துக்குடித் தோலை அரை அங்குலச் சதுரத்திற்கு நறுக்கிக் கொள்ள வேண்டும். புளியைத் தண்ணீர் விட்டு ஊற வைத்துக் கரைத்து வடிகட்டி வைத்துக் கொள்ள வேண்டும். வெந்தயத்தையும் பெருங்காயத்தையும் வறுத்துப் பொடி செய்து வைத்துக் கொள்ள வேண்டும். கடுகை பச்சையாகப் பொடி செய்யவும். வாயகன்ற எவர்சில்வர் பாத்திரத்தை அடுப்பில் வைத்து 150கிராம் எண்ணெயை ஊற்றி அது காய்ந்தபின், நறுக்கி வைத்திருக்கும் சாத்துக்குடித் தோலைப் போட்டு நன்றாக வதக்கவும். தோல் நன்றாக வதங்கிய பின் புளிக்கரைசலை அதில் ஊற்றி நன்றாகக் கொதிக்கவிடவும். கொதித்து விழுதாக வரும்பொழுது, உப்பு, வெல்லம், மிளகாய்த் தூள் இவற்றை சேர்த்து வெல்லம் கரைந்து ஒன்று சேரும் வரை கிளற விடவும்.

அடுப்பைச் சிறிது தணிவாக எரியவிடவும். பிறகு கடுகுப்பொடி, வெந்தயப்பொடி பெருங்காயப் பொடி முதலியவற்றைப் போட்டு மீதமிருக்கும் எண்ணெயை ஊற்றி நன்றாகக் கிளறி விட்டு ஐந்து நிமிடங்கள் கொதித்த பிறகு இறக்கி வைக்கவும். நன்றாக ஆறியபின் சுத்தமான பாட்டில்களில் அடைத்து வைக்கவும். கைபடாமல் ஸ்பூனால் எடுத்து உபயோகித்தால் பல மாதங்கள் கெடாமல் இருக்கும்.

இனிப்பு, காரம், புளிப்பு, கசப்பு, உப்பு, எல்லாம் கலந்து இருப்பதால் மிகவும் ருசியாக இருக்கும். சப்பாத்தி இட்லி, தோசை, தயிர்சாதம், முதலியவற்றுக்குத் தொட்டுச் சாப்பிடலாம்.

—புனிதம் தியாகராஜன், சென்னை—102.

---

ஆறுதல் பரிசு: — தட்டு

## சாத்துக்குடி லேகியம்

### தேவையான பொருட்கள்

வடிகட்டிய சாத்துக்குடி ரசம் — 2 கப்,
வடிகட்டிய இஞ்சி ரசம் அரை கப்,
வடிகட்டிய அன்னாசி ரசம், அரை கப்,
பொடி செய்த கற்கண்டு — 1 கப்,
வெல்லம் — 1 சிறிய கட்டி,
நைஸ் சீரகப் பொடி — 1 டேபிள் ஸ்பூன்;
நைஸ் மிளகுப் பொடி — 1 டீஸ்பூன்,
நைஸ் ஓமப்பொடி — 2 டேபிள் ஸ்பூன்,
தேன் — 2 டேபிள் ஸ்பூன்,
நெய் — 1 கப்.

### செய்முறை:

இஞ்சி மற்றும் அன்னாசி ரசத்தை முதலில் கொதிக்க விடவும். அதில் ஒரு கட்டி வெல்லத்தைப் போடவும். இது கரைந்தவுடன், கற்கண்டு மற்றும் எல்லாப் பொடிகளையும் தூவிக் கிளறவும். இப்பொழுது சாத்துக்குடி ரசம் விட்டு நன்கு கிளறவும்.

நெய்யைக் கொஞ்சம் கொஞ்சமாக விட்டுச் சேர்ந்து வரும்போது, தேனை விட்டுக் கிளறி, சுற்று இளகி இருக்கும் போதே இறக்கிவிடவும். (வசதியுள்ளவர்கள் மேலே கூறிய சாமான்களுடன் 15 பாதாம் பருப்புகளையும் ஊற வைத்து, அரைத்துக் கிளறலாம்.) வயிறு சம்பந்தப்பட்ட கோளாறுகளுக்கு மிகவும் ஏற்ற லேகியம். குழந்தைகளுக்கும் தயங்காமல் கொடுக்கலாம்.

— திருமதி. எஸ். ஜெயலக்ஷ்மி, பெங்களூர்—82

# நீங்கள் ஒரு சிறந்த இல்லத்தரசியா?

இருபது ஆண்டுகளுக்குமுன் நடந்த என் திருமணம் ஒரு கூட்டுக் குடும்பத்தில் கடைநிலைச் சிப்பந்தி என்ற 'பதவியை' எனக்கு அளித்தது. இன்று அதே இல்லறத்தில் நான் அரசியாக அனைவர் புகழச் செங்கோல் ஓச்சுகிறேன். இந்தப் ப்ரமோஷன் சாதாரணமானதா? அன்பாலும், பரஸ்பர மதிப்பாலும் எழுப்பிய இந்த சாம்ராஜ்யத்தில் தியாகம், கடமை, விட்டுக் கொடுத்தல் போன்ற பெரிய வார்த்தைகளுக்கு இடமே கிடையாது. எங்கள் சோஷலிஸ சமுதாயத்தில் எல்லாம் நட்புடன் பகிர்ந்துகொள்ளல்.

ஒரு இந்திய இல்லறம் வெற்றிகரமாக அமையக் கணவன், மனைவி உறவு அற்புதமாக அமைவதுடன், இந்த இல்லறத்தை ஒரு பகுதியாகக் கொண்ட சுற்றம், சூழல் சுமுகமாகவும், சமுதாயப் பிணைப்புகள் பலமாகவும் அமைய வேண்டும். ஆண், பெண் உறவு என்பது பொறுமை, சந்தேகம் இவற்றால் புழுங்க வைக்கும் காற்றில்லாத அறையாக அமையக் கூடாது. திருமணம் அதில் சம்பந்தப்பட்டவர்களின் முழு வளர்ச்சிக்கும், சாதனைக்கும் பாலமாக அமைய வேண்டும்.

நம் நாட்டுப் பொருளாதார, சமூகச் சூழலில் பெண்களின் கனவுகளும், எதிர்பார்ப்புகளும் நிறைவேற வாய்ப்புகள் மிகக் குறைவே. எனவே ஒரு பெண்ணின் வாழ்க்கை வெற்றிகரமாக அமைய வேண்டுமானால் அவள் <u>கிடைத்த வாய்ப்பிற்குள் தன் கனவுகளை, அடக்கிக் கொள்வதுடன் வெற்றி பெறவும் முயலவேண்டும்.</u>

கூட்டுக் குடும்பத்தில் ஓயாத, அலுக்க வைக்கும் சுமையான வேலைகள். பெண் என்ற அமைப்பைச் சுற்றி நாலு லட்சுமண ரேகைகள். தூர எட்டிப் பார்க்கக் கூட வாய்ப்பில்லை. ஆனால் நிறையப் பேர் தூரே நின்று வேடிக்கை பார்த்துச் சிரிக்க ஆவலாய்க் காத்திருக்கிறார்கள். நமக்கென்று வந்தவருடன் நெருங்கி நின்று, பேசிச் சிரித்து, ஸ்கூட்டரில் வெளியே சென்று புதிய காற்றைச் சுவாசிக்கலாம் என்றால் அந்த அருமை மனிதர் முதல் நாளன்றே கூறுகிறார்: ''என் அருமை மனைவியே, நான் வாரத்தில் ஆறு நாள் மாலைக்கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு என் தொழில் தான் எல்லாம். அதில் முன்னேறிச் சிறக்க வேண்டும் என்பது மிகப் பெரிய லட்சியம். எனவே உன்னைக் கவனிக்க எனக்கு நேரமே இல்லை'' என சொன்னதற்கொப்ப, தவறாமல் காலை ஆறு மணிக்கு வீட்டை விட்டுக் கிளம்புபவர், இரவு பத்து மணிக்குச் சோர்வுடன் தான் வீடு திரும்புவார்.



புது மணப்பெண் தன் பொன் மாலைப் பொழுதுகளில் கணவனின் அருகாமையை எண்ணிக் கலங்கினாளா, அடுத்த வீட்டுப் பெண்ணைப் பார்த்துப் பெருமூச்சு விட்டு உருகினாளா என்றால் 'இல்லை.' குடும்பச் சூழலில் மாலைப் பொழுதைப் பயனுள்ளதாக உபயோகிக்க வழியில்லை. என்ன செய்வது? முதலில் கணவனின் எம்.பி.ஏ. பாடப் புத்தகங்களைப் புரட்டிப் பார்த்தாள். அப்புறம் ஆர்வத்துடன் படிக்க ஆரம்பித்தாள். நாளடைவில் கொஞ்சம் கொஞ்சமாக எல்லாம் புரிய ஆரம்பித்தது. புரியாததைக் கணவனிடம் விளக்கம் கேட்கக் கணவன் ஆர்வத்துடன் விளக்கத் துவங்குகிறான். என் கணவரின் படிப்பு, தொழில் ஈடுபாடே எங்களுக்குள் நட்பைப் பலப்படுத்தியது. அவர் வாழ்வில் முன்னேற நான் தயாரித்த நோட்ஸ்கள், படித்த பாடங்கள் என் பொது அறிவை வளர்த்ததுடன், என் மன வளர்ச்சிக்கும் காரணமாயிற்று. விடியற்காலை நாலு மணிக்கு எழுந்து தலைமுழுகி அனைவருக்கும் சமைத்து, ஓயாமல் பம்பு அடித்து,

மாவாட்டி, வீடு பெருக்கித் துடைக்க மட்டுமே அனுமதிக்கப்பட்டிருந்த ஒரு பெண், இன்று அமெரிக்காவில் ஆங்கிலக் கதை எழுதிப் பிரசுரிப்பது எதனால் சாத்தியமாயிற்று? பெண்களே, வாய்ப்புக்குக் காத்திராதீர்கள். வீட்டுக்குள்ளேயே வாய்ப்பைத் தேடுங்கள்.

பெண்கள் பெரும்பாலும் வாழ்க்கையைப் பிறரைப் பற்றிய எதிர்பார்ப்பைச் சுற்றியே அமைத்துக் கொள்கிறார்கள். கணவன் அலுவலகத்திலிருந்து வரும்போது பூ வாங்கிவர வேண்டும், மாமியார் பேச்சுக்குப் பேச்சு மெச்ச வேண்டும், குழந்தைகள் எதிர்பார்த்ததைச் செய்ய வேண்டும் என எதிர்பார்ப்புகள் நிறைவேறாதபோது வாழ்வில் பிரச்னைகள் முளைக்கின்றன. அதிருப்தி தோன்றுகிறது. நான் என் எதிர்பார்ப்புகளைப் பிறரை ஒட்டி அமைப்பதில்லை. என் கணவருக்குப் பிடித்த விஷயத்தைச் செய்ய வேண்டும், மாமியாரை சந்தோஷமாக வைத்துக் கொள்ள வேண்டும், குழந்தைகளைத் திருப்தி செய்ய வேண்டும் என்று எனக்காகப் பல தகுதிகளை அமைத்து விடுவதால் என் எதிர்பார்ப்புக்கு என்னை அமைத்துக் கொள்வதிலேயே நேரம் கழிந்து விடுகிறது. பிறர் என் செயலால் மகிழ்ச்சி அடைந்தால் எனக்கு மகிழ்ச்சியே. ஆனால் அவர்கள் பாராட்டாவிட்டால் குடியா முழுகிவிடும்? கணவருக்கோ மனைவிக்கு எப்போதோ ஒரு பரிசு தரவேண்டும், அவளைப் பாராட்ட வேண்டும் என்று தோன்றவில்லை. அதனால் என்ன? அவற்றை விட நான் அவருக்காக ரகசியமாகச் செய்யும் சின்ன விஷயங்கள் எவ்வளவு சந்தோஷம் அளிக்கிறது தெரியுமா? அத்துடன் அவர் அவற்றை எப்போதோ ஒருமுறை





கண்டு கொள்ளும் போது இரட்டிப்பு மகிழ்ச்சி வேறு. பெரியவர்களுக்குப் புதிதாக வந்தவளிடம் குற்றம், குறைகள் தெரியலாம். ஆனால் அதற்கு மேலும் நான் அவர்களிடம் அன்பு செலுத்துவது எனக்குப் பெருமையாக இருக்கிறது. நான் பாராட்டையும், பெருமையையும் பிறரிடமிருந்து எதிர்பார்ப்பதில்லை. நான் எனக்குப் பெருமை அளித்துக் கொள்ள விரும்புகின்றேன். கொடுப்பதில் இருக்கும் சிறப்பு பெறுவதைவிடப் பெரிது.

மனிதர்களை அவர்கள் குற்றம், குறைகளுடன் ஏற்கப் பழகிவிட்டால் நம் வாழ்க்கை சுலபமாகிவிடும். நாம் விரும்பிய அச்சில் பிறரை நுழைக்க முயன்றால் வாழ்வில் ஏமாற்றம்தான். என் குழந்தை, அடுத்த வீட்டுக் குழந்தையைப் போல் படிப்பில் சுட்டியாக இல்லாமல் இருக்கலாம், கணவனுக்கு எதிர்வீட்டுக் கணவன் போலச் சாதுரியமாகப் பேசப் பழகத் தெரியாமலிருக்கலாம். என் மாமனார், மாமியார் மாடர்ன.க. எனக்குச் சுதந்திரம் அளிப்பவர்களாக இல்லாமல் இருக்கலாம். இவர்களை மாற்ற முயல்வதைவிட, "நானும் அவர்கள் எதிர்பார்ப்பது போல் இல்லை" என்று உணர்ந்து கொண்டுவிட்டதால் வாழ்க்கை சுலபமாகிவிடும்.

அதேபோல் உறவுகளின் பரிணாமத்தையும் பெண்கள் புரிந்து கொள்ள வேண்டும். கணவன் தன் தங்கைக்குப் புடவை வாங்கித் தந்தான் என்று பொறுமை, அம்மாவைக் கோவிலுக்குக் கூட்டிச் சென்றான் என்று வயிற்றெரிச்சல், இவை படித்த பெண்களிடமே 'பளிச்'சென்று தெரிகிறதே. நம் சகோதரர் நம்மைக் கவனித்தால் மட்டும் பெருமை.. ஒரு ஆண் தன் குடும்பத்தில்

ரிடமோ, தாயிடமோ, சகோதரிகளிடமோ காட்டும் அன்பு, தன் மனைவிமேல் கொள்ளும் அன்பிலிருந்து மாறுபட்டது. எனவே கணவன், தன் குடும்பத்தினர் மேல் வைத்துள்ள அன்பு தன்னைப் பாதிக்கும் என்று மனைவி பயப்படவே வேண்டாம். கணவரின் பழைய உறவுகளைச் சிதைத்து அவர்மேல் இல்லற சாம்ராஜ்யம் அமைக்க விழைந்தால் அஸ்திவாரமே ஆடிவிடும். எனவே கணவனின் உற்றம், சுற்றத்துடன் பாசத்துடன் பழகுவதை மனைவி விரும்புவதுடன், தானும் அவர்களுடன் புது உறவுகள் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். "உங்க வீட்டு மனிதர்கள், எங்க வீட்டு மனிதர்கள்" என்ற பேதத்தை மீறி அனைவரையும் நம் வீட்டு மனிதர்களாக்கிவிட்டால், வாழ்க்கை கலபமாகிவிடும். இதே மனப்பக்குவம் பிறருக்கு இல்லாமல் இருக்கலாம். அதனால் பரவாயில்லை.

இல்லறம் சிறக்க மிக அவசியமான ஒன்று பொருளாதாரப் பங்கீடு. நான் இரு குழந்தைகளுடன் தனிக் குடித்தனம் துவங்கும் போது என் கணவரின் வருமானம் ஐநூறு ரூபாய். வசதியான சூழ்நிலையில் வளர்ந்து, பழகியிருந்த இருவருக்குமே மலைப்பு... அப்போதுதான் என் முதல் பட்ஜெட் ஏற்றுக் கொள்ளப்பட்டது. எவ்வளவு குறைவான சம்பளம் ஆனாலும் அது சேமிப்பில்தான் துவங்க வேண்டும். முதலில் இருபத்தைந்து ரூபாயில் துவங்கிய எங்கள் சேமிப்பு வருடாவருடம் இரட்டிப்பாகும். இன்று வசதியாக வாழ்ந்தாலும் எங்கள் குடும்பத்தில் ஒவ்வொரு ரூபாயும் கணக்கிட்டுத்தான் செலவிடப்படுகிறது. திருமணமானபின் என் முதல் பட்டுப் புடவை எனது இருபதாவது திருமண தினத்தன்று தான் வாங்கினேன். புன்னகையை விடச் சிறந்த பொன் நகை தேவையில்லை என நானும், என் கணவரும் உணர்ந்துள்ளதால் எங்கள் குடும்பத்தில் பணம் தனிமனித சந்தோஷங்களைவிடக் குடும்ப வளர்ச்சி, அறிவுப் பெருக்கம் இவற்றிற்கே உபயோகப்படுத்தப்படுகிறது. இன்று குடும்பப் பொருளாதார அமைப்பில் குழந்தைகளும் பங்கு கொள்வதால், அவர்களும் வெளியூரில் விடுதிகளில் தங்கிப்படித்தாலும் தாங்கள் எந்த அளவு செலவிட முடியும், எது அவசியம், எது அனாவசியம் என்பது பற்றித் தெளிவாகப் புரிந்துகொள்கிறார்கள்.

குழந்தை வளர்ப்பைப் பொறுத்தவரையில் நான் சில தீவிரக் கருத்துக்களை அமுல் செய்தேன். அதில் முக்கியமானது— என் குழந்தைகள் சுய விருப்பு வெறுப்புக்களை உடையவர்கள், அவர்கள் சிந்தனை படர்ந்து வளர வேண்டும், எனவே அவர்கள் என் அச்சில் வளர வேண்டும் என விரும்பி, என் கருத்துக்களைத் திணிக்கக் கூடாது என குழந்தைகளுக்கு வாழ்வு பற்றிய **Moral values**—நியாய அநியாயம் பற்றிய கணிப்புகளை அளிக்க வேண்டுமே தவிர, 'இப்படிச்செய் அப்படிச் செய்' என்று நான் வற்புறுத்திய தில்லை. அவர்கள் படிப்பிலும் மற்ற விஷயங்களிலும் பல சிறப்புக்களைப் பெற்றிருக்கிறார்கள். அவற்றைவிட அவர்கள் மனித நேயத்தில் வளர வேண்டும் என்பதில் நான் மிகவும் ஆர்வம் காட்டுகிறேன். அதனால் தான் என் பதினைந்து வயது மகன் நான்

உஷாசுப்ரமணியம்

வெளிநாடு சென்ற போது குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்தினான். நான் குழந்தைகளின் வளர்ச்சியில் காட்டும் ஆர்வத்தை அவர்கள் என் வளர்ச்சியிலும் காட்டுவதன் காரணம்... நான் அவர்களைத் தனிநபர்களாக மதிப்பதால்தான். 'நான் உனக்கு இதைச் செய்தேன், உங்களுக்காக வாழ்வையே தியாகம் செய்தேன்' எனப் பேசும் தாய் குழந்தைகளை 'வாழ்நாள் முழுவதும் குற்ற உணர்வில் தவிக்க விடுவாள். என் குழந்தைகள் அவர்கள் படிப்பு, திருமணம், வேலை பற்றி எடுக்கும் எந்த முடிவும் கதந்திரமானதாக இருக்கும். அவர்கள் விரும்பும் ஆலோசனைகளை மட்டும் நான் தருவேனே தவிர என் அன்பால் நான் அவர்களை ஒருநாளும் நசுக்கமாட்டேன்.

கடைசியாகப் பெண்களே, வாழ்வில் நிறைய வசந்தம் வீச வேண்டுமானல் உங்கள் இளமை, குறும்பு, ஆர்வம் இவற்றை வாழ்நாள் முழுவதும் தொடருங்கள். உங்கள் கணவரின் நலை நரைத்து, முன் வழுக்கை விழுந்து விட்டதா? 'வெயிட்' கூடி மூச்சு வாங்குகிறதா? சுபாவம் மாறிச் சிடுசிடுப்பு தோன்றுகிறதா? கவலைப்பட வேண்டாம். உங்களுக்கும் வயதாகிவிட்டது. இருந்தாலும் ஒரு ரகசியக் குறும்பு, விளையாட்டு இவைகள் அவரைத் திகைக்க வைத்தாலும், மனதுள் அவர் ரசிப்பார். நீங்களும் இளமையாக உணர்வீர்கள். இருவருடைய தன்னம்பிக்கைக்கும் இது அவசியம்.

**வாழ்க்கைக்கு மிகவும் தேவை ரசனை.** துன்பத்தை அனுபவிக்கவும், இன்பத்தைப் பருகவும் இந்த ரசனையைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். பின் வாழ்க்கையே ரசிக்கும். சுய இரக்கத்தைத் தவிர்த்து, நிறையப் பேசிச் சிரியுங்கள். உங்கள் சிரிப்பு குடும்பத்தின் மகிழ்ச்சியைப் பெருக்கும்.

## 17

பாலுவின் கவனம் நழுவி நழுவிப் போயிற்று. அவனுடன் கூட நின்றிருந்த உயர் மட்டத்துக் கும்பல் கையில் விஸ்கி கிளாஸுடன் தீவிரமான பிஸினஸ் பேச்சுக் கிடையில் நளினமான நாசூக்கான இடைச் செருகல் சிரிப்புடன் ஒரு செயற்கை சினேகிதப் போர்வை போர்த்தி நின்றிருந்தது.

வெளியுலகத்துக்கும் தனக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்பதுபோல் அசோகா ஹோட்டலின் பிரம்மாண்ட கான்ஃபரன்ஸ் ஹாலில் நடந்து கொண்டிருந்த விருந்தில் சுபிட்சமும் ரசனை மிகுந்த நாகரீகமும் தெரிந்தது. தால்மியாக்கள் பிர்லாக்கள் டாட்டாக்கள் போன்ற உயர்ரகக் கும்பலின் ஆகர்ஷண பிம்பமாய் நின்றிருந்த சித்ராவின் பக்கம் பார்வை போகாமலிருக்க பாலு தீவிரமாக முயற்சித்துக் கொண்டிருந்தான். அவன் நின்றிருந்த கும்பலின் ஆண்கள் மேலெழுந்தவாரியாகவே தங்கள் சம்பாஷணையில் ஈடுபட்டிருந்ததையும் அடிக்கடி அவர்களது பார்வை சித்ராவின் பக்கம் திரும்பி அவளது அங்கங்களை மேய்வதையும் அவனால் உணர முடிந்தது. அவன் அடக்க அடக்கத் திமிறிக் கொண்டு அடிவயிற்றிலிருந்து ஒரு உஷ்ணம் கிளம்பி மூளையை ஆக்கிரமித்தது. உள்ளங்கை வியர்த்துக் கன்னங்கள் சூடேறிப் போயின.

ஒரு பெரிய மனிதரின் தடித்த சிவந்த கை சித்ராவின் இடையைச் சுற்றியிருந்தது. மார்பைப் போர்த்த வேண்டிய அவசியமில்லாத ஒரு மேற்கத்திய உடையைச் சித்ரா அணிந்திருந்தாள். கீழிறங்கிய கழுத்தில் தெரிந்த அவளது திரட்சியான மார்பின் பரிணாமத்தையே அத்தனை ஆண்களும் வெறிப்பதை மிகப் பெருமிதத்தோடு அவள் பாவிப்பதாக, 'உங்கள் பார்வைக்குத்தான் என் அழகு' என்கிற கூச்சமில்லாத தைரியத்

# எல்லைகளின் விளிம்பில்...



துடன் அவன் பவனி வருவதாகப் பாலுவுக்கு ஆத்திரமேற்பட்டது.

"இவள் ஒரு வேசி" என்று தனக்குள் அவன் மூர்க்கமாக முணுமுணுத்துக் கொண்டான். நான் ஒருத்தன் இங்கிருக்கிறேன் என்கிற பிரக்ஞையே இல்லாதது போல், அல்லது இருந்தும் வேண்டுமென்ற அலட்சியத்துடன் தன் உடலின் கவர்ச்சியால் மற்ற ஆண்களைக் கவரத் துணிவாளானால் இவள் வேறு எதற்குத்தான் துணிய மாட்டாள்?



ஆத்திரத்தில் மார்பு வெகு வேகமாக அடித்துக் கொண்டது. கையிலிருந்த விஸ்கி கிளாஸ் நொறுங்கிவிடும் போல் கைவிரல்களின் நரம்பு புடைத்து முறுக்கேறின. அவன் வெகு சிரமப்பட்டுத் தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டான்.

அந்தக் கூட்டத்தில் எல்லோர் பரிதாபத்துக்கும் அல்லது ஏளனத்துக்கும் உரிய காட்சிப் பிரஜையாகத் தான் போய்விட்டாற்போல் அவனுள் திடீரென்று ஒரு கையாலாகாத்தன பலவீனம் ஏற்பட்டது.

கல்யாணமான புதிதிலும் அதற்கு முன்பும், கண்ணையும், மூளையையும் ஏதோ ஒரு கனமான திரை மூடியும் அமுக்கியும் இருக்க வேண்டும்... யோசித்துப் பார்க்கும் போது துல்லியமாக நினைவுக்கு வந்தது. தன் உடல் அழகைக் கூச்சமில்லாமல் காட்டுகிற விதத்தில்தான் சித்ரா முன்பும் உடை உடுத்துவாள். அப்பொழுது அது ஏதும் விகல்பமாகத் தோன்றவில்லை. மாறுகப் போதையை ஏற்படுத்தியது.

கல்யாணமான பிறகு அவள் போக்கு ஏன் மனத்தை அதிர வைக்கிறது? அவளது உடை அலங்காரத்திலும், போக்கிலும் மாறுதலை ஏன் எதிர்பார்க்கிறது? அவளை என் உடைமைப் பொருள் என்று நினைக்கிறேனு?

முற்போக்குச் சிந்தனையாளன் என்று பெருமையடித்துக் கொண்டிருந்த என்னுள் இப்படிப்பட்ட பிற்போக்கு எண்ணம் இருக்கலாமா?

அவன் குழப்பத்துடன் தன்னைச் சுற்றிப் பார்த்தான். பார்ட்டியில் மற்ற பேர்களின் மனைவிமார்கள் நிச்சயம் வித்தியாசமாக இருந்தார்கள். சிலர் கணவன்மார்களின் நிழல்களாக இருந்தார்கள்... கணவர்களின் பெருமையில் குளிர்காயும் பாமரத்தனத்துடன் வியாபாரபுத்தி கூர்மைக்குச் சற்றும் குறைவில்லாத சாதுர்யத்துடன் அந்தச் சாதுர்யத்தைக் கணவனின் சமூக அந்தஸ்துக்கு அனுகூலமான கருவியாக மட்டுமே உபயோகிக்கும் ஜாக்கிரதையுடன் வளைய வந்தார்கள். தங்களது உடல் கவர்ச்சியை யாரும் மிகைப்படுத்திக் காட்டவோ அதை மூலதனமாக ஆக்கவோ நிச்சயம் முயலவில்லை.

சித்ராவைப் போல் அவர்கள் இல்லாதது மட்டுமில்லை, அவளது நடத்தை அவனுள் ஏற்படுத்தும் ஆத்திரத்தில் சிறிதளவு அவர்களுள்ளும் ஏற்படுத்துவது அவனது ஆறுவது அறிவுக்கு இன்று புலப்பட்டது.

சட்டென்று அவனுக்கு மாலுவின் நினைவு வந்தது.

தனது மன உளைச்சலை அவளிடம் நேற்று தெரிவித்த போது— தாண்டித் துருவி அவள் எந்த விளக்கமும் கேட்கவில்லை; நான் அப்பவே சொன்னேன்; கேட்டியா?' என்றுக் குத்திக் காட்டவில்லை.

''பொறுமையாயிரு.''

எப்படியிருப்பான்?

சித்ராவின் இடையைப் பற்றியிருந்த பிரமுகன் அவளை இன்னும் இறுக்கமாக அணைத்து அறையை ஒட்டினுற்போல் இருளடைந்த லௌஞ்சுக்கு அழைத்துச் செல்வது தெரிந்தது.

''பெண்கள் கிட்ட அவ சினேகிதமாப் பேசி நா பார்த்ததில்லே பாலு!''

இந்த மாதிரி ஒரு பெண்ணிடம் எந்தப் பெண் சினேகிதமாக இருக்க முடியும்?

ஆனுல் அன்று மாலுவிடம் நமக்கு எத்தனை ஆத்திரம் வந்தது!

''அவளோட அழகைக் கண்டு, ஃபிகரைக் கண்டு உங்களுக்கெல்லாம் பொறுமையினுலே அவகிட்ட நீங்க நெருங்கறதில்லே!''

அன்று பேசிய அசட்டுத்தனமான வார்த்தைகளுக்காக இப்பொழுது புதிதாக அவமானம் ஏற்பட்டது.

வேறு ஒரு வட்டத்தில் நாகநாதன் அட்டகாசமாகச் சிரித்துக் கொண்டிருந்தார். இன்ன காரணம் என்று விளக்க முடியாதபடி கொஞ்ச நாட்களாக அவரைப் பார்க்கும் போதெல்லாம் ஏற்படும் சங்கட எரிச்சல் இப்பவும் ஏற்பட்டது.

சித்ராவைப் போல் வெளிப்படையாக அவனை அலட்சியப்படுத்தாவிட்டாலும் அவர் காட்டும் மரியாதையும், கவனமும் செயற்கையாகத் தோன்ற ஆரம்பித்திருந்தது. இவரது டாம்பீக சூதாட்டத்தில் அவன் பகடையாக நிற்பது போல் ஒரு அமானுஷ்ய எச்சரிக்கைக் குரல் அடிக்கடி மனத்தில் பளிச்சிட்டது. அவருக்கு இந்த வட்டங்களில் இருந்த செல்வாக்கு அவனை மறைமுகமாகக் கட்டிப் போட்டது. இந்தக் காரணத்தாலேயே அவருக்கு அவன் அடங்கி நடக்க வேண்டி வருமோ என்று அவனுள் ஒரு பயம் நெருட ஆரம்பித்திருந்தது. முக்கியமாக நேற்றிலிருந்து...

எத்தனைக் கேவலமான நிலை இது! கண்ட கனவுகளும், எழுப்பிய லட்சியக் கோட்டைகளும் இப்பொழுது இந்த விஸ்கி கிளாஸில் பஸ்மமாகி அந்த இருளடைந்த லௌஞ்சில் அவிந்து...

அவனுக்குத் தலையை 'விண் விண்' ணென்று பிளந்தது. டிரேயைச் சுமந்து கொண்டு வந்த பேரரிடம் க்ளாஸைக் கொடுத்துவிட்டு அவன் லௌஞ்ச் பக்கம் பார்வையைத் திருப்பாமல் நாகநாதன் இருக்கும் இடத்துக்குச் சென்றுன்.

நாகநாதன் அவனைக் கேள்விக்குறியுடன் பார்த்தார். அவருடன் நின்றிருந்த மற்றவர்கள் அவனைப் பார்த்துப் புன்னகைத்து வரவேற்கையில் அவன் ஒப்புக்குப் புன்னகைத்து எல்லோரையும் வணங்கி, நாகநாதனைப் பார்த்து,

''நா கிளம்பறேன்'' என்றுன். ''எனக்கு ஒருத்தரை முக்கியமா சந்திக்கணும். சித்ரா

வைத் திரும்ப நீங்க கொண்டு விடறீங்களா?'' என்றான் தமிழில்.

நாகநாதனின் பார்வை ஊடுருவுகிற மாதிரி இருந்தாலும், அதரங்கள் சரளமாய் மலர்ந்து,

''நோ பிராப்ளம், கோ அஹெட்'' என்றன.

''நான் கிளம்பணும், ஸாரி ஜெண்டில்மென்'' என்று அவன் கவர்ச்சியாக எல்லோரிடமும் பொதுப்படையாகச் சொல்லிவிட்டுக் கிளம்புகையில் நாகநாதனின் பார்வை ஒரு நொடி நேரத்துக்கு முதுகைத் துளைக்கிற பிரமையேற்பட்டது.

தன்னுள் இப்பொழுது சுபாவமாகிப் போன நடிப்பலகத்தனத்துடன் அவன் வண்டியைத் திறந்து அறைந்து சாத்தி வேகத்துடன் கிளப்பினான்.

சித்ராவின் வெட்கமற்ற நடத்தையைக் கண்டும் காணாமல் ஆதரித்துக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கிக் கொண்டிருக்கும் இவரும் ஒரு தந்தையா என்று சீறிக் கொண்டு கோபம் ஏற்பட்டது. பணம் பண்ணுவதைத் தவிர எந்தக் குறிக்கோளும் இல்லாத, பணபலத்தினாலேயே எந்தக் கோட்பாடுகளையும் லட்சியம் செய்யாத சுயநலவாதியின் பெண் வேறு எப்படி இருப்பாள்?

இவர்களது சுயநல வட்டத்தில் நான் எப்படிப் பொருந்துவேன்?

''உன் கொள்கைப்படி நீ நடந்துக்கணும்னு போராடித்தான் ஆகணும்!''

அது சாதாரணப் போராட்டமாக இருக்கப் போவதில்லை என்று அவன் கோபத்துடன் கியரை மாற்றினான்.

நேற்று காலை நாகநாதன் வேலை மெனக்கெட்டுத் தேடிக் கொண்டு வந்த போதே சந்தேகம் ஏற்பட்டது.

சித்ரா வழக்கம்போல் இன்னும் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. அவள் எழுந்த பிறகுதான் சமையற்காரன் உள்ளே நுழைவான். பாலு தனியாக வழக்கமான தனது வெண்ணிலா தடவிய டோஸ்ட்டையும், டீயையும் வைத்துக் கொண்டு அமர்ந்திருக்கும் காட்சியைக் கண்டுக் கொஞ்சமும் சலனப்படாத ஒரு நிதானத்தோடு நாகநாதன் ஆரம்பித்தார்.

''உங்கள் கம்பெனி பெரிய அளவில் ஃபர்டிலைஸர்ஸ் வாங்க இருக்கிறது. அதற்கு ஏகப்பட்ட காண்டிராக்டர்கள் டெண்டர்களை அனுப்புவார்கள். அதை ஏற்பதும் நிராகரிப்பதும் உன் அதிகாரத்துக்குட்பட்டதாக இருப்பதாலே நீ ஒரு காரியம் எனக்காகச் செய்யணும்,'' என்றார்.

அவன் டோஸ்டரை கவனித்தபடியே, ''என்ன?'' என்றான்.

'' 'மெஹர்ஸன் அண்டு மெஹர்ஸன்'னுக்கு நீ ஏஜென்ஸி கொடுக்கணும்.''

அவன் திடுக்கிட்டு அவரைப் பார்த்தான்.

''என்ன மாமா இது? அந்த ஏமாத்துக் காரர்களுக்கா?''

''அப்படீன்னு முடிவே கட்டிட்டியா?'' என்றார் அவர் லேசான எரிச்சலுடன். ''ஃபர்டிலைஸர்ஸ் விஷயத்திலே என்ன ஏமாத்தல் இருக்க முடியும்? இந்த ஏஜென்ஸி அவர்களுக்குக் கிடைச்சா நம்ம இரண்டு பேருக்கும் கமிஷன் கிடைக்கும்.''

அவன் தலைநிமிராமல் சொன்னான் தன் அதிர்ச்சியை மறைத்துக் கொண்டு.

''அதுக்காக நான் சட்டத்துக்கு விரோதமான காரியத்தையோ, கம்பெனி ரூல்ஸுக்கு எதிராவோ செய்ய முடியாது.''

''நா எதையும் சட்டத்துக்கு விரோதமாச் செய்யச் சொல்லல்லே. எனக்குக் கம்பெனி ரூல்ஸ் நன்னாவே தெரியும். இந்த காண்ட்ராக்டருடைய டெண்டரை நீ பாஸ் பண்றது எந்த விதத்திலேயும் தப்பில்லே.''

''அவர்களுடைய சரக்கு நம்ம லாபரட்டரியிலே டெஸ்ட் செய்யப்பட்டு ஓ.கே. கிடைச்சாத்தான் அதையும் பாஸ் பண்ண முடியும்.''

**உங்களுக்கு இருதய நோயா? உங்கள் உணவில் உளுந்துப் பயிறு அதிகமாகச் சேர்த்துக் கொள்ளுங்கள். உளுந்து அதிகம் சேர்ந்த உணவை உண்பவர்களுக்கு ஹார்ட் அட்டாக் அபாயம் ஏற்படுவது வெகுவாகக் குறைந்துவிடும் என்று ஒரு ஆராய்ச்சி முடிவு தெரிவிக்கிறது.**

**—மதுபாலன்.**

''ஓ. கே. பண்ண வேண்டியது உன் பொறுப்பு'' — நாகநாதனின் குரலில் ஒரு நிர்தாட்சண்யம் தொனித்தது. அவனுடைய பதிலுக்குக் காத்திராமல் கிளம்பும் போது அரைவிநாடி நிதானித்து அவனைப் பார்த்து,

''ஒண்ணு நீ ஞாபகம் வெச்சுக்கணும் பாலு!'' என்றார். ''என்னுடைய சிபாரிசினாலேதான் உனக்கு இந்த வேலை கிடைச்சது! உன்னைவிடக் காம்படன்ட்கள் செலெக்ஷனுக்கு வந்திருந்த இடத்திலே உனக்குச் சான்ஸே இருந்திருக்காது. நா மட்டும் போர்டிலே இல்லேன்னா!''

இந்தச் சவுக்கடியை திரணிக்கும் முன் அவர் கிளம்பிப் போனார்.

அந்த நினைவு இப்பொழுது வந்த ஆத்திரத்தில், ''பாஸ்டர்ட்'' என்று அவன் திட்டியபடி கன்னாட் பிளேஸில் டிராஃபிக் ஸிக்னலுக்குக் காத்திருக்கையில் அடுத்தாற்போல் நின்றிருந்த காரிலிருந்து ''ஹாய், பாலு!'' என்ற பரிச்சயமான குரல் கேட்டது.

ப்ரபோத் குப்தா. ஆறு மாதமாக வெளிநாடு போயிருந்தவன்.

''வண்டியைப் பார்க் பண்ணிடு. காப்பி ஹவுஸுக்கு வா! நிறைய பேசணும்'' என்றான்.

(தொடரும்)



● மலருக்கு மரகதம் சந்திரசேகரின் பேட்டிக் கட்டுரை வைரக்கிரீடம் வைத்தாற் போல் இருந்தது!
மேஜர்தாசன், ஈரோடு—10.

● 'ஆண்டு மலரில்' அனைத்து அம்சங்களும் அருமை. விலையேற்றத்துடன் அதிக பக்கங்கள் விஷயயேற்றமும் செய்துத் திணறடித்து விட்டீர்களே!
பத்மா சுப்பிரமணியம், நீடாமங்கலம்.

● கல்லூரியில் இடம் கிடைக்காவிட்டாலும் கவலையின்றி அஞ்சல் மூலமாகக் கல்வி கற்க முடியும் என்பதை நிரூபிக்கும் விதத்தில் அமைந்திருந்த ''அம்மா பாடம் வருது''. பேட்டி இளைஞர்களுக்கு நிறைய தன்னம்பிக்கையைத் தரும்.
எஸ். சம்பத்குமார், சென்னை—5.

● சமூக நலத்துறை அமைச்சர் அவர்கள் கூறியவை அனைத்தும் உண்மைதான். வெற்றிகரமான வாழ்க்கையின் ரகசியம் என்ற தலைப்பில் தாங்கள் வெளியிட்ட மூன்று கட்டுரைகளும் மிகச் சிறப்பானவை. எங்களைப் போன்ற இளம் பெண்களுக்கு அவை சிறந்த ''டானிக்'' என்றே நான் சொல்கிறேன். மொத்தத்தில் நாங்கள் எதிர்பார்த்ததைவிட ''மங்கையர் மலர்'' மிகச் சிறப்பாக இருந்தது.
ப. வை. கமலவேணி, மயிலாடுதுறை—2.

● ஆண்டு மலர் கண்டேன். அடுத்த ஆண்டு வரை ஆண்டுவரும்படி ஒவ்வொரு பக்கத்தையும் உருவாக்கி இருந்தது மார்வலஸ்.
கோடுகள் கோலமாவதில்லையா! யார் (கதாசிரியர் மன்னிக்க) சொன்னது! விநுவின் ஓவியக் கோடுகள் தொடருக்கு அழகிய கோலத்தையே அல்லவா உண்டாக்கிவிட்டது..
செல்வி. வந்தனா, சென்னை—19.

● அருமையான ஒரு தெய்வீகக் கதையை மாதம் தோறும் படித்ததில் பரம திருப்தி. என்றென்றும் மார்க்கண்டேயன் மாதிரி (16 மாதம்) ரா. கணபதி எழுதியிருந்ததும், விநுவின் தெய்வீக அம்சமான ஓவியங்களும் மறக்க முடியாதவை.
திருமதி. நாராயணராவ், வியாசர்காலனி.

● பிப்ரவரி சிறப்பு மலரில் ஒரு ஒப்பற்ற – தியாக உள்ளம் படைத்த தலைவி மரகதம் சந்திரசேகரைப் பற்றிக் கட்டுரை வெளியிட்டிருக்கிறீர்கள். படித்துப் பூரித்துப் போனேன். 'பிறருக்குத் துன்பம் தராமல் இருப்பதே பெரிய பொதுநலப்பணி' என்பதை நடைமுறை வாழ்க்கையில் கடைப்பிடித்து வருகிறார். – அதுவே அவருக்குப் புகழுக்குப் புகழ் சேர்க்கிறது. சென்னையில் நடந்த பாராட்டு விழாவுக்கு ஒரு தியாகியின் மகள் என்று என் மனைவி தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட பொழுது— அவர் அடைந்த மகிழ்ச்சி எங்களை பிரமிக்க வைத்தது. ஒரு நல்லகட்டுரையை பலர் படிக்கும்படி வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்தமைக்கு நன்றி.
கே. எஸ். ராஜகோபாலன், ஆர். பானுமதி, பாண்டிச்சேரி.

● ரசத்தைப் பற்றிய ரசமான கட்டுரை மனத்தில் சுயச்சொம்பில் வைத்த ரசமாக உருகிவிட்டது.
சே. மீராபாய், சென்னை—48.

● மங்கையர் மலரின் பிப்ரவரி ஆண்டுமலர் வழக்கத்தைவிட அதிகமான சுவையையும் தந்தது. திருமதி மரகதம் சந்திரசேகரின் அரசியல் வாழ்க்கை பற்றிய கட்டுரை மிக மிக அருமை. இவரது பொறுப்பில் பெண்களின் முக்கியப் பிரச்சினைகள் பல தீரும் என்று தோன்றுகிறது. தகுதியான ஒருவரைத்தான் பெண்கள் மற்றும் சமூக நலத் துறை அமைச்சராக்கி இருக்கிறார்கள்.
திருமதி. சே. அரவிந்தா, புதுதில்லி—19.




அட்டை வண்ணப்படம்: யோகா



இந்திய கிளாசிகல் நடனங்களில் கதக் நடனமும் ஒரு நாட்டிய வடிவமாக ஏற்றுக் கொள்ளப்பட்டாலும், பரத நாட்டியத்திற் குண்டான பழைமையான மரபும், வரலாறும் இதற்கு இல்லை. வட இந்தியா பல நூற்றாண்டு களாக அந்நிய நாட்டவர்களின் தாக்குதலுக் கும் ஆட்சிக்கும் உட்படவே, அப்பகுதியின் கலாச்சாரம் மற்றும் நுண் கலைகளின் பாரம் பரியமும் மரபும் ஓரளவு அவற்றின் தனித் தன்மையை இழந்தன எனச் சொல்லலாம்.

வட இந்தியா முகம்மதிய ஆட்சிக்குட் பட்ட காலகட்டத்தில் கதக் நடனம் சிறப் புற்று விளங்கியிருந்ததாகக் கலை வரலாறு நமக்கு எடுத்துரைக்கின்றது. முகம்மதிய ஆட் சிக்கு முன்னர் இக்கலை வடிவம் கோயில் களில் மட்டும் தெய்வங்களுக்கு அர்ப்பணிக் கப்பட்ட கலையாக விளங்கி வந்தது.

பதினேழாம் நூற்றாண்டுக்குமுன், வட இந் தியப் பெண்டிர், தங்கள் தலைகளுக்கு மேல் பானைகளை வைத்துக் கொண்டும், கால்க ளின்கீழ் தாம்பாளத்தை வைத்துக் கொண் டும் ஆடி வந்தனர். மிருதங்கம் மற்றும் மஞ் சிரா என்ற இசைக் கருவிகள் மட்டுமே இந் நாட்டியத்தின் பின் பாட்டு இசைக்குப் பக்க வாத்தியங்களாக அமைந்திருந்தன. இந்நட னம் முகம்மதிய அரசர்களிடையே பிரதான மாக விளங்கியது.

பரத இலக்கண நூலில் வரையறுக்கப்பட் டுள்ள அங்கங்களில் இந்நடன வடிவம் உட் பட்டிருந்தாலும், முஷ்டி, சிகாரா, அம் ஸஸ்யா, சந்திரகலா, அலபத்மா ஆகிய சில ஹஸ்தங்கள் பொதுவாகக் காணப்படும் மிக முக்கிய ஹஸ்தங்களாகும்.

நட்வரி என்ற தலைப்பின் கீழ் ஆடப்படும் இந்நாட்டிய வடிவத்தில், மிக்க சுழற்சியாக ஆடப்படும் பொழுது, பாதங்களில் கட்டப் பட்டிருக்கும் சலங்கைகளின் ஒலி தாளங்க ளுக்கு ஏற்ப அமையப் பெற்றிருப்பது இந் நாட்டியத்தின் சிறப்பு அம்சமாகும். பிற் காலத்தில் "டப்லா" என்ற தோல் கருவி, மிருதங்கத்திற்குப் பதிலாக வாசிக்கப்பட்ட கருவியாகும். தாண்டவம், லாஸ்யம் என்ற இரு பண்புகளும் இந்நாட்டிய வடிவத்தில் காணலாம். கலாக்ஷேத்திரா பாணி, வழுவூ ரார் பாணிபந்தநல்லூர் பாணி, என்று பரத நாட்டியத்திலிருக்கும் பல போக்குகள் போல், கதக் நடனத்தில், ஜெய்ப்பூர் கரானா, லக்னோ கரானா, பனாரஸ் கரானா என்பவை போன்ற பல போக்குகள் உள்ளன.

இந்திய நடனங்களில் இசைப் பாடல் களின் சொற்களுக்கேற்ப நாட்டியக் கலைஞர் கள் அபிநயிக்கும் எழில் இந்நடனத்தில் தனித் தன்மை வாய்ந்தது.

சமீப காலங்களில் கதக் நாட்டிய நாடகங் களும் பிரபலமாகிக் கொண்டு வருகின்றன. இந்நாட்டிய மரபினைச் சிறிதும் மாற்றாது, பாரம்பரியத்தையும் நழுவ விடாது, இந்நாட் டிய வடிவத்தில் பல புகழ் பெற்ற நாட்டிய நாடகங்களைத் தயாரித்து அரங்கேற்றி இந் நாட்டிய வடிவத்திற்குப் புகழ் சேர்த்து வரும் திரு. பிர்ஜு மகாராஜ் அவர்களை என்றென் றும் இந்நாடு மறக்க இயலாது.

—கே. எல். ராமன்

வண்ணப்படம்: உத்ரா.

## பறக்கும் பாவை

பிரிட்டிஷ் ஏர்வேஸ் தங்களுடைய ஏர் ஹோஸ்டஸ்களை வெறும் பணிப் பெண்க ளாக மட்டும் பாவிக்காமல், அவர்க ளுடைய புத்திசாலித்தனத்தையும் உற் சாகப்படுத்துகிறது. அவர்களுடைய ஏர் ஹோஸ்டஸ்களிடையே புத்திசாலித் தனம் நிறைந்த பெண்ணை 'Personality girl' ஆகத் தேர்ந்தெடுத்து உலகம் பூரா அழைத்துச் செல்கிறது. அப்படித் தேர்ந் தெடுக்கப்பட்டவர்கள் பிரிட்டிஷ் ஏர்வே ஸின் சிறப்பைப் பற்றித் தாங்கள் செல் லும் நாடுகளில் சொல்ல வேண்டும்.

இந்த முறை 'பர்சனாலிடி பெண்' ணாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள திருமதி இஸபெல்லா எட்ஜ் சமீபத்தில் சென் னைக்கு வந்திருந்தார். "இனிய குடும்பத் தலைவியாக மட்டுமே விளங்கும் நான் ஒரு தூதராக ஆகும் நாளை ஆவலோடு எதிர் பார்க்கிறேன்" என்கிறார் ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் வேலை செய்யும் இந்தப் பெண் மணி.'

வண்ணப்படம் 4வது பக்கத்தில்



காடு — வனவிலங்குகள் சரணாலயம். நாலைந்து பேருடன் காதம்பரி போயிருக்கிறாள். அன்றெல்லாம் அங்கேயே தங்குவதாய்த் திட்டம். யானைமேல் தொட்டிலில் அமர்ந்து காட்டுக்குள் கிளம்புகிறார்கள். விலங்குகளை மிகக் கிட்டத்தில் சென்று பார்க்க அதுதான் நல்லவழி. துள்ளியோடும் மான்கள், கூட்டமாய் காட்டெருமைகள், நகரும் குன்றுகளாய் யானைகள் எல்லாம் பார்த்தாயிற்று. திரும்பலாம் என்று நினைக்கும்போது — எப்படியென்று தெரியவில்லை. அவள் தரையில் நிற்கிறாள். யானையையும் காணோம், கூட வந்தவர்களும் இல்லை. பயமாயும் துக்கமாயும் இருக்கிறது. அங்கிருந்து எப்படியாவது போய்விட வேண்டும், விடுதியை அடைந்துவிட வேண்டும் என்று தவிப்பாய் இருக்கிறது. போய், மற்றவர்களைச் சரியானபடி பிய்த்து வாங்கிவிட வேண்டும் என்று ஒரு ஆத்திரம். கடைசியில் தட்டுத் தடுமாறி ஒரு ஒற்றையடிப் பாதையைக் கண்டுபிடித்து நடக்கையில்... எதிரே தூரத்தில் அது... அது என்ன மிருகம்?....

அவளுக்குத் தெரிந்த எந்த மிருகத்தையும் போல அது இல்லை. புதுவிதப் பிராணியாய் இருக்கிறது. என்னவோ, ஏதோவென்று அவள் யோசிக்கையில், அது அவளை நோக்கி வருகிறது. நெருங்க நெருங்க அதன் உருவம் பயங்கரமாய் இருக்கிறது. புலியைப் போல உடல், கோரைப்

# 2 கோடுகள் கோலமாவதில்லை

பற்களுடன் மனிதத் தலை. தும்பிக்கையும் இருக்கிறது. அந்த முகத்தைப் பார்த்தால் எங்கோ, எந்த ஜன்மத்திலோ பார்த்த நினைவு. தாமதிக்கக்கூடாது. ஓடித் தப்பிக்க வேண்டும் என்று நினைக்கிறாள் காதம்பரி. முடியவில்லை.

நெஞ்சில் திகில் நிறைகிறது.

ஓடு. ஓடு ஆபத்து.

மனம் பரபரக்கிறது. கால்கள் அங்குலம் நகர மறுக்கின்றன. வேரூன்றியது போல் அசைக்க முடியாமல் பதிந்திருக்கின்றன.

அந்த மிருகம் இப்போது நாலு கால் பாய்ச்சலில் வருகிறது. சகலமும் மரத்துப் போன நிலையில் கண்களை இறுக மூடிக் கொள்கிறாள் காதம்பரி. தொண்டையிலிருந்து ஓலம் அனிச்சையாக எழுகிறது.

சட்டென்று. கண்கள் திறக்கின்றன.

பேலே சுழலும் விசிறிதான் முதலில் பார்வையில் படுகிறது.

காட்டில் ஃபான்...

இல்லை, வீட்டில்தான் இருக்கிறாள். அப்படியானால், அது...

கனவு என்றுத் தெளிய சற்று நேரமாகிறது.

கனவா!...

நீண்ட பெருமூச்சு வெளிப்பட, இறுக்கம் தளர்கிறது. நிம்மதியாய் இருக்கிறது. சுற்றுமுற்றும் பார்க்கிறாள். பட்டப்பகலிலா இப்படியொரு கனவு!...







எழுந்து ஜன்னல் திரைச்சீலைகளை அகற்றுகிறாள். உருக்கிய பொன்னாக சாயும் சூரிய ஒளி பளீரென்று உள்ளே பாய்கிறது. மத்தியானத்திலா இப்படித் தூங்கியிருக்கிறாள்: கோர்ட்டிலிருந்து வந்து காப்பி சாப்பிட்டது நினைவிலிருக்கிறது. • வேலைக்காரனை வெளியே அனுப்பிவிட்டுக் கட்டிலில் சாய்ந்து கொண்டாள். உடல் ஓய்ந்தாற் போலிருந்தாலும் மனத்தில் ஒரு மாதிரி நிம்மதி இருந்தது. சாதகமாகவோ, பாதகமாகவோ முடிவு என்று ஒன்று தெரிந்துவிட்டால் பிறகுமே அந்த நிம்மதி. அப்படியே அந்த உணர்வில் உறங்கிவிட்டிருக்க வேண்டும்.

கண்ணாடி எதிரில் போய் நின்றுகொண்டு விளக்கைப் போடுகிறாள். தாலிச் சரடு தான் முதலில் கண்ணில் படுகிறது. அதைப் புடவையின் மேல் எடுத்து விட்டுக்கொண்டு விரலால் நெருடியவாறே பார்க்கிறாள்.

இத்துடன் இதன் அத்தியாயம் முடிந்து விட்டதா...?

முடிந்துதான் விட்டது. சட்டப்படியே தீர்ப்பாகிவிட்டதே. முன்னாக உறுத்திக் கொண்டிருப்பதைவிட, இல்லாமலிருப்பதே மேலல்லவா... இந்தத் தாலிக்கே ராசி இல்லையோ, அம்மாவும் அதைக் கொஞ்ச நாள்தான் அணிந்து கொண்டாள். அவளே அகாலத்தில் போய்விட்டாள். அவள் சுமங்கலியாய்ப் போனதால் அதையே தாத்தா இவளுக்கு அணிவிக்கச் செய்தார். இவள் கழற்றி வைக்கப் போகிறாள். இருவர் கழுத்திலும் அதன் சகவாசம் ரொம்பக் குறுகியதாய்ப் போய்விட்டது!

மெள்ளத் தலைமயிரில் சிக்கிக் கொள்ளாமல் அதைக் கழற்றி மேஜையின்மேல் வைக்கிறாள். என்னவோபோல் இருக்கிறது. வெறிச்சென்றிருக்கிறதோ!...

ஆமாம், ஆனால் கழுத்தில் ஒரு நகை குறைந்த வெறிச் இல்லை இது. மனத்தில் ஏதோ காலியாகிவிட்ட, கழன்றுவிட்ட உணர்வு! திடீரென்று தன் தனிமை, தனக்கு என்று யாருமே இல்லாதது பயங்கரமாய் உறைக்கிறது காதம்பரிக்கு.

இதைத்தானா நித்யா சொன்னான் — இனிமே அந்தத் தாத்தாவும் இல்லே, தனியா திண்டாடுவேன்னானே... சாபம் கொடுப்பதுபோல் எப்படிச் சொன்னான்?

**கோமளா வரதன்**

ஹூம், நித்யாவைப் போன்றவர்கள் சொல்வதும் பலிக்க ஆரம்பிக்குமானால், அப்புறம் உலகில் நல்லதே நடக்க முடியாதே. அவன் வாயில் நல்ல வார்த்தையோ வந்தது கிடையாதே...

நித்யா என்றதுமே மனம் அந்த மிருகத்தைத்தான் நினைவுக்குக் கொண்டு வருகிறது. மனிதத் தலையில் கோரைப்பற்களும் தும்பிக்கையும் அவன் குணாதிசயங்களுக்குத்தான் ஒப்புவமையோ! கனவே எவ்வளவு நிஜம் போல இருந்தது. கால்கள் நிலத்தில் புதைந்துப் போனதை அப்பட்டமாய் உணர முடிந்ததே. நெஞ்சில் உணர்ந்த திகிலும்,

அனிச்சையாய்ப் போட்ட கூச்சலும்... நல்ல வேளை..., வீட்டில் ஆள் இல்லே. இருந் திருந்தால் என்ன நினைத்திருப்பான்? பயங் காளிக் குழந்தையைப்போல்.

தோட்டத்திலிருந்து ஜன்னல் திரைகளைப் படபடத்துக் கொண்டு வந்த காற்று இத மாக இருக்கிறது. ஒரு பெருமூச்சோடு எழுந்துப் போய் முகம் கழுவிக் கொண்டு வருகையில் வெளிச்சம் மங்கிவிட்டது. கூடத் துக்குப் போய் விளக்கைப் போடுகிறாள். பெரிய கூடம். முன்புறம் வராந்தாவும் சுற்றித் தோட்டமுமாக நல்ல வசதியான வீடு. சொந்த மனிதர்கள் என்று யாருமில் லாமல் இந்த வீட்டில் வசிப்பதென்பது சாத் தியமேயில்லே. தாத்தா இருந்தவரை அவள் மற்ற உறவுகள் அற்றுப் போனதைப் பற்றி நினைத்ததேயில்லே. அவரே அவளுக்கு எல் லாருமாக இருந்து நிறைவு செய்துவிட் டார். இரும்பு சரீரம், இன்னும் கொஞ்ச காலம் இருந்திருப்பார். நித்யாவின் சுயரூப மும் அவனிடம் பேத்தியை ஒப்படைத்த வருத்தமும் தான் அவரை இடியாய் தாக்கி விட்டன.

இப்போது நித்யாவுமில்லே.

அவளுக்கென்று யாருமில்லே.

யாருமேயில்லே. அப்படியென்றால் அவள்... அவள்... அனாதையா!...

சுரீரென்று வலிக்கிறது.

சில நொடிகள்தான்.

இல்லே, மனந்தளரக் கூடாது. அவள் மெத்தப் படித்தவள். ஏட்டுப் படிப்பு மட்டு மில்லே, தாத்தாவிடம் கேட்டுப் பெற்ற அறி வும் உள்ளவள். பச்சாதாபம், சுயிவிரக்கம், எல்லாம் மன ஆரோக்கியத்துக்கு எதிரி கள். மனவியலில் இதெல்லாம் ஆரம்பப் பாடங்களாயிற்றே.. என்ன செய்யலாம்... இந்த க்ஷணத்தில் அவள் தனியாக இருக்கக் கூடாது.

வேறு யாருமில்லேயே கூட இருக்க...

வேண்டாமே, யாரோடாவது பேச லாமே...

போனில் கூப்பி பேசலாமே...

யாரோடு?... அப்பாவோடு?

அப்பாவோடா....

ஏன் அம்மாவோடு பேசினால் என்ன...

அவர் விசாரித்தாரா, ஒரு வார்த்தைக் கேட்டாரா, இதே இன்னொரு வீடாயிருந் தால் அந்த உறவுமுறை எவ்வளவு சுமுகமா யிருந்திருக்கும்... ச், போகிறது. இப்போது தேவை அவளுக்குத்தான். இப்படி வருத்தப் பட்டுக் கொள்ளவாவது ஒரு ஆள் வேண் டும் எல்லோருக்கும்.

மணியைப் பார்க்கிறாள். ஆறரை. ஷாப் பில்தான் இருப்பார் வாஞ்சிநாதன். அவ ளுக்குப் பிறப்புக் கொடுத்தவரே அப்பா வானாலும் நெருக்கத்தைப் பொறுத்தவரை யாரோ மூன்றும் மனிதர்தான் வாஞ்சி நாதன். எப்படியானாலும் சரி, ஒரு வார்த்தை பேசுவதில் என்ன கெட்டுவிடப் போகி றது?...

பரபரவென்று நம்பரைச் சுழற்றுகிறாள் காதம்பரி. இரண்டாம் முறை மணியடிக் கையில் வாஞ்சிநாதனே போனை எடுக்கிறார்.

"ஹலோ!..."

சட்டென்று பேச்சு வரவில்லே. தொண் டையில் ஏதோ அடைத்துக் கொண்டாற் போலிருக்கிறது. உறவோட்டத்தில் ஏற்பட்ட அடைப்பின் பாதிப்போ!

"ஹலோ, ஹலோ..."

"நான்தான் காதம்பரி..."

"காதம்பரியா, சௌக்கியமா... என்ன சமாசாரம்...?"

"ஒண்ணுமில்லே, சும்மாதான்... வந்து... இன்னிக்குக் கேஸிலே தீர்ப்பாயிடுத்து... டைவோர்ஸ் கிடைச்சுடுத்து..."

"கேக்கணுமா, நீதான் ஜீவனாம்சம் கூட வேணும்னிட்டே. கேஸே ஒரு ஃபார்மாலி டிக்குத்தானே...?"

மேலே என்ன பேசுவதென்று தெரிய வில்லே. அவராக மேலே ஏதாவது கேட்க

> **எலுமிச்சம் பழங்களைப் பாலித்தின் பைகளில் போட்டு மடித்துச் சுத்தமான மண்ணில் பதித்து வைத்தால் ஒரு மாதம் வரை கெடாமல் இருக்கும். தினமும் மணல் மீது சற்றுத் தண்ணீர் தெளித்துக் கொண்டு வரவேண்டும். ஒரு மாதம் கழித்து எடுத்தாலும், பழம் அன்று பறித்த புதிய பழங்களைப் போல் இருக்கும்.**
>
> **—மதுபாலன்.**

மாட்டாரா... இன்னொரு குடும்பமானால் அப்பாவாய், ஆதரவாய் அல்லவா முழுப் பொறுப்பையும் ஏற்றிருப்பார். இந்த மாதிரி சமயங்களில்...

"காதம்பரி..."

"ம்..."

"மேலே என்ன பண்ணப் போறே..."

"இன்னும் தீர்மானம் பண்ணல்லே. இந்த ஊரை விட்டு எங்கேயாவது போயிருக்க லாம் போலிருக்கு."

"ஒரு சேஞ்ச் கூட நல்லதுதான்..."

ஏது அவரே மாலே போட்டு வழியனுப்பி வைப்பார் போலிருக்கிறதே. ஒப்புக்காகக் கூடச் சொல்லவில்லேயே, எதுக்கும்மா அலுத்துக்கறே. நாங்கள்லாம் இல்லேயா, பார்த்துக்க மாட்டோமாவென்று... அவள் மனத்தின் வழக்கமான ஆதங்கம் எழுகி றது.

"எவ்வளவு லீவு கிடைக்கும்?..."

"லீவிலே இல்லே. வேலேயை ரிசைன் பண்ணிட்டு, வேறே வேலே வெளியூரிலே பாத்துண்டு போகலாமோன்னு..."

# 1000 வீடுகள் உங்களுக்காக!

**விஜிபி ஸ்ரீ ராமானுஜர் டவுனில் சென்னை அருகே**

## 540 ச. அடி கொண்ட இரண்டு படுக்கை அறை கொண்ட வீடு

## ரூ. 70,800/

(2400 ச. அடி மனை உள்பட)

## 340 ச. அடி கொண்ட ஒரு படுக்கை அறை கொண்ட வீடு

## ரூ. 50,800/-

(2400 ச. அடி மனை உள்பட)

**விஜிபி ஹவுஸிங்**

பிரைவேட் லிமிடெட்

சைதாப்பேட்டை, சென்னை-600 015

**விஜிபி உங்கள் வாழ்க்கையை வளமாக்குகின்றது**

ஆம். சென்னை அருகே விஜிபி ஸ்ரீ ராமானுஜர் டவுனில் ரூ. 50,800/-லிருந்து நீங்கள் வீடுகள் வாங்கலாம்.

25% முதலில் மீதம் 24 சுலப மாதத் தவணைகளில் வீடு கட்ட கடன் தரும் ஸ்தாபனத்திலிருந்து 15 வருடங்களில் திருப்பி செலுத்தும் வகையில் கடன் வசதி ஏற்பாடு.



ஒரு முகப்பரு எப்போதுமே மற்றுமொரு முகப்பருவிற்கு வழி வகுக்கிறது. அதனால்தான் சிறந்த செயல்திறன் கொண்ட புதிய தரம் மிகுந்த கிளியரிசில் உங்களுக்குத் தேவை.

# புதிய தரம்மிகுந்த கிளியரிசில்

# பருக்களை நீக்க உதவுவதோடு அவை பரவாமலும் தடுக்கிறது.



முகப்பருக்கள் இயற்கையாகவே தோன்றி வளர்வது. அவை பருவ வயதில் தோன்றியும், மறைந்தும் காணப்படும். அதைப்பற்றிய கவலையோ அல்லது சட்டை செய்வதோ, அது போக வழி செய்யாது. நகத்தினால் பிடுங்கு-வதும் ஆபத்தானது. அதனால் நீங்கள் பருக்களைப் பரவச் செய்வதோடு, அதிக பருக்கள் தோன்றுதலுக்கும் காரணமாகிறீர்கள்.

**டிரைக்ளோசினுடன் சேர்ந்த புதிய தரமான கிளியரிசில் எதனால் பருக்களின் தொல்லைக்குப் பலன் மிகுந்த பதிலைத் தருகிறது.**

புதிய தரம் மிகுந்த கிளியரிசில் பருக்களை மட்டும் நீக்குவதில்லை. அவை பரவாமலும் தடுக்கிறது. ஏனென்றால் அது சிறப்பான ஆன்ட்டி-பாக்டீரியல் மருந்துக் கலவையைக் கொண்ட டிரைக்ளோசினைப் பெற்றது. டிரைக்ளோசினைக் கொண்ட புதிய தரமான கிளியரிசில், பருக்களை உண்டாக்கும் பாக்டீரியாக்களைத் தடுத்து, சருமத்தைப் புண்ணு-காது பாதுகாக்கிறது. அதனால் பருக்கள் பரவாது.

**மிகச்சிறந்த பலனை புதிய தரமான கிளியரிசிலின் மூலம் எப்படிப் பெறுவது?**

முதலில் முகத்தைக் கழுவுங்கள். பின்பு புதிய தரமான கிளியரிசிலை முகம் முழுவதும் தடவுங்கள். பருக்கள் உள்ள இடத்தில் கூடுதலாகத் தடவுங்கள்.

மிகச்சிறந்த பலனைப்பெற, புதிய தரமான கிளியரிசிலை தினமும் இரண்டு வேளைக்கு, காலையிலும், மாலையிலுமாக, குறிப்பிட்ட காலம் வரை உபயோகியுங்கள்.

**டிரைக்ளோசினுடன் இணைந்த புதிய தரமான கிளியரிசில் ஒப்பற்ற மூன்று வழிகளைக் கொண்டது.**



பருக்களைத் திறக்கிறது:



பாக்டீரியாக்களை எதிர்க்கிறது:



பருக்களை உலரச் செய்கிறது:



புதிய தரமான கிளியரிசில் மிருதுவாக்குவதோடு, பருக்கள் காய்வதாலான கறுப்புத் தோலினையும் தளர்த்துகிறது.




மேலும் வேனிஷிங் மெடிகேஷனும் கிடைக்கும்.

OBM/1556 TAV

"ஏதானு டிசைட் பண்ணு சொல்லும்மா..."

"ஏது, போக மாட்டேனுன்னு எதிர்பார்க்கறுப் போலேன்னு கேக்கறீங்க..."

ஒரு வினாடி மௌனத்துக்குப் பின் அந்தப் பக்கம் தொண்டையை கனைத்துக் கொள்வது கேட்கிறது.

"வந்து... லட்சுமி கூட ஷாப்பிலே இல்லே... கஸ்டமருங்க காத்துக்கிட்டிருக்காங்க..."

வைக்கட்டுமா என்கிறாரா... அவ்வளவு தானு... அவ்வளவேதானு...?

அவளுக்கு எரிச்சல் வருகிறது.

சே! என்ன மனிதர் இவர்?... இந்த ரெண்டு வார்த்தை போனில் பேசியது கூட லட்சுமி இல்லாததால்தான். இருந்திருந்தால்... அதற்குக் கூட பேரம் பேசியிருப்பாள். தாத்தா போய்விட்ட போது, வாஞ்சிநாதன் வரவும், வந்து காரியங்கள் செய்யவும் பேரம் பேசவில்லை, அப்படி.

'பெரியவரேதான் உறவில்லே, போடான்னுட்டாரே, இப்ப இவரு செஞ்சா ஏற்குமோ என்னவோ...'வென்று என்னமாய் பிகு செய்து கொண்டாள். இவள் பணம் தளர்த்தியவுடன் பரவாயில்லையென்றாகிவிட்டது. தான் மட்டும் ஒரு பிள்ளையாய்ப் பிறக்காமல் போனுமே. இவர்களை லட்சியமே செய்திருக்க வேண்டாமேயென்று அப்போதுதான் வருத்தப்பட்டாள்.

"காதம்பரி..."

"ம், நீங்க சொன்ன மாதிரி செஞ்ச நல்லது தான். நான் கூட எவ்வளவோ விஷயங்களிலே செஞ்சை எதிர்பார்த்து, எதிர்பார்த்து ஏமாந்துப் போயிண்டிருக்கேன். போகட்டும் ஏதானு முடிவெடுத்தேன்னு சொல்றேன். நீங்க வேலையைக் கவனியுங்க..."வென்று போனை வைக்கிறாள்.

(தொடரும்)

---

SAHODARI HELP CENTRE FOR WOMEN
மகளிர்க்கு உதவி செய்யும் நிலையம்
CONTACT SOCIAL WORKER
MONDAYS, WEDNESDAYS & THURSDAYS
SATURDAYS 9 A.M TO 5 P.M

'ஆஹா, பெண்கள் பாடுபடுகிறார்கள்' என்று கூட்டம் போட்டுப் பேசாமல், அமைதியாகப் பெண்களின் பிரச்னைகளைத் தீர்க்க உதவுகிறது 'சகோதரி.'

"இப்படிச் சொன்னவுடனே பல பெண்கள் 'எங்களுக்குப் பணம் கொடுங்கள், நான் ரொம்பக் கஷ்டப்படுகிறேன்' என்று எழுத ஆரம்பித்துவிடுகிறார்கள். நிதியுதவி செய்வது தவறானது என்பது தான் எங்கள் கருத்து. அவர்களை அது உழைத்து முன்னுக்கு வர முடியாமல் செய்துவிடுகிறது. வாழ்க்கையில் பல வகையில் கஷ்டப்படும் பெண்களை அதிலிருந்து மீள என்ன வழி என வழிகாட்ட விரும்புகிறோம்."

என்கிறார் இவ்வமைப்பில் உள்ள குமாரி சந்திரிகா.

வக்கீல், இன்ஜினியர், மனநோய் மருத்துவர், மருத்துவர், சமூகசேவகி, பேராசிரியை எனப் பல துறைகளைச் சேர்ந்த பத்துப் பெண்கள் இவ்வமைப்பிலே இருக்கிறார்கள். எந்த வகைப் பிரச்னையுடன் ஒரு பெண் வந்தாலும் இவர்களால் ஆலோசனை கூறி வழிநடத்த முடியும்.

"திருமணத்தைப் பதிவு செய்வது எவ்வளவு முக்கியமானது என்பதை வலியுறுத்துவதை எங்கள் முதல் கட்டப் பணியாக வைத்திருக்கிறோம். அப்படித் திருமணம் பதிவு செய்யப்படாமல் போய்விடுவதால் எத்தனைப் பெண்கள் அல்லலுறுகிறார்கள் என்பதை நாங்கள் பேசும் கூட்டங்களில் கூறுகிறோம்."

என்கிறார்கள். இதுதவிர ஒரு நாடகத்தைத் தயாரித்து அதன் மூலமாகவும் இக்கருத்தைப் பரப்பி வருகிறார்களாம்.

அடுத்ததாக, திரைப்பட சென்சார் போர்டில் பெண்கள் – குறிப்பாக மாதர் நல அமைப்புக்களின் பிரதிநிதியாகச் சில பெண்கள் இடம் பெற வேண்டும் எனப் போராடப் போகிறார்களாம். வேறு திக்கே இல்லாமல் அல்லல்படும் பெண்களுக்கு நிரந்தரமானதாகத் தங்கிப் பயனுள்ள வகையில் வாழ்க்கையைக் கழிக்க ஒரு நிலையத்தை ஏற்படுத்த வேண்டும் என இவர்கள் விரும்புகிறார்கள்.

"இவை போன்ற பல திட்டங்களை நாங்கள் தனியொரு முயற்சியாகச் செய்ய நாங்கள் விரும்பவில்லை. இங்குள்ள பல மாதர்நல அமைப்புக்களுடன் இணைந்து செய்யவே விரும்புகிறோம். **'Joint Action Council for Woman'** என்று அதனால்தான் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறோம்."

என்கிறார்கள் புன்னகையுடன்.

## 'சகோதரி'

## சென்ற இதழ் தொடர்ச்சி:

இவ்வளவு நல்லது செய்தும், கால மாறுதலால் அவளுடைய லேடீஸ் மாகசீனின் விற்பனை குறைந்தது. "தி காஸ்கட்", "பிளவர்ஸ் ஆஃப் லிட்டரேசர்" போன்ற போட்டிப் பத்திரிகைகளினால் அவள் பத்திரிகையின் விற்பனை பாதிக்கப்பட்டது.

பிலடெல்பியாவில் அப்போது லூயிஸ் அன்டோனி கூடி என்பவர் "லேடீஸ் புக்" என்று ஒரு பத்திரிகையைத் தொடங்கினார்.

ஸாராவின் லேடீஸ் மாகசின்தான் அவருக்குப் போட்டிப் பத்திரிகை. அதை விலைக்கு வாங்கிவிட்டால் போட்டி ஒழிந்து விடும். அதற்கான முயற்சிகளில் அவர் இறங்கினார்.

ஒரு ஆண்டுக் காலம் அவர் முயற்சித்தார். ஸாராவைக் கவருவதற்காகத் தன் பத்திரிகையில் அவளைப் பாராட்டி நிறைய எழுதினார். அவளுக்கு "அதிர்ஷ்டக்காரப் பெண்மணி" என்று ஐஸ் வைத்தார். ஆனால் ஸாரா இதற்கெல்லாம் மசியவே இல்லை.

ஆனால் கூடி கெட்டிக்காரர். அவர் ஸாரா என்கிற பெண்மணியின் தாய்ப் பாசத்தைப் பயன்படுத்த முடிவு செய்தார். ஸாராவின் மகன் அப்போது கவிதை எழுத ஆரம்பித்திருந்தான். அதில் ஒன்றை வாங்கித் தன் இதழில் வெளியிட்டார். தாய்ப் பாசம் மகனின் கவிதை கண்டதும் பிடிவாதத்திலிருந்து இறங்கி வந்துவிட்டது.

1837—ல் தன் பத்திரிகையை லூயிஸின் பத்திரிகையுடன் இணையவும் அதன் ஆசிரியையாக இருக்கவும் ஸாரா சம்மதித்தாள். அவளுடைய பிள்ளைகள் ஹார்வார்ட் பல்கலைக்கழகத்தில் படிப்பை முடிக்கும் வரை பாஸ்டனிலிருந்தே பத்திரிகையை எடிட் செய்யச் சம்மதிக்க வேண்டும் என்கிற நிபந்தனையுடன்.

இரண்டு பத்திரிகைகளும் இப்படி இணைந்ததும் "கூடீஸ் லேடி புக்" விரைவிலேயே 1,50,000 பிரதிக்கும் அதிகமாக விற்பனை அதிகரித்து விட்டது.

அந்த நாளில் சரியான போக்குவரத்து வசதிகள் இல்லாததால் பெரும்பாலான பத்திரிகைகள் வெளியூர்களுக்குச் செல்ல அதிக நாட்கள் ஆயின.

பல பத்திரிகை சுற்றுப்புற ஊர்களில் மட்டும் விற்றால் போதும் என்றுபேசாதிருந்தன.





## பெண்களை

ஆனால் 'கூடீஸ் லேடீஸ் புக்' தூரதூர வெளியூர்களுக்கும் தன் இதழ்களை அனுப்புவதில் அக்கறை காட்டி, அதற்காக வண்டிப் போக்குவரத்து வசதிகளை அரசு செய்ய வேண்டும் என்று ஒரு போராட்டம் நடத்தி, அதில் வெற்றியும் கண்டது.

ஸாராவின் இந்த முயற்சியால் தூர இடங்களுக்குப் பத்திரிகைகள் சீக்கிரமாகச் செல்ல வழி ஏற்பட்டது. இதன்பின் ஆசிரியை ஸாராவையும், பிரசுர கர்த்தாவையும் தினப்பத்திரிகைகளே பாராட்ட ஆரம்பித்து விட்டன.

இதனால் உற்சாகமடைந்த லூயிஸ் தன் இதழில் ஒன்றின் கடைசிப் பக்கத்தில் இப்படி எழுதினார்: "இந்தப் பத்திரிகை எல்லாக் கடந்த கால, எதிர்காலப் பத்திரிகைகளையும் மிஞ்சுகிறது" ஆனால் அச்சுக்குப் போகுமுன் தக்க சமயத்தில் இதை அறிந்த ஆசிரியை இந்தத் தற்பெருமையைத்.

# உயர்த்திய ஆசிரியை

தடுத்து நிறுத்திவிட்டாள்.

ஸாரா தன் பத்திரிகையில் பாஷன் குறிப்புகளையும் படங்களையும் வெளியிட்ட போது ஒரு வேடிக்கை நடந்தது. பத்திரிகையில் இணைப்பாகச் சேர்க்கப்பட்ட அந்த படங்களின் ஆயிரக்கணக்கான பிரதிகளுக்கு சுமார் 150 பெண்கள் தங்கள் கையினாலேயே வண்ணம் தீட்டிக் கொடுத்தார்கள். (அந்த நாளில் வண்ண அச்சடிப்பு வரவில்லை.)

ஆனால் எல்லோரும் ஒரே மாதிரியாக வண்ணம் தீட்ட முடியவில்லை. சில சமயம் சரியான வண்ணம் செலவாகிவிடும். அது வரும்வரை காத்திராமல் கைவசமுள்ள வேறு வண்ணத்தைத் தீட்டிவிடுவார்கள்.

இதனால் ஒரு வாசகருக்கு ஒரு நிறப் படமும் மற்றொருவருக்கு வேறு நிறப்படமுமாகக் கிடைத்தன. இந்தக் குழப்பத்தைப் போக்க ஆசிரியை எழுதினாள்: "நாங்கள் படத்திற்கு விதவிதமாக வண்ணம் தீட்டுகிறோம். ஒரே பகுதியில் வசிக்கும் இருவர் தங்கள் படங்களை ஒப்பிட்டுப் பார்த்து விருப்பமான வண்ணத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்!" எப்படிச் சமாளிப்பு?

அந்த நாளில் அமெரிக்க நாட்டில் பெண்களுக்கான உயர்நிலைப் பள்ளியே கிடையாது. ஸாராவின் உள்ளத்தில் இது பெரியப் பிரச்னையாக உருவெடுத்தது. பெண் கல்வியின் தேவையை அவள் உணர்ந்தாள். தான் எழுதிய காதல் கதைகள், படங்கள் எல்லாவற்றிலும் இந்தப் பிரச்னையை புகுத்தத் தொடங்கினாள்.

ஒரு சமயம் ஒரு சுவாரஸ்யமான தொடர் கதையில் ஒரு அழகான பணக்கார வாலிபன் கல்வியறிவற்ற மனைவியைத் தனக்குத் தகுதியில்லாதவளாக நினைத்து வருத்தப் படுவதாகக் குறிப்பிட்டிருந்தாள்.

இதைப் படிக்கிற பெண்களுக்கு, 'நம்மையும் ஒரு ஆண் ஒதுக்கிவிடக் கூடாதே!' என்ற கவலை வரும் இல்லையா? படிக்க முனைவாள் இல்லையா?

பிற்காலத்தில் பத்திரிகை நன்றாக, உறுதியான இடம் பெற்று, தேசத்தில் தன் குரலுக்கு ஒரு மதிப்பும் இருக்கிறது என்று ஏற்பட்டது. ஸாரா தன் எண்ணங்களை வெளிப்படையாகவே வெளியிட ஆரம்பித்தாள். 1840—ல் "நிறைய பெண்கள் டாக்டர் தொழில் படிக்க வர வேண்டும்" என்று மும்முரமாக ஒரு புயல் பிரசாரமே செய்தாள். அப்போது ஒரு ஆண் எழுதினார். "நீங்கள் ஆண்களையே டாக்டர் தொழிலிலிருந்து விரட்டி விடுவீர்கள் போலிருக்கிறதே! இப்போது டாக்டர் தொழில் செய்பவர்களையும் சேர்த்தே கூறுகிறேன்."

பதிலுக்கு ஸாரா, "மருத்துவத் துறையில் ஆண்கள் பெண்களுடன் ஒத்துப் போக முடியாவிட்டால் அவர்கள் தங்களுக்கு விருப்பமான தொழிலைத் தாராளமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும்" என்று ஒரு போடு போட்டாள். அவ்வளவு தீரம் வந்துவிட்டது அவளுக்கு.

நியூயார்க் ஸ்டோர் என்ற பிரபல வர்த்தக நிறுவனத்தைத் தோற்றுவித்த எ.டி. ஸ்டீவர்டிடம் வழக்கமான முறையைக் கைவிட்டு நிறைய பெண் பணியாளர்களை அமர்த்தும்படி ஸாரா துணிந்து ஆலோசனை கூறினாள்.

இதற்குப் பாதிரிமார்கள் உட்பட பலரிடமிருந்து எதிர்ப்பு வந்தது. "பெண்களைக் கடையில் வேலை செய்ய அமர்த்தினால் அது கடையாக இருக்காது. விபசார விடுதியாகிவிடும்" என்று இவர்கள் கூக்குரலிட்டார்கள்.

ஸ்டீவர்ட் அவற்றை லட்சியம் செய்யாமல் பெண்களை வேலைக்கு அமர்த்திக் கொண்டார். எந்த விபரீதமும் நேர்ந்துவிடவில்லை. கடை நன்றாகவே நடந்தது.

அடுத்தபடியாக ஸாரா ஆண்களுக்கெதிரான போராட்டத்தில் மேலும் ஒரு அடி எடுத்து வைத்தார். ஆங்கிலத்தில் எல்லாப் பெண்களையும் குறிக்கும் "பிமேல் **(Female)** என்ற சொல்லை யாரும் உபயோகிக்கக் கூடாது. வுமன் என்றுதான் குறிக்க வேண்டும்" என்று ஒரு புதிய போர் முனையைத் தொடங்கி பதினொரு ஆண்டுக்காலம் நடத்தினாள். அப்போது அவள் ஆண்களைச் செய்த நையாண்டி வெகு பிரசித்தம்.

இந்தப் போராட்டம் உச்ச நிலையை

ஆர். அருந்ததி

அடைந்தபோது ஒன்று நடந்தது. மாத்யூ வாஸர் என்பவரை உற்சாகப்படுத்தி முடுக்கிவிட்டு, நாட்டின் முதல் பெண்கள் கல்லூரியைத் துவங்கச் செய்தாள் ஸாரா.

அதில் பெண்களேயே பேராசிரியைகளாக அமர்த்தி பெண்களுக்கு ஏற்ப ஒரு புதிய பாடத்திட்டத்தை உருவாக்கி அமல் படுத்தச் சொன்னாள்.

''கூடிஸ் லேடிஸ் புக்கின்'' ஆசிரியை தன் வாசக நேயர்களுடன் நேரிடையான தொடர்பை என்றும் கொண்டிருந்தாள்.

ஆயிரக்கணக்கானவர்கள் தங்கள் பிரச்னைகளை அவளுக்குக் கடிதமாக எழுதிக் கொண்டே இருந்தார்கள். அவளும் அவர்களுக்கு பதில் எழுத சோம்பியதே இல்லை.

தான் எழுதும் எல்லாக் கடிதத்திலும் கையெழுத்திடும் போது உங்கள் ''உண்மையான சிநேகிதி'' என்பதைக் குறிப்பிடவும் அவள் தவறியதே இல்லை.

கிராமங்களிலிருந்தெல்லாம் எத்தனையோ பெண்கள் தங்களுக்கு நாகரீகத் தொப்பிகள், திருமண உடைகள், போன்றவற்றை பிலடல்பியா நகரக் கடைகளில் அனுப்பும்படி கோருவார்கள்.

> **சுத்தமான தண்ணீரே உலகின் முதன்மையான மருந்து.**
>
> **—மதுபாலன்.**

இதற்காகவே ஸாரா தன் பத்திரிகையிலேயே ''பொருள்களை வாங்கி அனுப்பும் பகுதியை''த் தொடங்கினாள்.

புதிதாகக் குழந்தை பெற்ற பல தாய்மார்கள் தம் குழந்தையின் பெயர் சூட்டு விழா உடையை வாங்கி அனுப்பச் சொல்வார்கள். செய்வாள். கிராமத்துப் பெண்களுக்கு அந்த நாளில் நகரங்களில் தோன்றியிருந்த புதிய நடனத்தில் அக்கறை எழுந்தது. அதைப்பற்றி அவர்கள் அறிய விரும்பினார்கள். இதற்காக ஸாரா அந்த நடனம் ஆடும் விதத்தைப் பற்றி பல கட்டுரைகளை வெளியிட்டாள்.

இத்தனைப் போராட்டங்கள் ஆக்கப் பணிகளுக்கு இடையிலும் அவள் தான் எழுதுவதை நிறுத்தவே இல்லை. குழந்தைகளுக்காக அவள் எழுதிய ''மேரீஸ் லாம்ப்'' கவிதைகள் அழியாத சித்திரமாக உலக இலக்கியத்தில் ஏறிவிட்டன.

அவள் இரண்டு டஜன் நாவல்கள் எழுதியிருக்கிறாள். அவற்றில் குறிப்பிடத் தக்கது 'ஹாரி, விதவையின் மகன்!' 'மூன்று மணி அல்லது காதலின் பிரார்த்தனை' ஆகியவை.

அவளுடைய அடுத்த சாதனை உலகத் தொடக்கத்திலிருந்து 1854 வரை பிரபலமான பெண்களின் பெயர்களும் அவர்களுடைய அரிய பணிகளையும் தொகுத்து அவள் வழங்கியிருக்கிறாள். பெண்களின் மதிப்பை உயர்த்த ஸாரா மேற்கொண்ட முயற்சிகளில் இது ஒன்று. இத்தனை அரும்பாடுபட்டு தொகுத்து உலகின் முன் இந்தப் புத்தகத்தை வைத்த ஸாரா, அதை யாருக்கு காணிக்கையாக்கினாள் தெரியுமா? அமெரிக்க ஆண்களுக்குத் தான். ''பார்த்துக் கொள்ளுங்கள் பெண்மையை'' என்கிற மாதிரி!

பெண்களின் வீட்டு வேலைகளை சுலபமாக்குவதற்காகவும் ஸாரா தன் பத்திரிகை மூலம் பாடுபட்டாள். ஏதாவது புதிய கண்டுபிடிப்பு வருதா என்று சதா அவள் காத்துக் கொண்டேயிருந்தாள். முதல் இரட்டை பாய்லர், முட்டை அடிக்கும் சாதனம் போன்றவை வந்தபோது அவள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

1853—ல் அமெரிக்க ஆராய்ச்சியாளர்களை ''துணிகளைச் சுத்தம் செய்து கொடுக்க ''ஒரு சாதனத்தைக் கண்டுபிடிக்குமாறு கேட்டுக் கொண்டாள் ஸாரா. அதன் பயனாக ஒரு ஆண்டுக்குப் பிறகு முதல் துணி வெளுக்கும் யந்திரம் ஒன்று வெளி வந்தது. அதன் விலை நாற்பது டாலர். அது அமெரிக்கப் பெண்களின் இடுப்பு ஒடியாமல் காத்தது.

இதைத் தொடர்ந்து, பெண்களுக்கு உதவும் பல பொருள்கள் வர ஆரம்பித்தன. ஆனால் ஸாரா எந்த ஒரு கண்டுபிடிப்பையும் நன்கு சோதித்துப் பார்க்காமல் தன் பத்திரிகையில் அவற்றை சிபாரிசு செய்வது கிடையாது.

சாஸ் விளக்குகள் தோன்றிய போது ஸாரா உடனே அதைத் தன் வாசகர்களுக்கு சிபாரிசு செய்து விடவில்லை. தானே நன்றாகப் பல தடவை சோதனை செய்து பார்த்த பிறகே ''அது பத்திரமானது'' என்று அறிவித்தாள்.

''பெண்களுக்கு உடல் ஆரோக்கியத்தை விட கல்வி வேறில்லை'' என்று ஸாரா எழுதினாள். உடல் அழகே நாகரீகமாகக் கருதப்பட்ட அந்தக் காலத்தில் உடல் ஆரோக்கியம் இல்லாத அழகும் ஒரு அழகா என்று ஸாரா சாடினாள்.

குளிப்பதையும், குளிக்கும் தொட்டியையும் ''பேயின் பொறி'' என்று நம்பிக்கை நிலவிய அந்தச் சமயத்தில் ஸாரா தினமும்

குளிக்கும்படி தன் இனப்பெண்களுக்கு ஆலோசனை கூறினுள். இறுக்கமான உடையையும் காற்றுப் புகாத படுக்கையறைகளையும் எதிர்த்தாள்

''இறுக்கமான உடை நாகரீகமாகக் கருதப்படுகிறது. அது அழகுக்காக ஏற்பட்டதல்ல. குறையை மறைப்பதற்காகவே'' என்று எழுதினுள் ஸாரா.

தங்கள் பெண்களுக்கு நீந்தக் கற்றுக் கொடுக்கும்படி பெற்ருேர்களுக்கு ஆலோசனை கூறினுள் ஸாரா. ''படகில் பயணம் செய்யும் போது எதிர்பாராத விபத்து ஏற்பட்டால் அது உதவும்'' என்ருள். பிக்னிக்கிற்குச் சென்ற ஒரு பருவ மங்கை யாருடனே திருமண நிச்சய தார்த்தம் செய்துகொண்டு திரும்பியதைக் குறிப்பிட்டு அவள் கிண்டலாக எழுதினுள். ''எந்த வெயில், சுத்தமான காற்று, இயற்கையான சூழ்நிலை அவளை மாற்றியதோ யாருக்குத் தெரியும்.'' இது வேதனையோடு எழுதப்பட்டதுதான்.

ஸாரா ஜோஸப் ஹேல் 90—ஆவது வயதில் மரணமடைந்தாள். அதற்கு பதினுறு மாதங்கள் முன்வரை அவள் தன் பத்திரிகையின் ஆசிரியைப் பணியைச் சிறப்பாகச் செய்து வந்தாள்.

1877 டிசம்பர் இதழ்தான் அவள் தன் கடைசி தலையங்கம் எழுதியது. ''லூயிஸ் கூட இறந்து விட்டார். பத்திரிகையையும் வேறு ஒருவருக்கு விற்ருகிவிட்டது. 90 வயதை அடைந்துவிட்டேன். எனது நாட்டுப் பெண்களிடம் விடைபெற வேண்டிய தருணம் இது. அவர்கள் முன்ஞல் புதிய கலாசாரமும் நற்பணிகளும் நிறைய இருக்கின்றன. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அவர்களுக்கு இவை தெரியவே தெரியாது. இந்தச் சந்தர்ப்பங்களை நன்ருகப் பயன்படுத்திக் கொண்டு அவர்கள் முன்னேறி உன்னதமாக வாழ வேண்டும் என்பதே என் மனப்பூர்வமான பிரார்த்தனை.''

படிப்பறிவில்லாத காலத்தில் ஒரு பெண்மணி இவ்வளவு சாதித்ததே பெரிய அதிசயம். அமெரிக்காவின் பிரபலமாக நன்றி தெரிவிக்கப்படும் நாளை தேசிய விடுமுறையாக அறிவிக்கும்படி ஜனுதிபதி லிங்கனை வற்புறுத்தி அதில் வெற்றி பெற்றவள் இந்த ஸாராதான். அவள் பெயரைத் தெரியாத அமெரிக்க குடும்பமே இன்று இல்லை.

(முற்றும்)

> **புகை அதிகம் பிடிப்பதனுல் சிறுநீர் வெளியேற்றத்திற்குத் தடையேற்படுகிறது.**
> **—மதுபாலன்.**

---

# இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள்: கோதுமை

கடைசிதேதி: 15–3–85

## சமையல் கூப்பன்

................ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# திருமண மலர்



கௌதம கோத்திரம், வடமாள், மூலம், வயது 26, பி. டெக். கம்பெனியில் ஆபீஸராக உள்ள பையனுக்கு, கிராஜுவேட்டுக்குக் குறையாமல், மாற்றல் ஆகக் கூடிய வேலையில் உள்ள, கண்ணாடி அணியாத பெண் தேவை. ஐயரில் உட்பிரிவுகள் பரவாயில்லை. உயரம் 5' 9,'' 4 தம்பிகள், தகப்பனார் இல்லை. 4—வது தம்பிக்கு வெள்ளைத் தழும்புகள் இருக்கிறது. 2 வம்சத்திலும் இல்லை. பெட்டி எண்: 1990.

செங்குந்த முதலியார் கைக்கோளர் பிரிவில் விவாகரத்துப் பெற்று நல்ல வேலையில் உள்ள வரனுக்கு வேலையில் உள்ளவரோ அல்லது படித்தவரோ பெண் தேவை. ஜாதகம், போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1991.

வன்னியர் குல ரோமன் கத்தோலிக்க பி.எஸ்ஸி., பி. எட்., படித்து, தனியார் துறையில் ஆசிரியையாக வேலை செய்யும் 29 வயது பெண்ணிற்கு மணமகன் தேவை. விபரங்களுடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 1992.

வன்னியர் குல ரோமன் கத்தோலிக்க பி.ஈ. எம். டெக்., படித்து அரசாங்கத்தில் உயர் அதிகாரியாக ரூ. 3,500/— சம்பளம் பெறும் மணமகனுக்கு எம். பி. பி. எஸ். அல்லது அதற்கு மேலும் படித்த அழகான மணமகள் தேவை. ஜாதி, மத, பேதமில்லை. புகைப்படம் மற்றும் விபரங்களுடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 1993.

ரெட்டியார் வகுப்பு வயது 22, வசதியுள்ள மணமகளுக்கு அதே பிரிவில் மத்திய அரசில் வேலை செய்யும் மணமகன் தேவை. மற்றும் பிராமண வடமாள் சத்துணவுத் திட்டத்தில் பணிபுரியும் பெண்ணிற்கு மணமகன் தேவை. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண்: 1994.

மராத்திய, ஸ்மார்த்த, பாரத்வாஜம், 27 வயது, அனுஷம் எஸ். எஸ். எல். ஸி., 5 அடி, சிவப்பு நிறம், அழகுடன் பக்தியும், வீட்டு வேலையில் திறமை. இடது கை சிறிது முடியாத நிலை. ஆனால் பாதகமில்லை. இரக்கமுள்ள, நிலையான உத்தியோகஸ்தர்கள் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். சுத்த ஜாதகம் எளிய திருமணம். பெட்டி எண்: 1995.

மராத்திய, ஸ்மார்த்த, பாரத்வாஜம், 25 வயது கிருத்திகை, எஸ். எஸ். எல். ஸி., 5 அடி, சிவப்பு நிறம், அழகுடன், பக்தியும், வீட்டு வேலையில் திறமை, இரக்கமுள்ள, நிலையான உத்தியோகஸ்தர்கள் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். சுத்த ஜாதகம். எளிய திருமணம். பெட்டி எண்: 1996.

அரசு வேலை, நிரந்தரம், மாத வருமானம் 1000/— வயது 36, தாரமிழந்தவர், 4 வயது ஆண் குழந்தை உள்ளது. தமிழ் செட்டியார். இவருக்கு ஓரளவு வசதியுடன் சைவ குடும்பத்தில் பெண் தேவை. பெட்டி எண்: 1997.

இந்து சைவ வெள்ளாளர் பி. ஈ. என்ஜினியர் (29—5.8'') ரூ. 15,000 மாத வருமானம் இங்கிலீஷ் கம்பெனி ஷார்ஜா யு.ஏ.ஈ.யில் வேலை பார்க்கும் நல்ல உடல் கட்டான, நிறம், அழகான மணமகனுக்கு தகுந்த, அழகான, படித்த வசதியான குடும்பத்தில் இருந்து பெண் உடனே தேவை. ஜாதகம் மற்றும் முழு விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண்: 1998.

தெலுங்கு பிராமணர் — சாலவாக கோத்திரம் — பாங்கு வேலை — ரூ. 1000/— எம். ஏ. பட்டம் — 5' 4'' —28 வயது — உத்திரட்டாதி — சுத்த ஜாதகம் — மிக லக்ஷணமான எடுப்பான தோற்றம், குடும்ப பாங்கு, தெய்வ பக்தி, இன்சொல் கூடிய மிகவும் குணவதியான பெண்ணுக்கு — ஏற்ப, நிரந்தர வேலை பார்க்கும், பரந்த நோக்கம் கொண்ட வரன் தேவை. ஆடம்பரமற்ற நடுத்தரத் திருமணம் — ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1999.

பாரத்வாஜம், வடகலை ஐயங்கார், 5' 10'' உயரமுள்ள, டி. பி. டெக் படித்து ஹைதராபாத் ''தி ஹிண்டு''வில் 10 ஆண்டுகளாக பணிபுரியும் 30 வயதான ''பூரம்'' நக்ஷத்திர வரனுக்கு, 26 வயதில் நல்ல அழகுள்ள தஞ்சை மாவட்ட (அ) தமிழ்நாட்டைச் சேர்ந்த மணமகள் தேவை. பெட்டி எண்: 2000.

சென்னையில் அரசுடைமையாக்கப்பட்ட வங்கியில் கிளார்க், பட்டதாரி, சோழிய வேளாளர், 31/180/1300/—, எட்டாமிடத்தில் செவ்வாய், ஆயில்ய நக்ஷத்திரமுள்ள மணமகனுக்கு, வேலையிலுள்ள / அல்லாத எடுப்பான தோற்றமுடைய மணமகள் தேவை. சாதியொரு பேதமில்லை. ஜாதகம், புகைப்படம் மற்றும் விபரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2001.

வயது 28, எம். ஏ. பி. எட்., பள்ளி ஆசிரியையாக, வேலை பார்க்கும் பெண்ணிற்கு, மணமகன், தாரம் இழந்தவராகவும், குழந்தைகள் ஒன்றோ, இரண்டோ இருப்பவராகவும், மணமகன் பட்டதாரியாகவும், அரசாங்க உத்தியோகத்தில் இருப்பவராகவும், சைவ வேளாளர் இனத்தவராகவும், வயது 35—க்குள் இருப்பவராகவும் இருக்க வேண்டும். பெட்டி எண்: 2002.

செவ்வாய் தோஷமுள்ள, டிப்ளமோ படித்த, சென்னை (மணலி) தனியார் நிறுவனத்தில் வேலை செய்யும், 27 வயதுள்ள தமிழ் யாதவ மணமகனுக்கு, நன்கு படித்த குடும்பப்பாங்குள்ள மணமகள் தேவை. பெட்டி எண்: 2003.

வன்னியகுல க்ஷத்திரிய, வசதியான குடும்பத்தைச் சேர்ந்த, நகரக் கல்லூரி ஒன்றில் உதவிப் பேராசிரியராக இருக்கும் 29 வயதுள்ள நல்ல உயரம் நிறம் வாய்ந்த அழகான மணமகனுக்கு நல்ல குடும்பத்தைச் சார்ந்த அழகான பட்டதாரி மணமகள் தேவை. பெட்டி எண்: 2004.

பிரஹசரணம், காஸ்யப கோத்திரம், பூராட நட்சத்திரம் (முதல் பாதம்) 32 வயதுள்ள பி. ஏ. படித்த மாதம் ரூ. 1200. சம்பாதிக்கும் வரனுக்கு படித்த வேலை பார்க்கும் குடும்பப்பாங்கான மணமகள் தேவை. விபரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2005.

28 வயது டிப்ளமா என்ஜினியர் சென்ட்ரல் கவர்ன்மெண்டில் வேலை, மாதம் ரூ. 1800. சம்பளம். சொத்துள்ள சோழிய வெள்ளாளர் பிரிவைச் சேர்ந்த மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த, அழகும், அடக்கமும் உள்ள பிளஸ்–2 படித்துள்ள, உயரம் 5.4'' மணமகள் தேவை. பெட்டி எண்: 2006.

சோழிய வெள்ளாளர் பிள்ளை வகுப்பைச்சேர்ந்த நல்ல வசதியுடைய மத்திய அரசு நிறுவனத்தில் கிளார்க்காக ரூ. 1200 ஊதியம் பெறும் 30 வயதுடைய வலது கால் சிறிது லேசாக ஊனமுற்ற மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த மணமகள் தேவை. பெட்டி எண்: 2007.

ஐயர், காஸ்யப கோத்திரம், சோழியா, அவிட்ட நட்சத்திரம், எஸ். எஸ்.எல்.சி., டைப்பிங் லோயர் பாஸ் செய்த 29 வயது திருவனந்தபுரம் பெண்ணுக்கு நல்ல அழகுள்ள வீட்டு வேலையும் தெரிந்த பெண்ணுக்கு நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் எழுதவும். பெட்டி எண்: 2008.

பரத்வாஜ கோத்திரம், தென்கலை, சுவாதி நட்சத்திரம், பி. யூ. சி., ஹிந்தியில் எம். ஏ., வயது 26, 5.1'' உள்ள குடும்பப்பாங்கான பெண்ணுக்கு நல்ல வேலையில் உள்ள பட்டதாரி வரன் தேவை. ஜாதகத்துடன் குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2009.

வன்னிய குல க்ஷத்திரியர் வயது 25, படிப்பு எம். காம்., (ஐ. சி. டபுள்யூ. ஏ.) எல். ஐ. சி. உத்தியோகம், சம்பளம் ரூ. 1000. வகுப்பைச் சேர்ந்த வசதியான குடும்பத்தைச் சேர்ந்த மணமகனுக்கு, அதே வகுப்பைச் சேர்ந்த அழகான, படித்த கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. புகைப்படம், ஜாதகம் மற்றும் விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2010.

வடமாள், கௌண்டின்ய, அவிட்டம், வயது 33, எஸ். எஸ். எல். சி., சிவப்புநிறம், குடும்பப்பாங்கான நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணிற்கு அரசாங்க உத்தியோகத்தில் (அ) தனியார் துறையில் வேலை பார்க்கும் மணமகன் தேவை. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண்: 2011.

பாரத்வாஜ கோத்திரம், வடகலை அய்யங்கார் அரசுடைமை வங்கியில் 1300 சம்பளம் வாங்கும் பி. எஸ். சி. பி. எட் படித்த 31 வயதுப் பையனுக்கு படித்த வேலையில் உள்ள, அல்லது வசதியுள்ள குடும்பத்தைச் சேர்ந்த பெண் தேவை. புகைப்படம். ஜாதகத்துடன் எழுதவும். பெட்டி எண்: 2012.

வன்னியர் குல க்ஷத்திரியர் வகுப்பைச் சேர்ந்த அரசினர் கல்லூரியில் பணிபுரியும் துணைப்பேராசிரியர் வயது 31, உயரம் 150 செ. மீ. ஊதியம் ரூ. 1800. குடும்பப் பிரச்னைகள் இல்லாமல் தனித்து வாழும் நற்பண்புகள் வாய்ந்த வரனுக்குக் குடும்பப்பாங்கான சிவந்த நிறமுள்ள, நல்ல அழகுள்ள பட்டதாரிப் பெண் தேவை. வயது 25–க்குள், உயரம் 150–155 செ. மீ. எவ்வித வரதட்சிணையும் தேவை இல்லை. போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2013.

அரசினர் உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராகப் பணிபுரியும் இராமநாதபுரம் மாவட்டம் கம்மவார் நாயுடு வகுப்பைச் சார்ந்த 43 வயதும், முதல் மனைவியை இழந்து 10, 7 வயதில் இரு ஆண் குழந்தைகளுடன் சென்னையில் சொந்த வீடும், மாத வருமானம் ரூ. 2400 கொண்டவருக்கு அதே இனத்தைச் சேர்ந்த பட்டதாரிப் பெண் தேவை. பெட்டி எண்: 2014.

அய்யர், வடமாள், பாரத்வாஜ கோத்திரம், மகம் நட்சத்திரம், 24 வயதுள்ள பி. எஸ்ஸி. பட்டதாரி, பாங்கில் வேலை பார்க்கும் பெண்ணிற்கு அரசாங்கம் அல்லது உயர்தர கம்பெனி அல்லது பாங்கு இவைகளில் வேலை பார்க்கும் பட்டதாரிப் பையன்கள் 31 வயதுக்குள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகம் மற்றும் விவரத்தைத் தெரிவிக்கவும். பெட்டி எண்: 2015.

**திருமணமலர்ப் பகுதியில் விளம்பரம் செய்ய கட்டணம் ரூ. 30/– தொகையை 'மங்கையர் மலர்' என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பவேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒருவருக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். பதில் அனுப்புபவர்கள் ''விளம்பரதாரர், பெட்டி எண்.... c/o மங்கையர் மலர், கிண்டி, சென்னை-600032 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.**

அரசுத் துறையில் கணக்கராகப் பணிபுரியும் 32 வயதான தெலுங்கு பிராமணர், முலகநாடு, கார்கஸ்ய கோத்திரம், ஆயில்ய நக்ஷத்திரம் (தோஷமுள்ளது) பட்டதாரியான பையனுக்கு மாற்றல் கிடைக்கக் கூடிய வேலையிலுள்ள பெண் தேவை. உட்பிரிவுகள் பாதகமில்லை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2016.

சென்னை பள்ளி ஆசிரியை, ப்ரஹசரணம், ஸ்ரீவத்ஸ, மூலம், எம். ஏ. பி. எட்., 4.9'' 30 வயது பெண்ணுக்கு, 40 வயதுக்குள் வேலையிலுள்ள பட்டதாரி, மணமகன் தேவை. ஸ்மார்த்த உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2017.

சென்னையில் பெரிய கம்பெனியில் நிரந்தர உத்தியோகம் ரூ. 1000. மாத சம்பளம், பி. ஏ., வயது 29, ஷடமர்ஷண கோத்திரம், ரோஹிணி

வடமாள், உயரம் 5' 4'' உள்ள பையனுக்கு படித்த நல்ல வேலையிலுள்ள மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகம், விபரங் களும் அனுப்பவும். பெட்டி எண்: 2018.

24 மனை தெலுங்கு செட்டியார், மும்முடிய குலம் 30 வயது தனியார் கம்பெனியில் ரூ. 1800. சம்பளத்தில் ஸ்டெனோவாக வேலை. இதே ஜாதியில் 25 வயதுக்குட்பட்ட படித்த பெண் தேவை. புகைப்படம் மற்றும் விபரங் களுடனும் விண்ணப்பிக்கவும். புகைப்படம் திருப்பி அனுப்பப்படும். பெட்டி எண்: 2019.

வயது 30, மாத வருமானம் ரூ. 2000. கவுண்டர் இனத்தைச் சேர்ந்த வரனுக்கும், இவர் தங்கை வயது 24, குடும்பப்பாங்கானவள் ஆகிய இருவருக்கும் மணமக்கள் தேவை. பெண் கொடுத்தும் பெண் எடுப்பதற்கும் சம்மதம். கண் டிப்பாகப் போட்டோவுடன் விண்ணப்பிக்கவும்- பெட்டி எண்: 2020.

.சைவ வெள்ளாளப் பிள்ளை வகுப்பைச் சேர்ந்த தஞ்சை மாவட்ட நிலக்கவான்தாரின் எஸ். எஸ். எல். ஸி. படித்த 20 வயதுடைய பெண்ணிற்கு அதே வகுப்பைச் சேர்ந்த நல்ல வேலை பார்க்கும் மணமகன் தேவை. ஜாதகம் மற்றும் விவரங் களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2021.

ஸ்ரீவத்ஸ கோத்திரம், வடமாள், திருவாதிரை, எஸ். எஸ். எல். ஸி., நன்றாகச் சமையல் தையல் வீட்டு நிர்வாகம் தெரிந்த 28 வயதுடைய காது கேளாத ஊமைப் பெண்ணுக்கு நல்ல குணம், கருணை உள்ளம் கொண்ட படித்த நிரந்தர வருமானம் கொண்ட மணமகன் தேவை. கோவிலில் வைத்துத் திருமணம் நடத்தித் தரப்படும். வரதட்சிணை கொடுக்க வசதி யில்லை. இதேமாதிரி குறையுள்ள வேலை பார்க்கும் ஊமைப் பையனானாலும் பரவாயில்லை. கடைசி வரைக்கும் வைத்துக் காப்பாற்ற வேண்டும். போட்டோவுடன் பிராமணர்கள் மட்டும் விண்ணப் பிக்கவும். பெட்டி எண்: 2022.

வெள்ளாளப் பிள்ளை, வயது 27, வசீகரத் தோற்றம், மாதம் ரூ. 500. சம்பாதிக்கும் மணமக னுக்கு அதே வகுப்பு, அழகுள்ள, குடும்பப்பாங் குடன், வசதியுள்ள குடும்பத்திலிருந்து பெண் தேவை. திருமணத்திற்குப்பிறகு தனியாகத் தொழில் செய்ய உத்தேசம். மணமகன் தந்தை யின் மாத வருமானம் ரூ. 2000. வசதியான குடும்பம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2023.

வடமாள், கௌண்டின்ய கோத்திரம், கேட்டை, செப்பு, உயரம் 5.3'' வயது 35, ஆசிரியை வேலை, நிரந்தரம், மாதச் சம்பளம் ரூ. 900. வீட்டு வேலைகள் நன்கு தெரிந்த பெண்ணிற்கு 45 வயதிற்கு மேற்படாத மணமகன் தேவை. உத்தியோகத்தில் உள்ளவர்கள், சொந்த சம்பாதி யம் உள்ளவர்களும் விண்ணப்பிக்கவும். தாரமி ழந்தவர்களும் விண்ணப்பிக்கலாம் உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 2024.

கம்மா நாயுடு நத்தேர வகுப்பைச் சார்ந்த வயது 20, உயரம் 5.3'' மாநிறம், 8-ம் வகுப்பு படித்த குடும்பப் பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த அரசாங்கத்தில் அல்லது தனியார் நிறுவனத்தில் வேலை பார்க்கும் மணமகன் தேவை. பெட்டி எண்: 2025.

வடமாள், காஸ்யபம், தமிழ் ஸ்மார்த்த பிராம ணன் வடாற்காடு 5.2'' தனியார் துறை, சம்பளம் ரூ. 400. மணமகளுக்கு அரசாங்க, தனியார்துறை கம்பெனி – பேக்டரியில் நிரந்தர வேலையிலுள்ள 33–44 வயது பிராமண மணமகன் தேவை. குழந்தைகள் இல்லாத இரண்டாம் கல்யாண மானாலும் சம்மதம். குடும்ப விவரத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2026.

'நர்ஸரி' படிக்கும் எனக்கும் பட்டம் பெற்று பாங்கு வேலை 29 வயது ஐயர் குடும்பம். என் அம்மாவுக்கும் அன்புத்துணையாக பண்புடைய ஒருவர் தேவை. ஒரு தம்பியோ, தங்கையோ இருந்தாலும் பரவாயில்லை. ஐயராக இருக்க வேண்டும். பெட்டி எண்: 2027.

வேளாளர், அசைவம் பி. எஸ்ஸி., 5.4'' நல்ல தோற்றம் அழகான 31 வயது பெண்ணுக்கு வரன் தேவை. அரசு பணிபுரியும் பட்டதாரி, தனித்தொழில், நிலக்கிழார், வியாபாரி சம்மதம். முதலியார் உட்பிரிவுகள் பாதகமில்லை. நல்ல முறை யில் திருமணம். பெட்டி எண்: 2028.

தமிழ் யாதவர் (இடையர்) தனியார் நிறுவனத் தில் சென்னையில் பணிபுரியும் மாத வருமானம் ரூ. 1200. சொந்த வீடு, 33 வயது (ஹஸ்தம்) வர னுக்கு சென்னைச் சுற்றுப்புறங்களில் தமிழ் யாதவ அழகான, பண்புள்ள கன்னிமையான குடும்பப் பெண் தேவை. பெட்டி எண்: 2029.

காஸ்யப கோத்திரம், ஆயில்ய நட்சத்திரம், ஐயங் கார், வடகலை, 32, 165, பி. எஸ்ஸி., பீ.ஜீ.டி. எம். எம்., மத்திய அரசு சார்புடைய உத்தியோகத் தில் ரூ. 1400. சம்பாதிக்கும் பையனுக்கு பட்டதாரியும், மத்திய – மாநில அரசு அல்லது வங்கியில் மாற்றலில்லாத (சென்னையில்) பணிபுரி யும் 25–28 வயதுடைய அழகும், நற்குணமும் நிறைந்த மணப்பெண் தேவை. விவரங்களுக்கு ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2030.

சின்ன செட்ல கோத்திரம், கோமுட்டிச் செட்டி யார் சமூகம் வயது 44, உயரம் 5'1 புதுநிறம். சொந்த வியாபாரம் மாதம் 1000 ரூபாய் வரு மானம் உள்ள தனிநபருக்கு வயது 30க்குள் அதே சமூகத்தின் பெண் தேவை. அன்பளிப்பு அதிகம் வேண்டாம். விருப்பம் உள்ளவர்கள் ஜாதகத்துடன் முழு விவரம் தெரிவிக்கவும். ஆர். ராமன், 181. மேலரத வீதி, நெல்லை–527 036.

Wanted suitable match, post graduate, aged below 30 years, employed as officer Bank / Railways / LIC drawing a salary of Rs. 2000/- above preferably belonging to North Arcot District for Tamil Iyer girl convent educated, B. Com (M. Com.) Athreya Gothram, Vadama, Aswini Star, 23 years height 158 cms, goodlooking, employed in a nationalised bank Madras City. Preferred less encumbrance. Apply to Box No: 2031 with biodata and horoscope details.

Alliance invited from well settled Iyengar groom, other brahmins no bar, around forty for girl 30 attractive vergin divorcee soo ı after marriage qualified for job. decent humble marriage. Box No: 2032.

Alliance wanted from post graduate Doctors, Engineers, C. A., Company Execu-

tive, fora girl Kaundinya, 25, 5-2" M.B.B.S., only daughter of a highly placed, Company Executive. Apply to Box No: 2033.

Alliance from qualified, well settled grooms for girl, Nalaidurpa Kasyapa Gothram 30, 5.5," fair, slim, young looking, B. A., L.L.B., earning Rs. 1,500/- in Bombay. Apply to Box No: 2034.

Solicited well placed groom for a S.S.L.C. domestically well trained, Telugu Velanadu bride of May 1953, Star, Kettai end of 3rd Padam - Subsect acceptable. Box No: 2035.

Proposals invited for Kasyapa Gothra Brahacharanam girl Thirtyone (Divorcee), passed S.S.L.C., Typewriting Higher, Shorthand Lower also an LIC Agent Seven years. Box No: 2036.

Alliance invited from parents of Tamil Iyer Brahacharanam Non-Sankriti well settled boys preferably Bombay based for a convent educated good looking Hastham Star, Central Govt. employed girl 211/2 years. 147 cms from decent family. please reply in detail with horoscope Box No: 2037.

Alliance invited for a Vadama Srivatsa girl aged 29: Star Pooram, B. Sc, M.B.B.S., Practising as a Doctor in a reputed Nursing Home. horoscopes invited from well-qualified bridegrooms preferably Doctor. Apply Box No: 2038.

Alliance invited from Lecturers/Doctors/ Engineers and other Professionals for a Postgraduate girl aged 23 daughter of intercaste parents - Father Brahmin, Parents Doctors. Box No: 2039.

Alliance for postgraduate, Iyer, Vadama, Bharadhwaja, Makam, slim, fair young looking girl 35, employed in decent untransferable job in Calcutta. Rs. 1600/- p. m. Prefers to work after marriage. subcaste within Brahmin community no bar. childless widower can also apply. decent marriage. Box No: 2040.

Alliance invited for a qualified college teacher employed in Bombay aged 33. (father Sourashtra mother Brahacharanam). wanted well qualified and decently employed brahmin Vegetarians. Preferably Bombay based. Apply with full details. Box No: 2041.

Wanted beautiful fair smart convent educated girl below 25 from Rsepectable family for Bank Officer Hindu 30, M. A. Rs. 3500/- p. m. Owning house in Madras, Caste Religion no bar. Apply with photograph. No dowry. girl main consideration. Box No: Box No: 2042.

Alliance invited from purely Vegetarian Pillai / Chettiar graudate girls for 30 years, Bank employed Saiva Chettiar Boy, B.Sc., B. Com., C.A.I.I.B., earning Rs. 1,800/- p. m., reply with photo early marriage. Box No: 2043.

Wanted Engineer/Doctor/graduate officer bridegroom aged 25 to 32 years settled in Bangalore for a Hindu Tamilian Adidravida Bride B.E. /23 years / 162 cms. / Rs. 2100/- employed as Engineer in a Public sector undertaking in Bangalore. Box No: 2044.

Wanted alliance for a girl (24) salary Rs. 625/- State Govt. employee, Vanniar, also seeking alliance her Brother (28) salary Rs. 1050/- Govt. of India Company Employee. Mutual alliance also preferable. Apply with full particulars. Box No: 2045.

Saurashtra bridegroom and bride wanted for a B. Com girl (17th Sept 1963) good looking age 21, 5.1" known Bharathanatyam, Kuchipudi, Veena, Saurashtra English, Hindi, Tamil, Telugu employed & aB. E. Boy (31st March 1962) Age 23, 5.7" working as Trainee Engineer in Larsen & Toubro Ltd., Bombay respectively. Desire mutual exchange. send horoscope family background with photo to Mr. J. Dwarakan, B. E., Supt. Engineer in Hindustan Shipyard Ltd., 45-57-14-A, Narasimha Nagar Visakhapatnam-530 024.

Vadagalai boy for goodlookng graduate girl 25, height 155 cms, Thiruvathirai, Kshadmarshana Gothram, early, decent marriage correspond with horoscope to Box No: 2046.

Alliance invited from well educated, fair, slim, Broad-minded, & cultured girl of 23/152 for well qualified Hindu Executive Language / Religion no Bar. No dowry. Knowledge of classical arts preferred. Box No: 2047.

Alliance invited for Brahmin Iyer (Brahacharanam - Tamil) graduate girl age 23, height 5.2" fair, domestically well trained correspondence from parents of well settled Brahmin Iyer boys (subsects acceptable) of age 27-30 with copy of boy's horoscope may please be sent to Box No: 2048.

Wanted goodlooking educated employed or well-placed unemployed Naidu girl for graduate Yadhava Naidu boy 30/160cms. salary 1600/- p. m. working in a reputed concern. (Madras.) Sub-sect no bar. Box No: 2049.

Wanted employed or well-educated bride for Bharadhwaja Madhva Brahmin youth 23/166, DEE owning property employed in Madras Telephones. Correspond with photo to Box No: 2050.

Wanted a bridegroom within 15 years age difference for a Madhva Gouthama Gothra girl aged 33 S.S.L.C., well trained in household work. Sub-sects no bar. Second marriage no bar. Correspond Box No: 2051.

Alliance invited for Brahacharanam, Kasiba boy, Thiruvonam, 30-170 cms in Telecommunications Gujarat based from parents of slim under graduate good looking girl below 25 preferably Central Govt/ Bank Employed. reply with horoscope & returnable photograph to Box No: 2052.

A young S. Indian Tamil Brahmin girl (28) recently widowed, desires remarriage with a respectable widower within (45) Apply Box No: 2053.

Wanted charming accomplished educated Tamil Yadhava Bride of good status for Fair Handsome Yadhava (M. A.; 27/165 Boy, sole heir to reputed rich Estate. Required Bride's Biodata and Horoscope. Box No: 2054.

Wanted suitable groom for convent educated, fair complexion Palghat Iyer Girl, 31, 163 cms employed at Kerala preferably Doctor Ashtasahariam Shadamarshana Gothram, Star Thiruvadhirai Subsects no bar. Box No: 2055.

Iyer bachelor, Naithruva Kasyapa Gothram, decently employed. 39 / 175 / P.G. / 3000; Amputee, using Artificial Limb; Quite healthy; seeks Brahmin bride of any Linguistic group; Divorcee / Widow without issue acceptable; Reply Box No; 2056;

நன்றாக படித்த வசதியுள்ள 30 வயது முஸ்லிம் விதவைப் பெண்ணுக்கு முஸ்லிம் சமயத்தைச் சேர்ந்த வசதி உள்ள படித்த மணமகன் தேவை. வேலையில்லாதவராயினும், மனைவியை இழந்தவராயினும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2057.

கௌசிக கோத்திரம் உத்திரட்டாதி வயது 26, M.A. இந்தியன் ஓவர்சீஸ் வங்கியில் ரு. 2500 சம்பளத்தில் ஆபீஸராக இருக்கும் பையனுக்கு நல்ல குடும்பப்பாங்கான மணமகள் தேவை. பெட்டி எண்: 2058.

கௌசிக கோத்திரம், பூரம் பி. எஸ்ஸி., வயது21 குடும்ப வேலைகள் நன்கு தெரிந்த அமரிக்கை யான பெண்ணுக்கு மணமகன் தேவை. பெட்டி எண்: 2059.

தொண்டை மண்டல தொண்டை கட்டிச் சைவ வேளாளர் பட்டதாரிப்பெண் மிருகசீரிஷம் நட்சத்திரம், 34 வயது. சென்னையில் அரசு நிறுவனத்தில் நிரந்தர பணி, மாதம் ரு. 1000 — சம்பளம் — அதே வகுப்பைச் சார்ந்த பட்டதாரி, உத்தியோகத்தில் உள்ள, வயது பொருந்திய மணமகன் தேவை. பெட்டி எண்: 2060.

'தென்னக ரயில்வேயில் பணிபுரியும் எஸ். எஸ். எல். ஸி. வரை படித்துள்ள காஜுலு பலிஜ நாயுடு – வகுப்புப் பெண்ணிற்கு அதே வகுப்பைச் சேர்ந்த, படித்த அரசு அலுவலகத்தில் பணிபுரியும், அதிகமான சீரோ, வரதட்சிணையோ எதிர்பார்க்காத சுமார் 35–38 வயதுள்ள மணமகன் தேவை. பெட்டிஎண்:2061

23 வயது எஸ். எஸ். எல். ஸி. படித்து டைப்ரைட்டிங் ஹையர் பாஸ் பண்ணி, தற்சமயம் வேலையில்லாத முதலியார் பெண்ணுக்கு நிரந்தர வேலையிலுள்ள கௌரவமான குடும்பத்தில் உள்ள வரன் தேவை. முதலியாரில் எப்பிரிவும் சம்மதம். உயரம் 150 செ.மீ. நிறம் – மாநிறம். ஜாதகத்துடன் அணுகவும். பெட்டி எண்: 2062.

வடகலை அய்யங்கார், கௌண்டின்ய கோத்திரம், உத்திரட்டாதி, பிறந்த தேதி: 21.2.1958. பி. யூ. ஸி. டைப்ரைட்டிங்—ஆங்கிலம் & தமிழ் (லோயர்) தேர்ச்சி பெற்ற குடும்பப்பாங்கான பெண்ணுக்கு நல்ல படிப்பும், நல்ல உத்தியோகத்திலுமுள்ள மணமகன் தேவை. சீர்வரிசைகள் கௌரவமாகச் செய்து தரப்படும். தென்கலை அய்யங்காரும் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 2063.

மத்வ பிராமணர் ஹரிச்ச கோத்திரம் அஸ்வினி நட்சத்திரம் பி.யு.ஸி. படித்த 25 வயதுப் பெண்ணிற்கு நிரந்தரமாக அரசிலோ, அல்லது பொது அல்லது தனியார் நிறுவனத்தில் பணியாற்றும் தகுந்த வரன் தேவை. பெட்டி எண்: 2064.

விவாகரத்து செய்யப்பட்டவர், குழந்தையில்லாதவர், பி. காம்., வயது 30 சித்திரை நட்சத்திரம், துளுவ வேளாளர். பெட்டி எண்: 2065.

எம். ஏ. படித்து மத்திய அரசு அலுவலகத்தில் ரு. 1200/- சம்பளம் பெறும் மாநிறமுடைய 28 வயது இந்து வள்ளுவர் மணமகளுக்கு அதே இனத்தில் அல்லது இந்துவின் மற்ற பிரிவிலிருந்து குறைந்த பட்சம் ஒருடிகிரி வாங்கி நல்ல உத்தியோகத்தில் உள்ள 31–35 வயதுடைய மணமகன் தேவை. மணமகன் குடும்பப் பொறுப்பு அதிகமில்லாதிருப்பது நலம். மணமகன் தாய் இறந்து உறவினரின் பராமரிப்பில் இருப்பவர். பெட்டிஎண்:2066

Edited, Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543)
Assistant Editor: Manjula Ramesh.



உங்கள் புடவைக் கேற்ற பிளவுஸ் துணிகளை
நீங்களேதான் தேர்ந்தெடுக்க விரும்புவீர்கள்?
இதோ உங்களுக்கு:

புதுமைப் படைப்புகள்!

# லக்ஷ்மியின் பிளவுஸ் துணிகள்

- கோல்ட்மிஸ்ட் : 100% பாலியெஸ்டர்.
- ஸ்கைலைன் : 80% பாலியெஸ்டர் 20% காட்டன்.
- ப்ரியா : 2/120s H.T.—2X2 காட்டன்

அழகு, நளினம், அணிவதில் மென்மை.

எங்கள் லக்ஷ்மி மில்ஸ் ஷோரூம்களிலும் மற்றும்
எங்கள் வாடிக்கைக் கடைகளிலும் கிடைக்கும்.

## பெண்மைக்கு அழகு ஊட்டும்.





லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்

ADWAVE/LMC/28.

# இதோ வந்துவிட்டது! சமைப்பதற்கென்றே பிரத்யேகமாக உருவாக்கப்பட்ட எவர்சில்வர் பாத்திரங்கள்!

# அக்ஷயா!








## விசேஷ அலுமினியம் அடிப்பாகம் கொண்ட முற்றிலும் வித்தியாசமான எவர்சில்வர் பாத்திரங்கள்!

**105 நாடுகளில் போற்றப்படும் நூதன பாத்திரங்கள் இப்போது முதல் முறையாக இந்தியாவில் கிடைக்கின்றன!**

உலகப் புகழ்பெற்ற பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ஒரு நிறுவனத்தோடு கூட்டு சேர்ந்து தயாரிக்கப்படும் அக்ஷயா பாத்திரங்கள் சர்வதேசத் தரத்தைக் கொண்ட ஓர் அபூர்வ வடிவமைப்புடையன.

**உலோக உறை (Cladding) என்றால் என்ன?**

உலோக உறையென்பது மூன்று தகடு அமைப்பைக் கொண்டதாகும். இரு எவர்சில்வர் தகடுகளுக்கிடையே ஒரு தடித்த அலுமினியம் தகடு பொருத்தப்படுகிறது.

**அக்ஷயா பாத்திரங்கள் மிக விரைவாக சமைக்கின்றன. சமைக்கும் உணவு தீய்ந்தோ அல்லது அரைவேக்காடாகவோ போகாது!**

அக்ஷயா பாத்திரங்கள் சூட்டைச் சீராகப் பரப்பி உணவைத் தீயாமல் ஒரே சீராக சமைக்கின்றன.

இடையில் அலுமினியத் தகடு பொருத்தப்பட்டிருப்பதால் அக்ஷயா பாத்திரங்கள் மிக விரைவாகச் சூடேறுகின்றன. இக்காரணத்தால் போதுமான சூடேறியதும் நீங்கள் அடுப்புச் சூட்டைக் குறைத்துவிடலாம். ஆயினும் பாத்திரத்தின் சூடு குறையாது! இதன்மூலம் நீங்கள் ஏறக்குறைய 40 சதவீதம் எரிபொருளைச் சேமிக்கலாம்!

**எளிதான சமையல்! ஊட்டமான உணவு!**

உறுதியான, சூடேறாத 'பேக்லைட்' கைப்பிடிகள் பாத்திரங்களை எளிதாகவும் நழுவாமலும் ஏற்றி இறக்க மிக உகந்தவை.

ஆறிய சமையலை மறுபடியும் சூடாக்கச் செய்யவோ அல்லது குளிர் சாதனப் பெட்டியில் வைத்து பிறகு உபயோகிக்கவோ அக்ஷயா பாத்திரங்கள் மிக ஏற்றவை.
பல வருடங்கள் உபயோகித்தாலும் இப்பாத்திரங்களின் பளபளப்பு மங்கவே மங்காது!

இன்றே அக்ஷயா பாத்திரங்களை உங்களுக்கு அருகாமையிலுள்ள அக்ஷயா டீலர் கடையில் தேர்ந்தெடுங்கள்!

**akshaya**

பிரான்ஸ் நாட்டு
கூட்டுறவோடு தயாரிக்கப்பட்டது!
பத்து வருட உத்திரவாதம்!

ஓரியண்டல் அப்ளையன்சஸ்
8, விக்டோரியா கிரசன்ட் சென்னை 600 105.

Sista's - OA.270.84 D

# மதுரை கோட்ஸ் வழங்கும் காம்ளிமெண்ட்ஸ் மூலம் நீங்கள் மெலிந்த கைகளைப் பெறலாம்.



கைகள் மெலிந்து விளங்க பயிற்சி செய்வது ஒரு வழி. அதைவிட சாமர்த்தியமான மற்றொரு வழி இருக்கிறதே.

முதலில் நீங்கள் அணியும் ப்ளவ்ஸைப் பாருங்கள். நீங்கள் ப்ளவ்ஸ் அணியும் விதம், கை நீளம் இவற்றால் கைகள் ஒல்லியாக தோற்றமளிக்கக் கூடும். கைகள் இயற்கையாகவே ஒல்லியாக இருந்தால் 'கையில்லாத' ப்ளவ்ஸை அணிந்து கைகளின் அழகை வெளிப்படுத்தலாம்.

ஆனால் கைகள் மெலிந்து இல்லாவிடில், முழங்கை வரை நீளமான ப்ளவ்ஸை அணியவும். இறுக்கமான ப்ளவ்ஸ் அணியாதீர்கள்.

கைகள் மெலிந்து காட்சியளிக்க, உங்கள் கழுத்தும், தோள்பட்டையும் சற்றே தெரியட்டும். 'U' கழுத்து மற்றும் அகலமான 'V' கழுத்து உடைய ப்ளவ்ஸை அணியவும். கழுத்தை ஒட்டி ஆரம்பமாகும் ப்ளவ்ஸ், உங்கள் கைகளை நீளமாகக் காட்டுகிறது. கைகள் மேலும் நீண்டதாய் காட்சிதர அதிக அகலமில்லாத, எடுப்பான, கலர் 'பைப்பிங்' வைத்த ப்ளவ்ஸை அணியலாம்.

உங்கள் கைகளை அலங்கரிக்க, அகலமான வெள்ளி வளையலையோ கனமான கலர் வளையலையோ ஒற்றையாக அணியவும் (புடவையின் கலருடன் வளையல் கலர் மாறுபட்டதாகத் திகழ வேண்டும்). இதனால் உங்கள் கைகள் மேலும் நீளமாயும், மெலிந்தும் தோற்றமளிக்கும்.



ஆம், நீங்கள் அடுத்து வாங்கும் ப்ளவ்ஸ் துணி மதுரை கோட்ஸ் வழங்கும் காம்ப்ளிமெண்டாகவே இருக்கட்டும். அது அழகான நிறங்களில், நல்லதரத்துடன் திகழ்வதை உணர்வீர்கள். 70-80 செ.மீ. காம்ப்ளிமெண்ட்ஸ் உங்கள் தோற்றத்தை மேலும் அழகாய் காட்டும். டூ-பை-டூ ரூபியா காட்டன், பாலியஸ்டர் மற்றும் பாலியஸ்டர் இழைகலந்த வகைகளில் இதுவே கச்சிதமான ப்ளவ்ஸ் துணி.

எல்லா முக்கிய துணிக் கடைகளிலும், மேட்சிங் சென்டர்களிலும் காம்ளிமெண்ட்ஸ் என்று கேட்டு வாங்குங்கள்.

**Complements**

மதுரை கோட்ஸ் வழங்கும் ப்ளவ்ஸ் துணி,
ஒவ்வொரு புடவைக்கும் ஒரு இணையான துணை.

**Madura Fabrics**
மதுரை கோட்ஸின் ஒரு தரமான தயாரிப்பு.

Rediffusion/MF/2541i TM

எத்தனை வித வெளுப்பு.
உடையணிகளிலே.
ஸண்டே வெளுப்பு.
சகல தின வெளுப்பு.
சடுகுடு வெளுப்பு.
சதிராடும் வெளுப்பு.
ஜோலி வெளுப்பு.
ஜாலி வெளுப்பு.
சுழிக்கும் பருவ வெளுப்பு.
சொக்கும் வெளுப்பு.
பார்த்து மலைக்கும்
கேர்த்தி வெளுப்பு.
எவ் வெளுப்புக்கும்
பூர்த்தி வெளுப்பு
ராணிபால் ஜொலிப்பு.
வெளுப்பு உடைகளுக்கு
சிறப்புக் கோலம்
ராணிபால் மூலம்.




ராணிபால்— பருத்தித் துணிகளுக்கு.
ராணிபால் S—ஸின்த்தெட்டிக் துணிகளுக்கு.

மஃபத்லால் நிறுவனத்திலிருந்து வரும் லன்கிரேல் தயாரிப்பு—
உற்பத்தியாளர்கள் : இந்தியன் டைஸ்டஃப்ஸ் இண்டஸ்ட்ரீஸ் லிட்.






# குளிரை சுகமாக்கிட இதமான வழிகள்—
# காட்பரிஸ் டிரிங்கிங் சாக்கலேட்

**சாக்கலேட்**
**சிலில்**

ஒரு கப் சூடான பாலிலே 3 தேக்கரண்டி அளவு காட்பரிஸ் டிரிங்கிங் சாக்கலேட் கலக்கவும். நன்றாகக் கலக்கியபின் பருகுவதற்கு வழங்கவும். அதுதான் சூடான சாக்கலேட் சிலில்—குளிரை கண்பறுக்கும் குதூகலச் சுவை.

**சாக்கலேட்**
**ஸ்விர்ல்**

3 தேக்கரண்டி அளவு காட்பரிஸ் டிரிங்கிங் சாக்கலேட்டை சூடான பாலில் நன்றாகக் கலக்கவும். அதன்மீது நல்ல தேனையும் சேர்த்திட்டால் இனிமையான சாக்கலேட் ஸ்விர்ல் தயார். பனி காலத்திற்கு கனிவான வரவேற்பு.

**சாக்கலேட்**
**நட்டி**

மூன்று தேக்கரண்டி அளவு காட்பரிஸ் டிரிங்கிங் சாக்கலேட்டை ஒரு கோப்பை சூடான பாலில் கலக்கவும். முந்திரி, பாதாம் பருப்புக்களை துண்டுகளாக்கி அதன்மீது தூவவும். ஆகா! அபாரமான சாக்கலேட் நட்டி தயார். இல்லத்திற்கு உங்களை இனிதாக இழுத்திடும் சூடான சுவை.

**சாக்கலேட்**
**ஸ்பைஸ்**

மூன்று தேக்கரண்டி அளவு டிரிங்கிங் சாக்கலேட்டை ஒரு குவளை சூடான பாலிற் கலக்கவும். அத்துடன் ஏலக்காய், ஜாதிக்காய், லவங்கப் பட்டை இவைகளைப் பொடி செய்து சேர்க்கவும். காவில் நீரும் சாக்கலேட் ஸ்பைஸ் தயார். குளிரையும் சூடாக்கிடும் நெஞ்சுக்கினிய பானம்.

காட்பரிஸ் டிரிங்கிங் சாக்கலேட் 200 கிராம் டின்னிலும் கிடைக்கிறது.

REGISTERED No. TN MS (S) 231
Registered as a Newspaper in Sri Lanka











அமிர்தாஞ்சன்
அறியும்
தலைவலியின்
கடுமையை



எளிதாகப் பூசிட ஏற்ற மிருதுவான
அடிப்படை பொருள் கொண்டது.




புத்தம் புதிய, கார்க்கினாலான உள் அமைப்பு
மருந்தின் சக்தியைப் பாதுகாக்கிறது

# அமிர்தாஞ்சன்

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது.
தீய பின்விளைவுகள் இல்லாதது.





1984 ஒலிம்பிக் போட்டி
இந்திய விளையாட்டு
வீரர்களுக்கு பெயின்-பாம்
சப்ளை செய்ய அங்கீகாரம்
பெற்றவர்கள்.

OBM 8703 TM/A